ஜே. கிருஷ்ணமூர்த்தி

# ஒரே
# ஒரு
# புரட்சி

தமிழில் : ப்ரேமா ஸ்ரீநிவாஸன்

நர்மதா பதிப்பகம்

*Ore Oru Puratchi* – J. Krishnamurti
Tamil Translation of *The Only Revolution*
Translated by Prema Srinivasan
Authorized by Krishnamurti Foundation India


Vasanta Vihar,
64 - 65, Greenways Road,
Chennai – 600 028.
Tel : 493 7803 / 493 7596
Email : kfihq@md2.vsnl.net.in

First Edition : 1996
Second Edition : November 2001

Published by :
Narmadha Pathipagam,
16/7, Rajabather Street,
Pondy Bazaar, T. Nagar,
Chennai – 600 017.
Tel : 828 0466 / 825 3609

Price : Rs. 80.00
Pages : 264
Paper Used : J.K. Maplitho 15.5 Kg.

D.T.P. Execution at :
Muthu Graphics, Chennai – 600 015.

Printed at :
Malar Printers, Chennai – 600 034.

# உட்பொதிவு

ஆந்திரப் பிரதேசம், மதனப்பள்ளியில் 1895-ஆம் ஆண்டு, பண்டை வழி வந்த ஓர் அந்தணர் குலத்தில் ஜே. கிருஷ்ணமூர்த்தி தோன்றினார். ப்ருஹ்ம ஞான சபையின் (தியஸாஃபிகல் ஸொஸைட்டி) அந்நாள் தலைவர் திருமதி. டாக்டர் அன்னிபெஸண்ட் அவரை எடுத்து ஆதரவுடன் தன் மகனென வளர்த்தார். தியஸாபிஸ்ட்கள் அனைவரும் ஒரு உலக குரு தம்மிடையே தோன்றுவாரென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த அவதாரத்தை தாங்கும் நல்லதொரு பாத்திரமாக ஜே. கிருஷ்ணமூர்த்தியைக் கருதினர்.

தவிர 1911-ஆம் ஆண்டில் அத்தகைய மகானை வரவேற்க 'ஆர்டர் ஆப் தி ஸ்டார்' என்ற நிறுவனம் ஒன்றை ஏற்பாடு செய்திருந்தனர். அவ்வாண்டே மெய்நெறி முறைகளில் அவரை ஆயத்தம் செய்யவும், தனிப்பட்ட முறையில் கல்வியளிக்கவும் அவர் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டார்.

1922-ஆம் ஆண்டில் அவருக்கு சில ஆன்மீக அனுபவங்கள் ஏற்பட்டன. இதனால் அவர் வாழ்வின் அடிப்படையிலும், உலகத்தை காணும் விதத்திலும் பெரியதொரு திருப்பம் உண்டாயிற்று.

சில ஆண்டுகளுக்குப் பின்னர் தன் மீது திணிக்கப்பட்ட 'உலக குரு' என்ற பதவியையும், அதற்கென்று ஒதுக்கப்பட்ட சொத்து, செல்வம் அனைத்தையும் ஒருமிக்கத் துறந்தார். 1929-ஆம் ஆண்டில் சரித்திரப் புகழ்பெற்ற பேச்சொன்றில் எத்தகைய மெய்நெறி நிறுவனங்களாலும் மனிதனை மெய்நிலைக்கு அழைத்துச் செல்ல முடியாது எனக் கூறினார்.

மேலும், ''மெய் என்பது வழியற்ற ஒரு வயல், அதை அடையப் பாதை ஒன்றுமில்லை, அவ்வழியை எம்மதமும், எந்த சமூகமும் காட்ட இயலாது... உண்மை எல்லையற்றது, கட்டுப்பாடு ஒன்றும் இல்லாதது, எந்நெறி மரபும் அதற்கு வழி காண முடியாது...; மற்றும் மனிதனை நயம் செய்து

அவனை வழியொன்றைப் பின்பற்றுமாறு நிறுவனம் ஒன்றும் அமைக்கலாகாது... மனிதனை முழுமையாகவும், எவ்வித கட்டுப்பாட்டிலிருந்தும் விடுவிப்பதே என்னுடைய ஒரே குறிக்கோள்'' என்றும் கூறினார்.

பொதுக்கூட்டங்கள், தனி மனிதருடன் பேட்டிகள், பேச்சுகள், உரையாடல்கள், புத்தகங்கள் எழுதுவது என்று பலவாறு மனித இனத்துடன் உறவுகொண்டு (ஐம்பதாண்டுகளுக்கும் மேலாக, பிப்ரவரி 17-ஆம் தேதி 1986 வரை) அவர் இறக்கும்வரை உலக முழுவதும், பல நாடுகளுக்கு அயராமல் பயணம் செய்தார்.

மனிதனை தன்னுடையத் துயரத்தை நேருக்கு நேர் காண வைக்கவும், அவனை கட்டுவிக்கும் தளைகளிலிருந்து விழித்தெழச் செய்யவும் தன் வாழ்நாட்களை அர்ப்பணித்தார். மெய்நெறி போதிப்பவர்களின் முன்னணியில் வைத்து உலகம் அவரைப் போற்றியது. ஒவ்வோர் இடத்திலும், பல மாதங்கள் தங்கியபோதிலும் எந்நாட்டுக்கும், எந்த மதத்தினருக்கும் அவர் சொந்தம் இல்லை.

கலிஃபோர்னியா ஓஹாய் பள்ளத்தாக்கிலும், ஸ்விட்ஸர் லாந்தின் ஸானென்னிலும், இங்கிலாந்தின் பிராக்வுட் பார்க்கிலும், இந்தியாவின் பல நகரங்களிலும் அவருடைய உரையைக் கேட்க பல்லாயிரம் மக்கள் கூடினர். தத்தம் மனநிலையைக் காண வைக்கவும், மனிதனின் சிக்கல்களுக்கு தீர்வு காணவும், மனித உள்ளத்தின் இயற்கை நிலையையும், உலகப் படைப்பின் சிறப்பையும் அறிந்து கொள்ள வேண்டி அவ்வுரையைக் கேட்க வந்தவர்களிடம், மிகப் பொறுமையுடன் அன்பு கொண்டு கேள்விகளை கேட்டு, அவர்களின் மன நிலையை நன்குணரச் செய்வார்...

– ப்ரேமா ஸ்ரீநிவாஸன்



## முன்னுரை

'**கி**ருஷ்ணஜி' - பெயரை நினைத்ததுமே நம் முன் வருவது இவரது எளிமையும், இனிமையும். இந்த மாமனிதரிடம் இந்தப் பண்புகள் இயற்கையில் தாமாகவே - ஒரு மலரின் மணம் போல் அமைந்தவை; நிச்சயமாக அவை பயின்று வந்தவை அல்ல.

தமது பெற்றோருக்கு எட்டாவது குழந்தையாகப் பிறந்ததால் இவருக்கு அந்தக் கண்ணனின் பெயரைச் சூட்டினார்கள் போலும்! அந்தக் கண்ணபிரான் போலவே இவருக்கும் ஆவினங்களிடம் ஈடுபாடு இருந்திருக்கிறது.

''நான் யாருக்கும் ஆசான் இல்லை; எனக்கு எவரும் சீடரும் இல்லை'' என்று இவர் சொன்னபோதிலும், தட்சிணாமூர்த்தி குருவைப் போல், இவர் மௌனம் காத்தபோதும்கூட உபதேசம் பெற்றவர், மன அமைதியுற்றவர் பலருண்டு.

இவரது நேரிய நடையும், மென்மையான பேச்சும், ஆழ்ந்த கண் நோக்கும் மிகவும் அழகானவை. இத்தகைய அம்சங்கள் மட்டுமே கூடப் பலரை இவர்பால் ஈர்த்திருக்கின்றன. தூங்கும் குழந்தையின் குறுமுறுவல் போல், தாமரை மலரின் மென்மையான மணம் போல், மாலைக் காற்றின் வருடலில் குழைந்தாடும் நெற்பயிர் போல் இவரது நடையுடை பாவனை எதிலும் எப்போதும் ஒரு நளினம் இருக்கும். மார்கழி மாதத்து இளங்காலைப் போதில் புல்லின் நுனியில் தூங்கும் பனித்துளியின் தூய்மையை இவரிடம் எப்போதும் காணலாம்.

விஞ்ஞான வளர்ச்சியில் இவருக்குப் பிரமிப்பும், ஈடுபாடும் இருந்தது. அதே சமயத்தில் அந்த விஞ்ஞான மோகம் மனிதநேயத்தையும், மெய்ஞ்ஞான வளர்ச்சியையும் சாப்பிட்டுவிடக் கூடாதென்பதில் கருத்தாக இருந்தார்.

மாபெரும் அறிஞர்கள், அரசியல் தலைவர்கள், விஞ்ஞானிகள், தொழிலதிபர்கள் என்று பல தரப்பட்ட

வர்களிடம் பலபல சிக்கலான விஷயங்கள் பற்றித் தீவிரமாக விவாதித்திருக்கிறார் என்று தெரிகிறது. பள்ளிக் குழந்தை களிடமும், இளைஞர்களிடமும், சாதாரண மக்களிடமும் கூட அதே அளவு ஈடுபாட்டுடன், உவகையுடன் உரையாடு வார் என்பதுதான் அவரது மேன்மை.

இசையிலும், நமது தொன்மையான வேதங்கள், உபநிஷத்துக்கள், கலாசாரம் இவற்றிலும் கிருஷ்ணஜிக்கு ஆர்வம் கலந்த ஈடுபாடு உண்டு. சென்னை வசந்த விஹாரில் பல முறைகளும், இங்கிலாந்தில் ப்ராக்வுட் பார்க்கில் ஒரு முறையும் கிருஷ்ணஜியின் திருமுன் பாடுவதற்கு எனது மனைவி எம்.எஸ். சுப்புலக்ஷ்மிக்கு பாக்கியம் கிடைத் திருந்தது. அந்தச் சந்தர்ப்பங்களில் கள்ளம் கபடமற்ற குழந்தை போல், தாய்ப்பசுவின் மடியில் பாலருந்தும் கன்று போல் ஆர்வமுடன் இவர் அமர்ந்து கேட்பதைப் பார்ப்பதே ஓர் அனுபவமாயிருக்கும்.

எதிலும் பற்றேயில்லாது தாமரையிலைத் தண்ணீர்த் துளி போல் அவர் வாழ்ந்திருந்தாலும் – 'எதிலும் எல்லோ ருக்கும் 'தன்னலமற்ற' பற்று இருக்க வேணும்' என்று எப்போதும் சொல்வார்.

ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் கிருஷ்ணஜியைப் பற்றிக் குறிப்பிடும்போது, ''அவர் எல்லாவற்றையும் கடந்தவர்'' என்று கூறியதை நாங்கள் நேரில் கேட்டிருக்கிறோம். அந்த மஹாபுருஷரைப் பற்றி எண்ணுவதும், எழுதுவதும், படிப்பதும் அனைவருக்கும் நல்லது.

வாழ்க்கையையும், வாழ்வின் தத்துவங்களையும் ஒரு புதிய கோணத்தில் பார்த்தும், மற்றவர்களைப் பார்க்கச் சொல்லியும் எண்ணற்ற பேரைச் சிந்திக்கச் செய்த இந்திய ஞானிகளில் கிருஷ்ணஜியும் ஒருவர் – மிக முக்கியமான ஒருவர்.

– சதாசிவம்



## இந்தியா - 1

உலகிலிருந்து தப்புவதற்கு தியானம் ஒரு வழியன்று. தன்னைத் தனிமையாக்கிக் கொண்டு 'தான் ஒன்றே' என்ற ஒரு சூழலை ஏற்படுத்தும் செயலுமன்று. உலகையும், அதன் இயல்புகளையும் நன்கு புரிந்துகொள்வதே தியானம். ஊண், உடை, கூரை, இன்பம் அதையொட்டிய பெருந்துன்பம் இவற்றைத் தவிர்த்து உலகம் நமக்கு அளிப்பது ஒன்று மில்லை.

உலக வாழ்க்கையிலிருந்து வெளியே உலாவுவது தியானமாகும். இதற்காக நாம் முற்றிலும் வெளி ஆளாக இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் 'உலகம்' என்பதன் பொருள் விளங்கும். அதுவே விண்ணும் மண்ணும் தரும் அழகின் நிலையான தன்மை. அப்பொழுது அன்பு என்பது இன்பமாகாது. இக்கட்டான நிலை, முரண்பாடு, தன் நிறைவேற்றம், திறமையின் இறுமாப்பு ஆகிய இவை நீங்கியபின் உள்ளதே இவ்வன்பின் செயல்.

தோட்டத்தை நோக்கியது அவ்வறை. சுமார் முப்பது, நாற்பது அடிகளுக்குக் கீழே அகன்ற ஆறு. சிலருக்கு மிகத் தூய்மையாயும், மற்றோருக்கு அழகிய விரிந்த நீர்ப்பரப்பாய் வானத்திற்கும், காலைப்பொழுதின் எழிலுக்கும் உகந்ததாய் இருந்தது. மறுகரையிலுள்ள கிராமத்தையும், புதிய கோதுமைப் பயிர்களையும், பரந்த மரங்களையும், காலை வெள்ளியையும், மரங்கள் மீது எழும்பி வரும் சூரியனையும் நாம் இவ்வறையிலிருந்து பார்க்கலாம். ஆறு பரிதியின் பொன்னொளிப் பாதையாக மாறியது.

இரவில் அவ்வறை மிக இருண்டதாக இருந்தது. அதன் பெரிய சாளரம் தெற்கு வானம் முழுவதையும் காட்டியது. சிறகுகளைப் படபடத்தவாறு பறவையொன்று அவ்வறைக்குள் வந்தது. விளக்கைப் போட்டுப் பார்க்கையில் அப்பறவை கட்டிலுக்கடியில் இருந்தது. ஓர் ஆந்தை, சுமார் ஒன்றரை அடி உயரம், மிகப் பரந்த கண்கள், அச்சந்தரும் வகையில் கடுங் கூர்மையான அலகு. ஒருவரையொருவர் மிக நெருக்கமாக உற்று நோக்கினோம். மனித வாடையையும், விளக்கின் வெளிச்சத்தையும் கண்டு ஆந்தை அச்சங்கொண்டது. கண் கொட்டாமல் உற்று நோக்கிய பொழுதும் தன் உயரத்தையும், கண்ணியத்தையும் சிறிதும் இழக்கவில்லை. கொடுமையான நகங்கள், இலேசான இறக்கைகள், உடம்புடன் ஒட்டிய சிறகுகள். அதைத் தொட்டுத் தடவ ஓர் எண்ணம். ஆனால், பறவை அதற்கு இடங்கொடுக்காது. ஆகவே விளக்கை அணைத்தோம். சிறிது நேரம் அமைதி. தொடர்ந்து சிறகுகளின் படபடப்பு. முகத்தின் மேல் அக் காற்றை உணர முடிந்தது. பறவை சாளரத்தின் வழியே பறந்து சென்றது. திரும்பி வரவும் இல்லை.

அது பழமையான கோவில். மூன்றாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்று கூறினார்கள். மிகைப்படுத்திக் கூறுவது மனிதனின் வழக்கமே. ஆனால், உண்மையிலேயே பழமையானதுதான்; புத்தர் பெருமானின் கோவில் – எழுநூறு ஆண்டுகளுக்கு முன் ஹிந்து கோவிலாக மாறி அவ்விடத்தில் ஒரு ஹிந்து கடவுளின் உருவம் பதிக்கப் பெற்றது. உள்ளே மிகவும் இருட்டு. ஒரு விசித்திரமான சூழ்நிலை. அழகான வேலைப்பாடுடைய தூண்கள் கொண்ட பெரிய கூடங்கள். வெளவால், துறிஞ்சல்களின் நாற்றம் சாம்பராணிப் புகையுடன் கலந்து வந்தது.

தொண்டர்கள் குளித்துக் கைகூப்பியவாறு, பளிச்சிடும் பட்டாடைகளால் அலங்கரித்த உருவங்கள் முன் கீழே விழுந்து வணங்கி பிரகாரங்களைச் சுற்றிக் கொண்டிருந்தனர்.

பூசாரி ஒருவர் கர்ப்பகிரகத்தினுள் நல்ல உச்சரிப்புடன் ஸ்ம்ஸ்க்ருதத்தில் ஓதுவது செவிக்கு இனிதாக இருந்தது. பரபரப்பு இல்லாமல் அச்சொற்கள் எளிதாகவும், நேர்த்தியாகவும் உள்ளாழ்ந்தும் வெளிப்பட்டன. குழந்தைகளும், இளைஞர்களும், வயதான பெண்மணிகளும் அங்கே இருந்தனர். உத்தியோகஸ்தர்கள் மேற்கத்திய உடைகளை விட்டு வேஷ்டி அணிந்து மேலாடை இல்லாமல் கைகூப்பிய வண்ணம் மிகுந்த பக்தியுடன் அமர்ந்தவாறும், நின்றவாறும் இருந்தனர்.

நீர் நிறைந்த குளம் பல படிகளைக் கொண்டது. பலர் தூய்மையாகக் கருதும் குளம். சுற்றிலும் வேலைப்பாடமைந்த தூண்களைக் கொண்ட தாழ்வாரம். தூசும், ஒலியும், வெய்யிலும் மிகுந்த சாலையிலிருந்து நுழைந்ததும் அக்கோவில் நிழல் உடையதாகவும், அமைதியாகவும் தென்பட்டது. மெழுகுவத்திகளும், மண்டியிட்ட மனிதர்களும் அங்கில்லை. கோவிலைச் சுற்றி தோத்திரங்களால் உதடுகளை அசைத்தவாறே செல்லும் வழிப்போக்கர் மட்டுமே அங்கு இருந்தனர்.

அன்று பிற்பகல் என்னைக் காண ஒருவர் வந்தார். தமக்கு வேதாந்தத்தில் நம்பிக்கை இருப்பதாகக் கூறினார். அவர் ஆங்கிலம் பேசிய விதத்திலிருந்து நல்லதொரு பல்கலைக் கழகத்தில் படித்தவரென்று தெரியவந்தது. கூர்மையான அறிவுள்ளவர். முந்நாளில் நல்ல வருவாயையுடைய ஒரு பெரிய வக்கீலாக இருந்ததாக அறிய முடிந்தது. கூர்ந்த கண்களால் நம்மை எடைபோடுபவராகவும், ஒருவிதத் தவிப்பு உள்ளவராகவும் தென்பட்டார். மேற்கத்திய மதங்கள் உள்பட பலவும் படித்து அறிந்தவராகக் காணப்பட்டார். நடுத்தர வயதினர். ஒல்லியான உயர்ந்த தேகம், பல வழக்குகளை வெற்றி கண்டதின் பெருமிதம் அவரிடம் காணப்பட்டது.

''நீங்கள் பேசுவதைப் பலமுறை கேட்டிருக்கிறேன். நீங்கள் கூறுவது கலப்படமற்ற வேதாந்தமே. நீங்கள் கூறும்

விதத்தில் இந்நாளுக்கு ஏற்றதாக இருக்கிறதென்றாலும், பொருள் பண்டைப் பரம்பரையேதான்'' என்றார். ''நீங்கள் வேதாந்தம் என்று எதைக் குறிக்கிறீர்'' என்று நாம் வினவினோம். அவர் கூறியதாவது : ''ஐயா, நாங்கள் பிரஹ்மம் ஒன்றே என்றும், அதுவே இவ்வுலகத்தையும், அதனுடைய மாயையான தோற்றத்தையும் படைக்கிற தென்றும், தவிர ஒவ்வொரு மனித உள்ளத்தில் உள்ள ஆத்மாவும் பிரஹ்மமே என்றும் அறிகிறோம். எவ்வாறு கனவிலிருந்து விழித்து இந்நினைவு உலகத்திற்கு வருகிறோமோ அவ்வாறே, அன்றாட உலக நினைவிலிருந்து விடுபட வேண்டும். கனவு காண்போன், முழுமையான கனவு உலகைப் படைக்கிறான். அதுபோன்றே தனி மனிதன் ஒவ்வொருவனும் முழுமையான, தன் உருவான உலகையும், மற்ற மனிதர்களையும் உருவாக்குகிறான், காண்கிறான். ஐயா! நீர் அவ்வாறு கூறாவிட்டாலும், கருத்து அதுவே. ஏனெனில், நீர் பெருமளவில் வெளிநாடுகளில் வசித்து வந்தாலும் இந்நாட்டில் பிறந்து வளர்ந்து இப்பாரத மண்ணின் பண்பாட்டில் ஊறியவரே. நீர் ஒப்பினும் ஒப்பாவிட்டாலும் உம்மைப் படைத்த நாடு பாரத நாடு. நீரும் இம்மண்ணின் ஒரு பகுதியே. உம் மனமும் இந்நாட்டுடையதே. உம்முடைய செயல்களும், பேசும் பொழுது ஆடாது அசையாது சிலை போன்ற வடிவமும், மேலும் கூறப் போனால் உம் உருவமும் இப்பண்டை நாட்டின் வழிமுறையிலேயே அமைந்துள்ளன. உம்முடைய போதனையும் தொன்றுதொட்டு நம் முன்னோர் போதித்த உண்மையின் தொடர்ச்சியேயாகும்.''

இப்போது இந்தப் பேச்சாளர் இந்தியரா, இந்திய மரபைச் சேர்ந்தவரா, இந்தியப் பண்பாட்டில் கட்டுண்டவரா என்ற கேள்விகளைச் சற்றே ஒதுக்கி வைப்போம். முதலாவதாக அவர் எந்நாட்டிற்கும் உரியவரன்று. அவர் அந்தண குலத்தில் பிறந்திருந்தாலும் அதற்கும் சொந்தமன்று. நீர் எந்த மரபின் எல்லைக்குள் அவரைத் திணிக்க நினைக்கிறீரோ அவை

அனைத்தையும் அவர் மறுக்கிறார். அவர் தன் போதனை களைத் தொன்மை போதனைகளின் தொடர்ச்சி என்பதையும் மறுக்கிறார். உலக நடப்பை விழிப்புடன் நோக்கும் ஒருவருக்கு தூய நூல்களைப் படிக்கும் தேவை இல்லை. மனித மரபின் நடைமுறைகளையும், முடிவற்ற கோட்பாடு களையும் உண்மையெனக் கருதி, பல்லாண்டுகளாகச் செய்யப்படும் மதப் பிரச்சாரத்தையும், அதன் விளைவாக வாழையடி வாழையாக வளர்ந்து உண்மையென்றும், மரபு என்றும், தரிசனங்களென்றும் ஏற்படுவதையும் கூர்ந்து நோக்கியவருக்கு, எந்த நூலையும் கற்றறியும் தேவை யில்லை.

சமயக் கோட்பாடுகள், கொள்கைகள், சின்னங்கள் இவற்றினால் கட்டுப்படாத ஒருவருக்கு, இவற்றை அப்பட்டமாக ஒதுக்கித் தள்ளிய ஒருவருக்கு, உண்மை என்பது – மற்றொருவர் வாயால் அறிதலன்று. ஐயா, நீர் இவர் உரைகளை நன்கு கேட்டிருந்தால் தொடக்கத் திலிருந்தே எவ்வித அதிகாரத்தையும், ஆதிக்கத்தையும் ஒப்புக் கொள்ளுவது உண்மைக்குப் புறம்பானது என்பதைப் புரிந்து கொண்டிருப்பீர். சமயக் கொள்கைகள், வழி முறைகள், கட்டுப்பாடுகள், பண்பாடுகள் இவற்றிலிருந்து விடுதலை பெற வேண்டுமென்பதையும் பன்முறை வலியுறுத்தியுள்ளாரென்பது தெரியவரும். தவிர இவர் கூறியதை நன்கு கேட்டிருந்தால் இவர் இந்தியர், இந்தியரல்லர், பழைய வேதாந்தத்தைப் புதிய சொற்களால் புனைந்து தருகிறார் என்றும் கூறமாட்டீர். கடந்த காலத்தையும், அதன் ஆசிரியர்களையும், அதன் மொழி பெயர்ப்பாளர்களையும், கொள்கைகளையும், சூத்திரங்களை யும் அடியோடு மறுக்கிறார் என்பதும் தெரியவரும்.

உண்மை இறந்த காலத்தில் என்றும் இருப்பதில்லை. சென்றகால உண்மை நினைவின் எச்சமே. நேற்றைய நினைவுச் சாம்பலில் உண்மை நிலைக்காது. உண்மை வாழும் பொருள். காலப்பரப்பின் எல்லைக்கு உட்பட்ட தன்று.

இப்பொழுது பிரஹ்மம் என்ற சொல்லை முக்கியமாக நீர் கூறுவதால், எடுத்துக் கொள்வோம். இது கற்பனை நிறைந்த மனத்தினால் ஏற்படுத்தப்பட்ட ஒரு வாதம். அது சங்கரருடையதாக இருப்பினும் சரி அல்லது இந்நாளைய சமயவாதியுடையதாயினும் சரி, அது ஒரு கற்பனையே. எந்தக் கொள்கையையும் நடைமுறையில் கொண்டுவர முடியும். ஆனால், அது கத்தோலிக்க மதத்திலோ, கண்ணன் வழிபாட்டிலோ வரையறுக்கப்பட்ட ஒருவன், ''நான் யேசுவைக் கண்டேன், அல்லது கண்ணனைக் கண்கூடாகப் பார்த்தேன்'' என்று சொல்லுவதற்கொப்பாகும். காண்பானின் உண்மை எதுவோ அதுவே காட்சிப் பொருளாகும். அவை யாவும் மனோமயக் காட்சிகளே. அனுபவத்தை மட்டுமே வைத்து ஒன்றை உண்மையெனக் கொள்ளலாகாது. இம்மனோமயக் காட்சிகள் நாம் வளர்ந்து வந்த நம்பிக்கைச் சூழல்களால் மேலும் வலியுறுத்தப்பட்டு அறிவைக் கட்டுப்படுத்துகின்றன. ஆகவே அவை உண்மை யல்ல. நாம் நம்பிக்கைகளையும், கொள்கைகளையும் அடிக்கடி வலியுறுத்துவதேன்? காரணம் – அச்சம். அன்றாட வாழ்க்கையை ஒட்டிய அச்சம். அதன் இழப்பைப் பற்றிய அச்சம், துயரம் நேருமென்ற அச்சம், இறப்பைப் பற்றிய அச்சம், அர்த்தமற்ற வாழ்க்கை வாழ்கிறோம் என்ற அச்சம். இவ்வாறு அச்சத்திலேயே வாழ்கிறோம். இதைத் தவிர்க்க வேண்டி வலிமை மிகுந்த நம்பிக்கைகளையும், கொள்கை களையும் திறமையோடு உண்டாக்கி அவற்றைப் பிரசாரம் செய்கிறோம். பல்லாண்டுகளாக உரம் பெற்ற நம்பிக்கைகள் அறிவின்மையால் உண்மையாகின்றன.

நீர் ஒருவிதக் கோட்பாட்டையோ, மதத்தையோ உருவாக்காவிட்டால் உள்ளதை உள்ளவாறே காண்பீர். 'உள்ளது' என்பது எண்ணம், இன்பம், துன்பம், சாவின் அச்சம் என்பதும் அப்பொழுது தெரியவரும். அன்றாட வாழ்க்கையானது ஒருவருடன் ஒருவர் போட்டி, பொறாமை, பேராசை, முன்னேற்றம், பதவி மோகம் என்றும் அறிவீர்.

மதக் கோட்பாடுகள், ரட்சகர், குரு, யாவும் பயனற்றவை என்பதும் விளங்கும். அது மட்டுமல்ல - துயரத்திற்கோர் எல்லை காணவும் உம்மால் முடியும் - பல்லடுக்கு மாளிகை யான நினைவுக் கூடத்தை வேருடன் சாய்க்கவும் முடியும்.

நினைவுக் கூடத்தைக் கூர்ந்து நோக்குவதும், புரிந்து கொள்வதுமே தியானம். உலகமென்பது தோற்றமல்ல - மறுக்க முடியாத ஓர் உண்மை - மனிதனால் மனிதனுடன் மனிதன் ஏற்படுத்திய தொடர்பு வலைகளால் ஏற்படுத்திய ஓர் உரு என்பதும் தெரியும். நாம் அறிய வேண்டியது இதுவேயன்றி, வேதாந்தத்தைப் பற்றிய ஆராய்ச்சிகளோ, சடங்குகளோ, மதச்சார்பான செயல்களோ அல்ல.

அச்சம், பொறாமை, துயரம் இவற்றிலிருந்து விடுதலை அடைந்தவனுடைய உள்ளம் இயற்கையான அமைதியுடை யது. ஆடாது அசையாத அவ்வுள்ளம் ஒவ்வொரு வினாடியின் உண்மையையும் மற்றும் பல காட்சிகளுக்கு அப்பாற்பட்டவற்றையும் காணும். எனவே, காட்சி, காண் பான் என்ற இரட்டை நிலைக்கும் ஒரு முடிவு ஏற்படும்.

இவ்வாழ்க்கைப் போராட்டத்திற்கும், அதன் விளைவான களைப்பிற்கும், அகந்தைக்கும் தொடர்பற்று, இவற்றை யெல்லாம் கடந்து தொடக்கமும் முடிவுமற்ற ஓர் இனிய ஓடை, அளவிடற்கரிய ஓர் ஓட்டம், மனத்தினால் எட்ட முடியாத ஓர் ஊற்று உள்ளது.

இது ஒரு கொள்கையன்று. இதைப் புது வாதமாக எடுத்துப் பிரசாரம் செய்யக்கூடும். ஆனால், அது உண்மை யாகாது. பிரசாரம் செய்யப்படும் பொருள் உண்மையன்று. உங்கள் மனத்தை நிறைக்கும் துயரம், கவலை, அதிகாரம், ஆதிக்கம் இவற்றிலிருந்து விடுதலை பெறுவதே உண்மை. இவற்றை நீர் நேருக்கு நேர் நோக்குகையில் உண்மையன்பு என்ற நல்லாசி உமக்குக் கிட்டும். இதுவரை கூறியதின் உண்மையும் புலப்படும்.



# இந்தியா - 2

மனம், உள்ளம் இவற்றின் தன்மையே தியானத்தின் சிறப்புப் பொருள். நீர் ஏதாவதொன்றை நிறைவேற்றுவதோ அன்றி ஒரு குறிக்கோளை அடைவதோ அதன் பொருளன்று. மனத்தின் தன்மை கள்ளமில்லாததா? மென்மை உள்ளதா? என்பதே இதன் கருத்து. உறுதியுள்ள மனநிலை என்பது உலக இயல்பை மறுப்பதாகும். தேவையற்ற பொருளைச் சேகரித்து வாழ்வதும், துய்ப்பதும், தியானம் என்ற தூய்மைக்குப் புறம்பானதாகும். குறிக்கோள் ஒன்றை அடைவது அன்றி முன்னேற்றம் காணல் இவற்றிலிருந்து விலகிய நிலையே தியானம். தியானம், குறிக்கோள் ஒன்றை அடையும் ஆறு அன்று; ஆறும் பயனும் அதுவே. தன் அனுபவங்களால் மனத்தின் களங்கம் நீங்காது. அனுபவத்திற்குப் புறம்பானதே கள்ளமற்ற நிலை. அது எண்ணங்களால் பண்படுத்த முடியாத ஒரு நிலை. எண்ணங்களோ களங்கம் உள்ளவை. தியானம் என்பது எண்ணங்களுக்கு ஒரு முடிவு – அந்த முடிவு என்பது நம்மால் ஏற்படுவதில்லையெனில் தியானியும் தியானமும் ஒன்றே. தியானமற்ற வாழ்க்கை வண்ண வண்ண ஒளியுள்ள உலகில் குடியிருக்கும் குருடனின் வாழ்க்கைக்கு ஒப்பானது.

கடலோரம் காலாற உலாவுங்கள். அப்பொழுதாவது தியானத்தின் தன்மையைக் காணும் வாய்ப்பு உண்டாகலாம். அவ்வாறு நேராவிடினும் நீர் அதைக் கண்டறிய முயலாதீர். நாம் வலுவில் சென்று அடையும் பொருள் தியானமாகாது. அவை உம் அனுபவத்தின் நினைவு அலைகளாகத்தான் இருக்கக் கூடும். இறந்த காலத்தின் நினைவு நிகழ் காலத்தின்

மரணமே. மலை நடுவில் நீர் உலவும்பொழுது அவ்வியற்கை எழில் உம் வாழ்க்கையின் இன்ப துன்பங்களை உணர்த்தக்கூடும். நீர் விழிப்படைந்து உம் துயரத்தையும், அதைத் துடைப்பதற்கு ஒரு வழியையும் காண்பீர். தியானமே அதன் ஆணிவேர், அதுவே மலர், மலரின் பயன் கனி. சொற்களே பொருளை பழம் என்றும், பூவென்றும், செடியென்றும், வேரென்றும் வெவ்வேறாகப் பிரிக்கின்றன. இப்பிரிவை உண்டாக்கும் செய்கை நன்மையைத் தராது. முழுமையாகக் காண்பதே செம்மைச் செயல்.

நிழல் நீண்ட குறுகிய பாதை ஒன்று, இரு மருங்கிலும் மரங்கள், பசுமையான வயல்களூடு வளைந்து செல்கிறது. சூரிய கிரணங்கள் பழுத்த கதிர்களில் படிந்து நெடிய நிழல்களை ஏற்படுத்தின. அதன் இருபுறம் உள்ள கிராமங்கள் வறுமையால் மெலிந்து தூசியும், அழுக்கும் நிறைந்து இருந்தன. முதியோர் நோய் உள்ளவர்களாகவும், துயரத்துடனும் காணப்பட்டனர். இளம் பிள்ளைகளோ அங்குமிங்கும் கூச்சல் போட்டுக் கொண்டு ஓடியும் சாடியும் சிறு கற்களை எறிந்து பறவைகளைத் துரத்திக் கொண்டும் இருந்தனர். அக்குளிர்ந்த இளம்பொழுது மனத்திற்கு இனிமையாக இருந்தது. இளந்தென்றல் மலைகளிலிருந்து தவழ்ந்து நெஞ்சம் நெகிழ்வதாக வீசியது.

பச்சைக் கிளிகளும், மைனாக்களும் காலையில் 'கீசு கீசு' என்று ஆரவாரம் செய்து கொண்டிருந்தன. பசுங்கிளைகளுக்கும், இலைகளுக்கும் நடுவே கலந்த அவற்றை அடையாளம் காண அரிதாய் இருந்தது. குறுக்கும் நெடுக்கும் அவை பறந்து கூச்சலிட்டது கடுமையாக இருந்தது. அப்புளிய மரப்பொந்துகளில் அவை வாழ்ந்தன. மைனாக்கள் புல் தரையில் சற்றே பழக்கமான வகையில் மேய்ந்து கொண்டிருந்தன. ஈக்களைப் பிடிக்கும் பச்சைப் பறவைகளும் தங்கச் சிறகுள்ள மரங்கொத்திகளும், சாலைப்புறக் கம்பிகள் மீது அமர்ந்திருந்தன. அழகான காலைப்பொழுது – கதிரவனின் இளங்கதிர்கள் வெப்பத்தை

எழுப்பவில்லை. அச்சூழ்நிலை நல்லாசி நிறைந்ததாக இருந்தது – மனிதன் விழிக்கும் முன்புள்ள உலகத் தோற்றத்தின் அமைதியைக் கொண்டதாக இருந்தது.

அந்தச் சாலையில் நாலு கம்பங்களையும், ஒரு கிழிந்த விதானத்தையுமுடைய ஒரு குதிரை வண்டி சென்று கொண்டிருந்தது. அதன் நடுவே வெண்மையும், சிவப்புமான துணியில் சுற்றப்பட்ட சவம் ஒன்று ஆற்றங்கரையில் எரிப்பதற்கென்று வைக்கப்பட்டிருந்தது. வண்டி ஓட்டியைத் தவிர அதன் அருகில் ஒருவர் உட்கார்ந்திருந்தார். உறவினராக இருக்கலாம். குண்டும் குழியும் நிறைந்த சாலையில் அந்த விறைத்த சடலம் ஆட்டம் கண்டது. குதிரையும் வியர்த்து விறுவிறுத்தது. வெகு தூரத்திலிருந்து வந்திருக்கலாம்.

எம்மைக் காண வந்தவர் துப்பாக்கிப் படையின் பயிற்சியாளராக இருந்தவர். அவர் தம் மனைவி, இரு குழந்தைகளோடு வந்தார். ஆழ்ந்த கருத்துள்ளவராகத் தென்பட்டார். வணக்கம் தெரிவித்தபின், ''நான் கடவுளைக் காண ஆசைப்படுகிறேன்'' என்றார். சற்று வெட்கமுடைய வராகவும், அதிகம் பேசாதவரென்றும் தெரிந்தது. அவருடைய முகத்திலிருந்தும், கைகளிலிருந்தும் சற்றுக் கடினமானவராகக் காணப்பட்டார். மனிதனைக் கொல்லப் பயிற்சி அளிப்பவர். அவருடைய அன்றாட வாழ்க்கை யிலிருந்து ''கடவுள்'' மிகத் தொலைவில் இருப்பதுபோல் தோன்றியது. அவருடைய வாழ்க்கைத் தேவையோ கொல்லும் பயிற்சி. கருத்துடன் தேட வந்ததோ கடவுள் – என்ன விந்தை!

அவர் தான் மெய்ந்நெறியில் ஈடுபட்டவரென்றும், பல துறவிகளையும், பல மெய்வழிகளையும் அறிந்தவர் என்றும் கூறினார். அவ்வாறு இருந்தும் அவருக்கு மன நிறைவு ஏற்படவில்லை. அதனால், பஸ்ஸிலும், ரயிலும் ஏறி, ''பெரியோரும், முனிவர்களும்'' கண்டறிந்த அந்த அற்புத உலகத்தைக் காணும் பொருட்டு எமை நாடி வந்ததாகத்

தெரிந்தது. அவருடன் வந்தவர்கள் பேசாமல் சும்மா இருந்தனர். தொலைவில் சாளரத்தின் வெளியே புறா ஒன்று மெதுவாகக் கூவிக் கொண்டிருந்தது. அவர் அதைச் சிறிதும் கவனிக்கவில்லை. அத்தாயும், குழந்தைகளும் சற்றுத் தவிப்போடு புன்னகையற்று நிமிர்ந்து உட்கார்ந்து இருந்தனர்.

கடவுளை நீர் காண இயலாது; அதற்கோர் ஆறு இல்லை. மனிதன் கடவுள் பெயரில் பல மதங்களையும், நம்பிக்கைகளையும், வழிகளையும், பல ஆசார்யர்களையும் உருவாக்குகிறான். இதனால் அழியாப் பேற்றை அடைய விரும்புகிறான். இதற்காகத் தேடித் தேடி மனங்கண்ட கோலங்களை உண்மை எனக் காண்பதும், அறிவு என்ற அளவுகோலால் தன்னையும், பிறவற்றையும் அளக்கும் துன்பத்தையும் அடைகிறான். அவன் தேடும் தெவிட்டா அன்பு – அவன் வாழும் விதத்திலேயே பாழடைகிறது. ஒரு கையில் துப்பாக்கியும், ஒரு கையில் கடவுளும் இருக்க முடியாது. கடவுள் என்பது ஒரு சின்னம். உண்மையில் அர்த்தம் இழந்த ஒரு சொல். கோவில்களாலும், தொழுகைப் பள்ளிகளாலும், மாதாக் கோவில்களாலும் பொருள் இழந்த சொல். நீர் கடவுளை நம்புவோராயினும் சரி, நம்பாதவ ராயினும் சரி நீர் இருவரும் ஒரே வகையைச் சேர்ந்தவரே. இருவரும் குறுகிய தன்னலம் கொண்ட பயனற்ற வாழ்க்கையின் துன்பத்தை அனுபவிக்கிறீர். அன்றாட வாழ்க்கையின் ஏமாற்றங்களால் கசப்புற்று பொருளற்ற வாழ்க்கையை வாழ்கிறீர். எண்ணக் குவியலின் ஓட்ட முடிவிலே உண்மையைக் காண இயலாது. வெறிச்சிடும் நெஞ்சம் எண்ணங்களின் பேச்சிலே நிறைந்து வழியும். நாம் புத்தி கூர்மையால் புதுப்புதுத் தத்துவங்களை உருவாக்கி அவை நிறைவு பெறாத ஏக்கத்தால் வருந்துகிறோம். அவற்றை அடைய பல கொள்கைகளை வகுத்து அடியார் என்ற நிலையில் கோவில்களுக்குச் சென்று, அங்கே நம்முடைய மனத் தோற்றங்களில் நம்மை இழக்கிறோம்.

துறவியானாலும், பிக்குவானாலும் பரம்பொருளைக் காண முடியாது. எனில், அவர் இருவரும் மனிதன் ஏற்படுத்திய மரபிலும், பண்பாட்டிலும் ஊறியவர். அம்மரபுரிமை யாலேயே அவர்கள் துறவிகள் என்றும், பிக்குகள் என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டவர்கள்.

அப்புறா பறந்து வெளியே சென்றது. விண்ணின்று மேகக் கூட்டத்தின் அழகு மண்ணில் இழிந்தது. உண்மை அங்கே உள்ளது – நீர் பார்க்குமிடத்தில் இல்லை.





## இந்தியா - 3

முகலாயர் காலத்தில் அமைக்கப் பெற்ற பூங்கா. நெடிது உயர்ந்த மரங்கள். அவற்றிடையே பெரிய நினைவுக் கட்டிடங்கள் சலவைக் கற்களைக் கொண்டதாய் இருந்தன. மழையிலும், வெயிலிலும் பல மாறுதல்களை அடைந்து அவை மேலும் கறுத்துக் காட்சியளித்தன. நூற்றுக்கணக்கான புறாக்கள் அந்தக் கோபுரங்களில் வசித்து வந்தன. அவை காகங்களுடன் அடிக்கடி சண்டையிட்டன. கீழே கிளிகளின் கூட்டம் வந்திறங்குவதும் பறப்பதுமாயிருந்தன.

நன்கு பராமரிக்கப்பட்ட புல் தரைகள் பரந்து கிடந்தன. பெரிய நகரத்திலிருந்தபோதிலும் அப்பூங்கா அமைதியாக வும், மனித சந்தடி குறைவாகவும் இருந்தது. மாலைப் பொழுதுகளில் சுற்றியுள்ள வீடுகளின் வேலையாட்கள் தத்தம் சைக்கிள்களுடன் வந்து சீட்டு விளையாடுவார்கள். அந்த விளையாட்டோ அவர்களுக்கு மட்டுமே புரிந்த ஒன்று. மற்றொரு கல்லறையின் அருகேயுள்ள புல்வெளியில் குழந்தைகள் கூட்டம் கூட்டமாக விளையாடிக் கொண் டிருந்தன.

அங்கே, சிறப்பான கல்லறையொன்று தக்க அளவில் பெரிய வளைவுகளையுடையதாய் அமைந்திருந்தது. அதன் பின்புறமுள்ள சுவர் சற்று ஏற்றத் தாழ்வுடன் இருந்தது. வெய்யிலிலும், மழையிலும் அடிபட்டு அதன் செங்கற்கள் கருமை யாகக் காணப்பட்டன. ''பூக்களைப் பறிக்காதீர்'' என்ற எச்சரிக்கை தென்பட்டபோதிலும், பொருட்படுத்தா மல் எல்லோரும் பறித்துக் கொண்டுதான் இருந்தார்கள்.

யூகலிப்டஸ் மரங்கள் அமைந்த சாலை, அதன் பின்புறம் இடிந்துபோன சுவர்களிடையே ஒரு ரோஜாத் தோட்டமும் இருந்தது. அத்தோட்டம் நன்றாகக் கவனிக்கப்பட்டு, கவர்ச்சியுள்ள மரங்களைக் கொண்டதாக இருந்தது. சுற்றுமுள்ள புல் தரைகளும் சீர் செய்யப்பட்டு எந்நேரமும் பசுமையாகக் காணப்பட்டன. இங்கு ஜன நடமாட்டம் அதிகமில்லை. ஏகாந்தமாக உலாவலாம். மாலை மயங்கும் நேரம். கதிரவனை மரங்களினூடும், கல்லறையின் மண்டபத்தின் மேலும் காணலாம். நீண்ட நிழல்களைக் கொண்ட மாலைப் பொழுதில், அப்பூங்கா நகரின் சந்தடியிலிருந்து விலகியும், செல்வர்களின் அழகற்ற செயல்களிலிருந்து விடுபட்டும், வறுமையின் கொடுமை யிலிருந்து விலகியும், மிக நிம்மதியுள்ளதாகவும் இருந்தது. சில குறவர்கள் புல்வெளியில் களைகளை நீக்கிக் கொண்டிருந்தார்கள். அது முற்றிலும் அழகான இடம். ஆனால், மனிதன் மெள்ள மெள்ள அதை அழித்துக் கொண்டிருந்தான்.

தன் சைக்கிளுக்கு அருகாமையில், கால்களை மடக்கியவாறு மூலையில் ஒருவன் உட்கார்ந்திருந்தான். அவன் கண்கள் மூடியிருந்தபோதிலும் வாய் முணுமுணுத்த வாறு இருந்தது. சுற்றியுள்ள உலகத்தையும், வருவோர் போவோரையும், கிளிகளின் கிசுகிசுப்பையும் மறந்து சுமார் அரை மணி நேரம் அவ்வாறே இருந்தான். உடம்பு ஆடாமல் அசையாமல் இருந்தது. கையில் ஒரு ஜபமாலை துணியால் மூடப்பட்டிருந்தது. விரல்களும் உதடுகளும் அசைவதை மட்டுமே காண முடிந்தது. நாள்தோறும், வேலை முடிந்ததும் மாலையில் அவன் வருவது வழக்கமாக இருந்தது. சற்று ஏழ்மையாக இருந்தாலும், சுமாராக ஊட்டம் பெற்ற உடல், தினமும் அதே மூலையிலமர்ந்து தன்னை மறப்பது ஒரு பழக்கமான செயல். அவனைக் கேட்டிருந்தால் இவ்வாறு கூறியிருக்கலாம்: ''நான் தியானம் செய்கிறேன், ஏதோ மந்திரமொன்றை ஜபிக்கிறேன், இது நன்மையைத்

தருகிறது. என்னளவில் இதுவே போதும்.'' அன்றாட வாழ்க்கையின் சலிப்பிலிருந்து அவனுக்கோர் ஆறுதல். அவன் தனிமையாக இருந்தான். பின்புறம் மல்லிகை மலர்கள் கண்கொள்ளாக் காட்சியாகப் பூமாரி பொழிந்தன. அக்கணத்தின் அழகு அவனைச் சூழ்ந்து கிடந்தது. தன் மனக் கற்பனையில் மூழ்கிய அவனால் அவ்வழகைக் காண இயலவில்லை.

ஒரு சொல்லைத் திரும்பத் திரும்பக் கூறுவதும், தோற்றமொன்றைத் துய்ப்பதும் மோனத்தைப் பழக்கமாகக் கொள்ளுவதும் தியானமாகாது. ஜபமாலையும், மந்திரமும் ஓரளவு, புலம்பும் மனத்தை அமைதியுறச் செய்யக்கூடும். ஆனால், அது தன்மயக்கம் போன்றதொரு நிலையே. அதற்குத் தூக்க மாத்திரையைச் சாப்பிடலாம்!

இன்பத்தின் ஈர்ப்பிலே ஈடுபட்டு, எண்ணம் வரையும் ஓவியப் போர்வையில் அடைந்து கொள்வது தியானமாகாது. தியானம் தொடக்கமும் இறுதியுமற்றது.

''நான் இன்றிலிருந்து அமைதியாக ஓராசனத்தில் அமர்ந்து எண்ணங்களைக் கட்டுப்படுத்துவேன்'' என்று நீர் கூறினால், தன்னைத்தான் ஏமாற்றிக் கொள்வதற்கென்று எண்ணம் ஏற்படுத்தும் சூழ்ச்சிகளிலே அகப்பட்டுக் கொள்வீர். பேரெண்ணங்களிலோ, கற்பனை உருவங்களிலோ ஆழ்ந்து போவது தியானமல்ல. விளையாட்டுப் பொருட்களில் ஈடுபட்டு ஒரு குழந்தை எவ்வாறு அமைதி அடைகிறதோ, அவ்வாறே மூச்சடக்குதல், ஜபம் செய்தல் இவையாவும் ஓரளவு அமைதியைத் தரலாம். ஆனால், விளையாட்டின் ஈடுபாடு விலகியதும், ஓய்வின்மையும், தொல்லையும் மீண்டும் தொடங்கும். தியானம் கற்பனையால் உண்டாக்கி, கண்ணுக்குப் புலனாகா இன்பத்தையடைய ஒரு வழியன்று. தியானமுள்ள மனம், நாள் முழுவதும், சொற்கள், விமர்சனங்கள், கொள்கைகள் இவற்றின் உதவியின்றி வாழ்க்கை ஓட்டத்தின் நெளிவு சுளிவுகளை எல்லாம் கூர்ந்து

நோக்குந்திறனுடையது. கேள்வித் திறனும் பெற்றது. இரவின் துயிலிலும், தியானமுள்ள மனம் கனவற்று உறங்கும். ஏனெனில், அம் மனம் நாள் முழுதும் விழித்திருக்கும். சோம்பேறிகளே கனவு காண்பர். அரைத் தூக்கமுள்ளோர்க்குத் தன் நிலையை உணர்த்த கனவுகளின் உதவி தேவை; எண்ணங்களால் உருவாக்கப் பெறாத அம்மோன நிலை, வாழ்க்கையின் ஓட்டத்தை உள்ளும் புறமும் உன்னிப்பாய் கவனித்து அதற்கு முழுதாய் செவி சாய்க்கும் உள்ளத்தையே வந்தெய்தும்.

அம்மோன நிலை, காண்பானின் அனுபவத்திற்குட் படாதது. அவ்வாறு அனுபவத்திற்குள் அகப்பட்டு அதை உணர்ந்தால் – அது மோனமாகாது. தியான உள்ளத்தின் ஓசையில்லா நிலை, உணர்வின் வரைகோட்டுக்குட் பட்டதன்று. மோனம் – எல்லையற்றது.

குன்றங்களைப் பெயர்த்து எடுத்து போவது போன்ற மேகங்கள் – அங்குமிங்குமாய்க் கிடந்த மலைப் பாறைகள் மழை பெய்ததால், மெருகிடப்பட்டு ஒளியிட்டன. அச்சாம்பல் நிறப் பாறையின் நடுவே ஒரு கருங்கோடு கழுவப்பட்டு மழை நீரால் மேலும் கருமையுற்றது.

நீர் நிரம்பிய குளங்களில் தவளைகள் கனத்த குரலை எழுப்பின. கிளிக் கூட்டம் வயலிலிருந்து சாரலுக்கு ஒதுங்க இடம் தேடியது. குரங்குகளோ மரங்களிடைத் தஞ்சம் புகுந்தன. மழையின் காரணமாய்ச் செம்மண் இன்னும் சிவந்து காணப்பட்டது.

வான் பொழிகையில் மழைக்கே உரித்தான ஓரமைதி – அன்று காலை, மலைச் சரிவுகள் சந்தடியற்று இருந்தன. மரம் வெட்டும் ஓசை, வயல்வெளிகளில் உழும் யந்திரங்களின் ஓசை எல்லாம் நின்றுபோய் அமைதி நிலவியது. கூரையிலிருந்து மட்டும் தண்ணீர் சொட்டும் ஓசை. வாய்க்கால்கள் வழிந்தோடின.

மழைத் துளிகள் உடலில் விழும்பொழுது ஏற்படும் ஈர உணர்வு - தனிச் சிறப்பான ஒன்று. மண்ணும் மரமும் மழையைப் பெரும் மகிழ்ச்சியுடன் வரவேற்றன; ஏனெனில் பல நாட்களுக்குப் பிறகு வந்த மழை - காய்ந்த மண்ணின் சிறு விரிசல்களும் மறைந்தன, புள்ளினங்களின் ஆரவாரமும் அடங்கின; காருண்ட மேகங்கள் கிழக்கிலிருந்து மேற்கே நகர்ந்தன. அவற்றால் மலைகளும் ஈர்க்கப்பட்டன. மழையால் நனைந்த மண்ணின் மணம் எங்கும் வீசியது. நாள் முழுவதும் மழைவிடாது பெய்தது.

அசைவற்ற அவ்விரவில் ஆந்தைகள் மட்டுமே ஒன்றையொன்று விளித்துக் கூவின.

அவர் ஓர் ஆசிரியர், பிராமணர்; சுத்தமான வேஷ்டி - செருப்பணியாத கால்கள்; மேற்கத்திய முறையில் மேற்சட்டை; தூய்மையாகவும், கூர்ந்த பார்வையுடையவ ராயும் வெளித் தோற்றத்தில் மென்மையானவராகவும் தென்பட்டார். வணக்கம் கூறிய விதத்தில் எளிமை தென்பட்டது. அதிக உயரமில்லை. முந்நாளில் ஆங்கில ஆசிரியர். ஆகையால் தெளிவாக ஆங்கிலம் பேசினார். உலகின் எல்லா ஆசிரியர்களைப் போன்றே அவரும் அதிக வருவாயுள்ளவரன்று. வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றவே போதிய ஊதியமிருக்கலாம். மணமான வர்தான். குழந்தைகளுமுண்டு. ஆனால், அவற்றையெல் லாம் ஒரு பொருட்டாக மதிக்காமல் சற்றே விலகியிருந்த மனப்பான்மை. பெருமைக்குரிய ஆள்; அரிய செயல்களை நிறைவேற்றியதால் அமைந்த பெருமையன்று; செல்வருக் குரிய செருக்குமன்று; பண்டைப் பரம்பரையில் தோன்றிய பெருமை, பழம் மரபு, அதனால் வரையறுக்கப்பட்ட எண்ணங்களின் பெருமை. இவற்றின் தொடர்பு இவருக்கு இல்லாதிருப்பினும் அப்பழமை வழி பற்றிய பெருமை அவரிடம் இருந்தது. நிகழ்கால வாழ்க்கையின் சிக்கல்களை ஒதுக்கித் தள்ளிய விதத்திலிருந்து, அவர் நிகழ்வை வேறு

வழியின்றி, தேவையற்ற ஒன்றைப் பொறுத்துக் கொள்வதுபோலத் தோன்றியது. கடினமாகவும், உரத்த குரலிலும் பேசியதில் தென்னிந்தியரெனக் காண முடிந்தது. அவர் நம் உரைகளைப் பல ஆண்டுகளாக இம்மரத்தின் கீழே இருந்து கேட்டதாகக் கூறினார். அவர் கல்லூரியில் படிக்கும்பொழுது, அவர் தகப்பனார் அழைத்து வந்தாராம். அதன்பின் இத்தொல்லை தோய்ந்த வேலை கிடைத்ததிலிருந்து ஒவ்வொரு ஆண்டும் உரையைக் கேட்க வருகிறாராம்.

''நான் உங்களைப் பல ஆண்டுகளாகக் கேட்டு வருகிறேன். அதைப் பகுத்தறியும் மனத்தால் அறிகிறேனே தவிர, உள்ளத்தில் ஆழமாக அவை பதியவில்லை. இம்மரங்களின் அமைப்பு மனத்திற்குகந்ததாய் இருப்பினும் நீங்கள் காட்டும் மறையும் மாலைக் கதிரவனை – (நீங்கள் அடிக்கடி உங்கள் உரைகளில் சுட்டிக் காட்டுகிறீர்) பார்க்குங்கால் அது என் மனத்தைத் தொடுவதில்லை. அவ் இலைகளைத் தீண்டவும் முடிவதில்லை. தவிர நிலத்தில் விழுந்து நடம்புரியும் நிழல்களின் களியாட்டமும் என்னிடம் எழுவதில்லை. உண்மையில் எனக்கு ஒரு வித உணர்வு மில்லை. நான் ஆங்கில இலக்கியமும், இந்நாட்டின் இலக்கியங்களும் நிறைய படித்துள்ளேன். செய்யுள் பாடும் புலமை பெற்றிருந்தபொழுதிலும், சொற்களுக்கப்பாற்பட்ட அழகு என்னிடமிருந்து தப்பி ஓடுகிறது. என் மனைவியிடத்தும், குழந்தைகளிடமும் நாளடைவில் மனம் மேலும் இறுகிக் கடினமாகிறது. பள்ளியிலும் நான் சற்று கூச்சலிடுகிறேன். சாயும் கதிரவனைக் காணும் மகிழ்ச்சியை ஏன் இழந்தேன் என்று வியக்கிறேன். எப்பொழுதாவது அம்மகிழ்ச்சி என்னிடம் இருந்ததா என்ற கேள்வியும் உடன் எழுகிறது. உலகின் தீமைகளும் என்னை அதிக அளவில் பாதிப்பதில்லை. எல்லாவற்றையும் பகுத்தறிவோடு பார்க் கிறேன். எவரிடம் வேண்டுமானாலும் ஆராய்ந்து வாதம் செய்ய இயலும் என்றே நினைக்கிறேன். அவ்வாறிருக்க

உள்ளத்திற்கும், அறிவிற்கும் ஏன் இந்த இடைவெளி? அன்பையும், உண்மை இரக்கத்தையும், அக்கறையையும் ஏன் இழந்தேன்?''

சாளரத்தின் வெளியேயுள்ள போகன்வில்லா பூக்களைக் காணுங்கள். உம்மால் பார்க்க முடிகிறதா? அதன் மீது ஊடுருவும் ஒளியையும், வண்ணத்தையும், உருவத்தையும், அதன் தன்மையையும் உம்மால் காண முடிகிறதா?

''ஆம். அதைப் பார்க்கிறேன். ஆனால், அது எனக்கு விளங்கவில்லை. என்னைப் போல் இன்னும் ஆயிரக்கணக் கானவர்கள் உள்ளனர். மறுபடியும் இக்கேள்விக்கு வருவோம். உணர்ச்சிக்கும், அறிவுக்கும் ஏன் இந்த இடைவெளி?''

குழந்தைப் பருவத்திலிருந்தே நினைவு சக்தியை மட்டுமே வளர்க்கும் இன்றைய கல்வியின் காரணமா? ஒரு மரத்தையோ, பூவையோ, பறவையையோ, பரந்த நீர் நிலையையோ சுட்டிக் காண்பிக்க இயலாத அரைகுறைக் கல்வியின் விளைவா? அன்றி, இயந்திரம் போன்ற வாழ்க்கையின் விளைவா? மக்கள் பெருக்கத்தினால் ஒரு வேலை வேண்டி பல மக்கள் நிற்கும் அல்லலால் உண்டானதா? அல்லது பெருமையால் - திறமையுள்ளவர் என்ற பெருமை, குலப்பெருமை, சாமர்த்தியமான அறிவின் பெருமை - இவற்றாலுண்டானதா? நீரும் அவ்வாறு நினைக்கிறீரா?

''இதிலிருந்து நான் பெருமையுள்ளவனா என்ற கேள்வி எழுகிறது. ஆம், நான் பெருமையுள்ளவனே.''

அறிவுத் திறனின் ஆதிக்கத்திற்கு இதுவும் ஒரு காரணம்தான். ஒருக்கால் சொற்களின் சிறப்பு மிகுந்து போய் அதற்கப்பாலுள்ள பொருளின் சிறப்பு குறைந்து போவ தாலா? நீரறியாமலேயே, உமக்குப் பல விதத்தில் தடை

களும், குறுக்கீடுகளும் வந்ததால் உண்டான நிலைமையா? இப்பொழுது கூர்ந்த அறிவுள்ளவர்களே எவராலும் போற்றப்படுகிறார்கள். நீர் அதிக சாமர்த்தியமும், தந்திரமுள்ளவராக இருந்தால் மேன்மேலும் முன்னேற்றம் அடைவீர்.

''இவையாவுமே, இந்நிலைமைக்குக் காரணமாக இருக்கலாம். இருப்பினும் அவையொரு பொருட்டா? முடிவற்ற இவ்வாராய்ச்சியை விரித்துக் கொண்டே போகலாம். ஆனால், மனத்திற்கும், உள்ளத்திற்கும் உள்ள இடைவெளிக்கு ஒரு பாலம் அமைக்க முடியுமா? இதுவே நான் தெரிந்துகொள்ள விரும்புவது. மன ஆராய்ச்சி நூல்களையும், பண்டை இலக்கியங்களையும் நன்கு கற்றுள்ளேன் - அவை சிறிதும் என்னைத் தூண்டவில்லை. அதற்காகவே உங்களை அடைந்தேன். ஒருக்கால் இதுவும் காலந்தாழ்ந்த ஒரு செயலோ எனத் தோன்றுகிறது.''

உள்ளமும், அறிவும் ஒன்றுபட வேண்டும் என்ற அக்கறை உண்மையானதா? அறிவுத் திறனே உங்களுக்குப் போதுமானதாக இல்லையா? அறிவும் உள்ளமும் ஒன்றாக வேண்டும் என்பதும் அறிவின் செயலாக இருக்கக் கூடாதா? இவை ஒன்றுபட வேண்டும் என்ற தொல்லை உமக்கு ஏன்? இக்கேள்வியே அறிவின் விளைவா, அல்லது ஒரு புறம் உணர்ச்சிகள் வற்றிப் போவதைக் கண்டு உங்களறிவின் மற்றொரு பகுதி அடையும் கவலையா? வாழ்க்கையைக் கூர்ந்த அறிவு என்றும், உள்ளம் என்றும் இரு கூறுகளாகப் பிரித்து, அந்த அறிவுக் கூர்மையைக் கொண்டும் உள்ளம் தேய்வதைக் கண்டும், வெறும் சொல்லளவில் அக்கறை காட்டுகிறீர். உள்ளம் உலர்ந்து போகட்டும்; அறிவிலேயே வாழ முயலுங்கள், இது கூடுமா?

''எனக்கும் உணர்ச்சிகள் உண்டு.''

நீர் கூறும் 'உணர்ச்சி' உண்மையில் புலனுணர்வு, தன்னலம், மனஉருக்கம் இவைகளேயல்லவா? நாம் அதைப்

பற்றிப் பேசவில்லையே? அன்பை முற்றிலும் இழந்து போவதைப் பற்றிக் கவலைப்படாதீர் என்று நாம் கூறு கிறோம். முழுமையாக உங்கள் அறிவுத் திறனிலே, அதன் சொற்களின் சூழ்ச்சியிலே அறிவின் சொற்போரிலேயே வாழுங்கள். அப்பொழுது என்ன நடக்கிறது? நீர் உண்மையில் எதிர்ப்பது நீர் போற்றும் அறிவின் அழிக்குந்தன்மையைத்தான். அறிவின் அழிக்குந்திறனால் பல கேடுகள் - உலகச் சண்டைகள், போட்டிகள், செல்வாக்கின் இறுமாப்பு இவை உண்டாகின்றன என்றுணரும்போது, என்ன நேருமோ என்ற நடுக்கம் உண்டாகிறது. எதிர்கால நம்பிக்கைகள் குறைவதைக் கண்டும் மனிதனின் ஏக்கத்தைக் கண்டும் அச்சம் அடைகிறீர்.

உணர்வுகளுக்கும், அறிவுக்கும் இடைவெளி உள்ளவரை, அவையொன்றின் மீது ஒன்று ஆதிக்கம் செலுத்தும்வரை ஒன்று மற்றொன்றை அழித்தே தீரும் - அவற்றை ஒன்றுபடுத்த இயலாது. நீர் பல ஆண்டுகளாகப் பேச்சுகளைக் கேட்டிருக்கலாம், அதனால் உள்ளத்தையும், அறிவையும் ஒன்று சேர்க்க, மிகுந்த பாடுபட்டும் இருக்கலாம். ஆனால், அம்முயற்சியும் அறிவின் செய்கையே, அது உள்ளத்தின் மீது அறிவு செலுத்தும் ஆதிக்கமேதான். அன்பு இவ்விரண்டுக்குமே அயலானது. ஆதிக்கத்தின் தன்மை அன்பிடம் இல்லை. எண்ணத்தினால், உருக்கும் உணர்வுகளால் புனையப்படாதது அன்பு. அது அறிவின் விளைவான சொல்லும் அன்று. புலன் உணர்ச்சியின் மறு விளைவும் அன்று. ''எனக்கு அன்பு வேண்டும், அதற்காக நான் இதயத்தைப் பண்படுத்த வேண்டும்'' என்று கட்டாயப்படுத்துகிறீர். இதுவும் மனத்தினால் பயிர் செய்யப்பட்டது; அதனால் அன்பையும், நெஞ்சத்தையும் நீர் பிரித்தே வைக்கிறீர். அவைகளைப் பயன் நோக்கிய செயலுக்காக இணைக்க முடியாது. தொடக்கத்தில் இருப்பது - அன்பு, முயற்சியின் இறுதிப் பயனன்று.

''அவ்வாறானால் நான் என்ன செய்ய வேண்டும்?''

அப்பொழுது அவர் கண்கள் ஒளியிடத் தொடங்கின; அவர் உடலிலும் ஒரு நெகிழ்வு உண்டாயிற்று. சாளரத்தின் வெளியே நோக்கினார்; இதுவரை அவர் கேட்டதின் பயன் அவரை மெள்ள பற்றத் தொடங்கியது.

நீர் ஒன்றும் செய்ய முடியாது. தொடர்பு ஒன்றும் கொள்ளாமல் அதற்கு வெளியே இருங்கள்! செவிசாய்த்து கேளுங்கள்; அந்த மலரின் அழகைக் காணுங்கள்!





## இந்தியா - 4

**பு**துமையின் மடலவிழ்தலே தியானம். திரும்பத் திரும்ப எழும் இறந்த வினையைக் கடந்து நிற்பது புதுமை. தியானம் இறந்த காலத்தின் வினைமுற்று. தியானம் அழைத்து வரும் 'இறப்பு' என்பது புதுமையின் சாகாவரம். எண்ணங்களின் பரப்பிலே புதுமை இல்லை. எண்ணங்கள் முடிவுற்ற மோனமே தியானம்.

தியானம் ஒரு சாதனையல்ல அல்லது ஒரு தோற்றத்தைச் சிறைப் பிடிக்குஞ்செயலுமன்று, உணர்வின் கிளர்ச்சியு மன்று. அடக்கவொணாக் கரை புரண்டோடும் வெள்ளத் தைப் போன்றது தியானம். ஓசையில்லா ஓர் இசை, இதைப் பழக்கத்தில் கொண்டு வரவும், பயன்படுத்தவும் இயலாது. தொடக்கத்திலேயே காண்பானிடமிருந்து பிரிந்துவிட்ட அமைதி நிலை.

கதிரவன் இன்னும் எழவில்லை; மரங்களினூடே காலை வெள்ளியைப் பார்க்கலாம். முன் பின்னறியா அமைதி. இரு ஒலிகளுக்குமிடையேயுள்ள வெளியன்று. இரு சுரங்களின் இடைவெளியுமன்று. எந்நோக்கமுமில்லா அமைதி - வையகம் தோன்று முன்பே உள்ள அமைதி. அம்மோனம் மலைகளையும், பள்ளத்தாக்குகளையும் முழுமையாய் நிரப்பியது.

ஒன்றையொன்று விளித்துக் கூவும் அவ்விரு ஆந்தை களின் கூக்குரல் அவ்வமைதியைக் குலைக்கவில்லை - தூரத்தில் பின் நிலவை நோக்கிக் குரைக்கும் நாய்களின் ஒலியும் அவ்வெல்லையற்ற பேரமைதியின் இன்றியமை யாப் பகுதியாகியது.

மிகையான அப்பனித் துளிகள், மலைக்கோட்டில் எழுந்த காலைப் பரிதியின் கதிர்களால் செந்தளிரிட்டுப் பன்னிறங்கொண்டு ஒளிர்ந்தன. ஜாக்கரண்டாவின் மெல்லிலைகள் பனி மிகையால் கனத்தன. மாலை நீராட வந்த புள்ளினம் அம்மெல்லிலைகளின் படிந்த பனித் துளிகளால் தம் இறகுகளைப் படபடத்து நிரப்பிக் கொண்டன. குறிப்பாகக் காகங்கள் இதில் மும்முரமாய் இருந்தன. கிளைக்குக் கிளை தாவி, இலைகளினூடே தம் தலைகளை நீட்டிச் சிறகுகளை நீவிக் கொண்டன. அப்பெரியதொரு கிளையில் ஐந்தாறு காகங்களும், பல பறவைகளும் மரம் முழுவதும் அங்குமிங்குமாய்ச் சிதறி காலைக் குளியலைப் பெற்றுக் கொண்டிருந்தன.

இப்பேரமைதி விரிந்துவிரிந்து மலைகளுக்கப்பால் போவது போன்ற உணர்ச்சி; குழந்தைகளின் வழக்கமான கூச்சலும், சிரிப்பும் கேட்கத் தொடங்கின. வயல்வெளிகள் மெள்ள கண் விழித்தன.

அந்நாள் சற்றுக் குளிர்ந்ததாக இருக்குமெனத் தோன்றி யது; குன்றுகள் மீது கதிரோனின் ஒளி படிந்தது. அவை பழமையான குன்றங்கள். உலகிலேயே மிகப் பழமை யானதாகக் கூட இருக்கலாம். ஒன்று போலன்றாயினும் அப்பாறைகள் கவனத்தோடு செதுக்கியதுபோல், ஒன்றின் மீது ஒன்றாய் இசைவாய் அடுக்கப் பெற்றிருந்தன. காற்றோ, தீண்டுதலோ அப்பாறைகளைத் தன் நிலையிலிருந்து அசைக்கவோ, குலைக்கவோ இயலாது.

அப்பள்ளத்தாக்கு பட்டினங்களிலிருந்து பெருந்தொலை வில் இருந்தது. அதன் வழியாக அடுத்த கிராமத்திற்குப் போகலாம். கரடுமுரடான அப்பாதையில் அமைதியைக் கெடுக்கும் பஸ்ஸுகளும், கார்களும் இல்லை. மாட்டு வண்டிகள் இருந்தபோதிலும் அவற்றின் அசைவு அம் மலைகளின் ஒரு பகுதியாகவே தோன்றியது. உலர்ந்த ஓடையொன்று - மழை பெய்யும்பொழுதே நீரோட்டம்.

அப்பொழுது நீரின் நிறம் சிவப்பு, மஞ்சள், பழுப்பாக ஓடியது.

அவ்வோட்டமும் மலைகளுடன் தொடர்பு கொண்டதாகவே இருந்தது. அவ்வழியே அமைதியாகச் சென்ற ஊர் மக்களும் அக்கற்களின் உறவு கொண்டவராகவே இருந்தனர்.

நாள் மெல்லத் தேய்ந்து மாலை வந்தடையும் அவ்வேளையில், கதிரவன் மேற்கு மலைகளின் பின் சாய்கையில் மிகத் தொலைவிலிருந்து வந்த அம்மோனம், மலைகளுக்கு மேலும், மரங்களினூடும், புதர்களையும், பழம்பெரு ஆலமரத்தையும் கவ்வி வந்தது. விண்மீன்களின் ஒளி மிகவும் அம்மோனம் மேலும் வளர்ந்து செறிவுற்றது; தாங்க வகையில்லா மௌனம்.

ஊர்ப்புறத்தின் சிறு விளக்குகள் அணைந்ததும், தூக்கத்திலும் அம்மோனத்தின் வலிவு ஆழமாகவும், விரிவாகவும் மேன்மேலும் நம்பமுடியாத வண்ணம் வளர்ந்து அடக்கி ஆழ்த்தியது. குன்றங்களும் தம்முடைய கிசுகிசுப்பையும், அசைவுகளையும் அடக்கியதால் மேலும் அமைதியுற்றன. அளவிடற்கரிய அவற்றின் நிறையும் குறைந்ததெனத் தோன்றியது.

நான் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குரியவள் எனக் கூறினாள். சீர் செய்து கட்டிய சேலை, கைகளில் வளைகள், அவளுடன் வந்திருந்த பெரியவர், உறவு முறையில் மாமன் எனக் கூறினார். நாங்களனைவரும், ஒரு சோலையை நோக்கி அமர்ந்திருந்தோம் – அங்கே ஆலமரமும், சில மாமரங்களும் பளிச்சிடும் போகன் வில்லாவும், நன்கு வளர்ந்த தென்னை மரங்களும் இருந்தன. அவள் மிகத் துயரத்துடன் இருந்தாள். கைகள் ஓயாமல் அசைந்து கொண்டிருந்தன. தான் பேசி விடுவோமா அல்லது அழுது விடுவோமோ என்று பயந்து தன்னைக் கட்டுப்படுத்த முயன்றாள். மாமன் சொன்னார் : ''என்னுடைய மருமகளைப் பற்றிப் பேசவே இங்கு வந்துள்ளேன். அவள் சில ஆண்டுகளுக்கு முன் தன்

கணவனை இழந்தாள்; தொடர்ந்து தன் மகனையும் இழந்தாள். அதனால்தான் இவ்வோயா அழுகையும், வயதுமிக்க தோற்றமும். என்ன செய்வதென்று அறியோம். மருத்துவர்களின் வழக்கமான நல்லுரைகளும் பலனளிக்க வில்லை. மற்ற குழந்தைகளிடமும் தொடர்பு குறைந்து வருகிறது. உடல் மெலிந்தும் வருகிறாள். இவையாவும் எங்கே போய் முடியும் எனத் தெரியவில்லை. உம்மைப் பார்க்க வேண்டும் என்று பிடிவாதமாக வந்திருக்கிறாள்.''

''என் கணவரை நான்காண்டுகளுக்கு முன்னர் இழந்தேன். அவர் ஒரு மருத்துவர். புற்றுநோயால் இறந்து போனார். அவர் அதை எங்களிடமிருந்து மறைத்து வைத்திருந்தார் – கடைசி ஓராண்டிலேயே இவ்விவரம் எனக்குத் தெரியவந்தது. நோய் வேதனையைக் குறைக்க 'மார்பீன்' மற்றுஞ்சில வலித் தடுப்புகளை மருத்துவர் கொடுத்தும் வலி தாளாமல் தொல்லைப்பட்டார். என் கண் முன்னால் உலர்ந்து இறந்துபோனார்.'' கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியாமல், இவ்வாறு கூறி நிறுத்தினாள்.

மரக் கிளையில் புறா ஒன்று மெதுவாகக் கூவிக்கொண்டு இருந்தது. சாம்பல் பழுப்பு நிறம் – சிறிய தலை – பெரிய உடல் – மிகப் பெரிதன்று – புறாவிற்குரிய அளவே. இச்சமயம் அது பறந்து சென்றது. புறா பறந்ததில் அக்கிளை மேலும் கீழும் ஆடியது.

''என்னால் இத்தனிமையைத் தாங்க இயலவில்லை, அவர் அற்று இந்த பொருளற்ற வாழ்க்கை வாழ முடிய வில்லை. என் குழந்தைகளிடம் அன்பு உண்டு. எனக்கு மூன்று குழந்தைகள். ஒரு மகனும், இரு மகளும். சென்றாண்டு தனக்கு உடல்நலமில்லை என்று என் மகன் பள்ளியிலிருந்து கடிதம் எழுதியிருந்தான். தொடர்ந்து சில நாட்களுக்குள் தலைமை ஆசிரியர் என் மகன் இறந்துவிட்டதாக தொலைபேசியில் தெரிவித்தார்.''

இப்பொழுது கட்டுப்படுத்த முடியாமல் அவள் விம்மினாள். ''எனக்கு உடல்நிலை சரியில்லை, நான் வீட்டிற்கு வர ஆசைப்படுகிறேன், நீ நலமென எண்ணு கிறேன்'' என்று மகன் எழுதிய கடிதத்தைக் காண்பித்தாள். அவள் மகன் அவளைப் பற்றி அக்கறை கொண்டவன். அந்நிலையில் அவளைப் பிரிந்து பள்ளிக்குச் செல்ல விருப்பமில்லை. தாயுடன் இருக்கவே விரும்பினான். தன்னுடைய துயரம் அவனைப் பாதிக்கும் என்று இப்பெண்ணே அவனைப் பிடிவாதமாகப் பள்ளிக்கு அனுப்பி வைத்தாள். காலந்தாழ்ந்த நிகழ்ச்சி – நடந்துபோன செயல். பெண் குழந்தைகள் மிகச் சிறியவர்களாக இருந்ததால் இந்நிகழ்வின் கடுமையை முழுமையாக அவர்கள் உணரவில்லை. திடீரென விம்மினாள். ''என்ன செய்வதென்றே தெரியவில்லை. வாழ்க்கையின் அடிப்படையையே இந்நிகழ்ச்சி உலுக்கியுள்ளது. வீடு கட்டுவதைப் போன்று எங்கள் இல்லற வாழ்வைக் கவனத்தோடு உருவாக்கினோம். ஆழ்ந்த அடிக்கல் நாட்டினோம். இப்பொழுது இக்கொடுந்துயர் எல்லாவற்றை யும் தகர்த்தெறிந்துவிட்டது.''

மாமன் பண்டை வழக்கமுள்ளவராயும், அதில் ஆழ்ந்த நம்பிக்கையுடையவராயும் இருக்க வேண்டும். அவர் சொன்னார் : ''கடவுள் இக்கொடுமையை அவள் மீது அனுப்பி வைத்திருக்கிறார். செய்ய வேண்டிய சடங்குகள் எல்லாம் செய்தும் அவை அவளுக்கு உதவுவதாக இல்லை. நான் மறு பிறவியில் நம்பிக்கையுள்ளவன். அது அவளுக்கு ஆறுதல் அளிக்கவில்லை. அதைப் பற்றிப் பேசக்கூட விரும்பவில்லை. இவை யாவும் அவளுக்குப் பொருளற்ற தாகவே இருக்கிறது. எங்களாலும் அவளைத் தேற்ற இயலவில்லை.''

நாங்கள் சிறிது நேரம் அமைதியாக இருந்தோம். அவளுடைய கைக்குட்டை நனைந்து போயிருந்தது. டிராயரிலிருந்த புதிய கைத்துணி அவள் கன்னத்தில் விழுந்த

கண்ணீரைத் துடைக்க உதவிற்று. சிவப்பு போகன்வில்லா சாளரத்தின் வழியே எட்டிப் பார்த்தது – ஒளி பெற்ற தெற்கின் வெளிச்சம் ஒவ்வோர் இலை மீதும் படிந்தது.

நீர் இதைப்பற்றி உண்மையில் பேச விரும்புகிறீரா? உள்ளாழ் மனத்தால் இதை வேருடன் அறிய விரும்புகிறீரா? அல்லது சில விளக்கங்களாலோ, அறிவுடைய விவாதங்களாலோ, ஆறுதலான சொற்களாலோ, தேறுதல் பெறவோ, துயரிலிருந்து விடுபட்டு வேறு நினைவுகளில் ஈடுபடவோ நினைக்கிறீரா?

''நான் ஆழ்ந்தறியவே விரும்புகிறேன். ஆனால், நீர் கூறப்போகும் உண்மையை எதிர்நோக்க என்னிடம் ஊக்கமும், திறமையும் இருக்கிறதா என்று தெரியவில்லை. என் கணவர் இருக்கையில் உங்கள் உரைகளைக் கேட்க வந்திருக்கிறோம். ஆனால், இப்போது தொடர்ந்து உங்களைப் புரிந்துகொள்வது கடினமாக இருக்கலாம்.''

நீர் ஏன் துயர் அடைகிறீர்? இதற்கு விளக்கம் உடனே அளிக்காதீர். ஏனெனில், எந்த விளக்கமும் வெறும் சொற்களைக் கொண்டு உணர்வுகளை விளக்க ஒரு கட்டுக் கதையேயன்றி உண்மை நிகழ்வாகாது. அதனால் நாம் கேட்கும் வினாவுக்கு விடையளிக்காதீர். சற்றே ஆழ்ந்து கேளுங்கள், நீராகவே இதற்கு விடை காணுங்கள். யாராயினும், ஏழை அல்லது செல்வராயினும், நாட்டில் வலிமை மிக்கோராயினும், இரந்துண்ணுவோராயினும், ஒவ்வொரு வீட்டிலும் சாவினால் ஏற்படும் துயர் ஏன்? இக்கண்ணீர் உங்கள் கணவருக்காகவா – அன்றி, உங்கள் பொருட்டேயா? நீங்கள் ஒருவரை நினைத்து அழுகையில் அக்கண்ணீர் அவருக்கு உதவுமா? உங்களைப் பிரிந்து மாற்றவொணா வகையில் காலஞ்சென்றுவிட்டார். உங்கள் முயற்சி அவரை மீட்டு வராது. கண்ணீர், நம்பிக்கை, சடங்குகள், அல்லது தெய்வங்கள் – இவை எவற்றாலும் அவரை மீட்க இயலாது. அவ்வாணித்தரமான உண்மையை

நீர் ஒப்புக்கொள்ள வேண்டும். நீர் வேறு ஒன்றுமே செய்ய முடியாது. நீங்கள் அழுவது உங்களுக்காகவேயன்றோ? உங்கள் தனிமையை நோக்கியும், உங்கள் வெறுமையான வாழ்வை நோக்கியும், புலனுணர்வுகளின் இன்பத்தை இழந்தலாலும், கூடி வாழ்ந்த நினைவுகளாலும் அல்லவோ கண்ணீர் வடிக்கிறீர்? வெறிச்சிட்ட உங்கள் வாழ்க்கையாலும், தன்னிரக்கத்தினாலும் அன்றோ இக்கண்ணீர்? இப்பொழுதுதான் முதல் முதலாக உங்கள் உள்ளத்தின் ஏழ்மையை உணருகிறீர். நீர் முதலீடு செய்ததெல்லாம் 'கணவன்' என்ற பொருளிலேயே என்பதை மெள்ளச் சுட்டிக் காட்டுகிறோம். இத்தகைய ஏற்பாடு உங்களுக்கு ஆறுதலையும், மன நிறைவையும், இன்பத்தையும் அளித்திருக்கிறது அன்றோ? நீர் இப்போது உணரும் இழப்பின் துயரம், தனிமையின் தவிப்பு, ஏக்கம் இவையெல்லாம் தன்னிரக்கத்தின் வடிவங்களே அன்றோ? நன்றாகப் பாரும் – உடனே உள்ளத்தை இறுக்கிக் கொண்டு, ''நான் என் கணவரை நேசித்தேன், சிறிதும் தன்னலங் கொண்டவளன்று. அவரைக் காப்பாற்றவே பாடுபட்டேன்; பலமுறை அவரை ஆதிக்கம் செய்ததுண்டு, அதுவும் அவர் நன்மைக்காகவே செய்தேனேயன்றி, என்னைப் பற்றி நான் நினைத்ததேயில்லை,'' என்று கூறாதீர். இப்பொழுது அவர் சென்றுவிடவும் உம்முடைய உண்மை நிலை உமக்கு நன்கு தெரியவருகிறது இல்லையா? அவருடைய இறப்பினால் ஏற்பட்ட அதிர்ச்சி உங்கள் உள்ளம், மனம் இவற்றின் உண்மை நிலையைக் காட்டுகிறது. நீர் இதைக் காண விரும்பாமல் இருக்கலாம். அச்சத்தின் காரணமாக ஒதுக்கியும் விடலாம்; ஆனால், நீர் சற்றே காண இசைந்தால் உம் தனிமைத் தவிப்பினாலேயே அழுகிறீர், உள்ளத்தின் ஏழ்மையைக் கண்டு அழுகிறீர். இது தன்னிரங்கலின் செய்கையேதான் என்பதைத் தெரியக்கூடும்.

''நீர் கொஞ்சம் கொடுமையானவர் இல்லையா?'' என்று அவள் கூறினாள். ''நான் மனந்தேறவே இங்கு வந்தேன். ஆனால் நீர் தருவதோ வேறொன்று.''

இது பலருக்கும் உள்ள மயக்கந்தான். அதாவது, மன ஆறுதலை மற்றொருவரால் பெற முடியும் அல்லது நீரே தேடி அவ்வாறுதலை அடைய முடியும், என்பது போன்ற எதுவுமே கிடையாது. இதைச் சொல்ல அஞ்சுகிறேன். ஆறுதலைத் தேடுவது என்பது மாயையில் வாழ்வதாகும். அம்மயக்கம் விலகிப் போனதும் உங்களுக்கு வருத்தம் ஏற்படுகிறது. ஏனெனில், நீர் ஆறுதல் என நினைப்பது உங்களிடமிருந்து எடுக்கப்பட்டு விட்டது. துயரத்தைக் கடக்கவோ, புரிந்துகொள்ளவோ விரும்பினால், உண்மையில் உமக்குள் என்ன நடக்கிறது என்பதைக் கண்டறிய வேண்டும். அதை மறைத்தலாகாது. இதைச் சுட்டிக் காண்பித்தல் கொடுமையாகுமா? இது அருவருப்பும், நாணமுமுள்ள செய்கையல்ல. இதைத் தெளிவாக நீர் காண்பீரானால், உடனே துயர் துடைக்கப் பெற்று, சிறு காயமும், வடுவுமின்றிச் சென்று போன வாழ்க்கையின் சுவடுகளால் தீண்டப்பெறாது, புதியவராக வெளி வருவீர். யாருக்கும் இறப்பைத் தவிர்க்க முடியாது. அதிலிருந்து மீண்டவர் ஒருவருமில்லை. அதைத் தவிர்க்க வேண்டி நம்பிக்கைகள் பலவற்றில் ஒட்டிக் கொண்டு நாம் அதை விளக்க முயலுகிறோம். உம்மாலியன்றதையெல்லாம் செய்துபாரும். அது உம்மைவிட்டு அகலாது. இறப்பு நாளையோ, தவறினால் சற்று தூரத்திலே ஒரு மூலையில் அல்லது இன்னும் சில ஆண்டுகளுக்குப் பின்னரோ எந்நேரமாவது நேர்ந்தே தீரும். வாழ்க்கையின் மிகப் பெரிய இவ்வுண்மையோடு நாம் உறவு கொண்டேயாக வேண்டும்.

''ஆனால்...'' என்றார் மாமன். அத்துடனே வழிவழி வந்த நம்பிக்கையான ஆத்மா, ஜீவாத்மா என்றும் தொடர்ந் திருக்கும் பொருள் – நித்தியமான பொருள்' – இவ்வார்த்தை கள் வெளிவந்தன. அவர் தமக்கு மிகப் பிடித்தமான, சாமர்த்தியமான வாதத்தை மேற்கோள்களுடன் காட்டினார். திடீரென நிமிர்ந்து அமர்கையில் சொற்போருக்குத் தயாராகும் ஒளி அவர் கண்களில் பளிச்சிட்டது. இரக்கம்,

அன்பு மற்றவரைப் புரிந்துகொள்ளும் தன்மை அவரைவிட்டு விலகின. தான் தூய்மை என்று கருதும் நம்பிக்கைகளாலும், பாரமான வரையறுபாடுகளால் தேய்ந்து தடங்கண்ட மரபு வழிகளாலும் வலிவடைந்த நிலையிலிருந்த அவர், ''ஆத்மா ஒவ்வொருவரிடமும் உள்ளது. இது திரும்பத் திரும்பப் பிறவிகள் எடுத்தே தீரும் – அதாவது தானே 'பிரஹ்மம்' என்றுணரும்வரை. நாம் துயரத்தின் வழியாகவே இவ்வுண்மையை உணர முடியும். நாம் மாயையில் வாழ்கிறோம். உலகமும் மாயையே. உண்மை ஒன்றே ஒன்றுதான்.'' இவ்வாறு கூறியடங்கினார்.

அவர் சொல்வதை அவ்வளவாகக் கவனிக்காமல் அப்பெண் என்னை நோக்கினாள். அவள் முகத்தில் சிறுநகை அரும்பத் தொடங்கியது. நாங்கள் இருவரும் மீண்டும் திரும்பி வந்த புறாவையும் சிவப்பாய் ஒளிர்ந்த போகன்வில்லாப் பூக்களையும் பார்த்தோம்.

இம்மண்ணிலோ நம்மிடையேயோ நிலையானது என்று ஒன்றுமில்லை. எண்ணம் தான் நினைக்கும் எப்பொருளுக்கும் தொடர்ச்சியைத் தரக்கூடும். அது ஒரு சொல்லுக்கும் அன்றி கருத்துக்கும், மரபுரிமைக்கும் கூட தொடர்ச்சியைத் தரக்கூடும். எண்ணம் தான் நிலையானது என்று எண்ணுகிறது. ஆனால், அது நிலையானதா? நிலைத்து நிற்கக் கூடியதா? எண்ணம் என்பது நினைவின் மறுமொழியே, ஆக அந்நினைவும் நிலையானதா? கற்பனைத் தோற்றத்தை எண்ணமே கொடுத்து, அதை ஆத்மா என்றும் அல்லது வேறு ஏதாவதொரு பெயரிட்டும் அழைக்கிறது. எண்ணமே, கணவன் அல்லது மனைவியின் முகத்தை நினைவுக்குக் கொண்டுவந்து அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுகிறது. இவை யாவும் எண்ணத்தின் செய்கைகளே. இதனால் விளைவது அச்சம். அது நிலையான ஒன்றைத் தேடியலைகிறது. நாளைக்கு உணவு கிடைக்குமோ, இருக்க நிழல் இல்லாமல் போய்விடுமோ என்ற அச்சம், இறப்பின்

அச்சம். இந்த அச்சமும் எண்ணத்தின் விளைவே. பிரஹ்மமும் எண்ணத்தின் விளைவே.

மாமன் கூறினார் : ''நினைவும், எண்ணமும் மெழுகு வத்தியைப் போன்றவை. அதை அணைக்கலாம், மீண்டும் ஏற்றலாம். ஒன்றை மறந்து பின் நினைவுக்கும் கொண்டு வரலாம். நாம் இறக்கிறோம். திரும்பவும் பிறக்கிறோம். மெழுகுவர்த்தியின் சுடர் கணத்திற்குக் கணம் வெவ்வேறான தாயினும் – ஒன்றே போல் காண்கிறது. ஆகவே, அதில் தொடர்ச்சியின் தன்மையைக் காண முடிகிறது.''

ஆனால், அணைந்து போன சுடர், புதிய சுடரைப் போன்றதன்று. பழமையின் இறப்பிலே புதுமை பிறக்கின்றது. பழையதை மாற்றியமைத்து தொடர்ச்சி என்ற ஆயிரக்கணக்கான கடந்த நாட்களை புதியனவாகச் செய்ய இயலாது. மெழுகுவர்த்தியும் தன்னை எரித்தே முடிவடை கிறது. புதுமை இருக்க வேண்டுமானால் எப்பொருளும் முடிவடைதல் வேண்டும்.

மாமன் இப்பொழுது மேற்கோள்களையும், நம்பிக்கை களையும், மற்றவர் கூறியவற்றையும் கையாள முடியாததால் தமக்குள் பின்வாங்கியவராய்ச் சிக்குண்டு சினந்தவராய்க் காணப்பட்டார். தன்னை நேருக்கு நேர் கண்டும் தன்னுடைய மருமகளைப் போன்றே அதைக்காண இசையவில்லை.

''இப்பொழுது கூறியவற்றில் நான் அக்கறை கொள்ள வில்லை'' என்று அவள் கூறினாள். ''நான் மிகத் துன்பமடைந்துள்ளேன். என் கணவரையும், மகனையும் இழந்தேன் – என்னிரு குழந்தைகளே மீதம், நான் என்ன செய்வேன்?''

நீர் உம் குழந்தைகளிடம் அக்கறை கொண்டவராக இருந்தால், உம்மைப் பற்றியும், உம்முடைய துன்பத்தைப் பற்றியும் அக்கறை கொள்ளமாட்டீர். அவர்களை நன்றாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். சரியான கல்வியளிக்க

வேண்டும். எல்லோரையும் போல் அன்றி நன்றாக வளர்க்க வேண்டும். நீர் 'கணவரிடம் அன்பு' என்றழைக்கும் உம்முடைய தன்னிரக்கத்திலேயே எரிந்து மாண்டு போய், தன்னந்தனிமையில் அடைந்து கொள்ளும்போது மற்றிரு குழந்தைகளையும் அழிவுக்கு அழைத்துச் செல்கிறீர். அறிந்தோ அறியாமலோ நாமனைவரும் மிக்க தன்னலங் கொண்டவர்கள். நாம் நினைத்தவற்றையெல்லாம் அடையும்வரை யாவும் சரிவரயிருப்பதாக எண்ணுகிறோம். ஆனால், எதிர்பாராத விதமாகச் சிதறியடிக்கும் நிகழ்ச்சியொன்று நேருமானால் நம்பிக்கையிழந்து, வேறு ஏதாவது தேறுதல் கிடைக்குமா என்று நம்பி அழுகிறோம்; அந்நம்பிக்கையோ மறுபடியும் சிதறக் கூடியது. இவ்வாறாக இது தொடர்ந்து நிகழும். நீர், இதன் முழுமையான இடர்களையெல்லாம் அறிந்தபோதிலும், இதில் சிக்கிக் கொள்ள விரும்பினால், அவ்வழியேச் செல்லுங்கள். இந்த அசட்டுத்தனத்தை நீர் பார்த்தால், இயல்பாகவே அழுவதை நிறுத்தி, உம்மைத் தனிமைப்படுத்திக் கொள்வதையும் நிறுத்தி, உம் குழந்தைகளுடன் புத்தொளி பெற்று புன்னகையுடன் வாழ்வீர்.





## இந்தியா - 5

**மோ**னம் பல தன்மைகளுடையது. இரு ஒலிகளுக்கு மிடையேயுள்ள மோனம் - இரு சுரங்களுக்கு நடுவே மோனம்; இரு எண்ணங்களுக்கிடையே விரிந்து அகலும் மோனம், தனக்கே உரித்தான அடக்கமான, நாட்டுப் புறங்களில் மாலை வேளையில் எங்கும் உட்புகுந்து பரந்திருக்கும் மோனம்; தூரத்தில் நாய் குரைப்பதையும், செங்குத்தான ஏற்றத்தின் மீதேறும் ரயிலின் ஊதலையும், தன்னுள் ஊடுருவி நிற்கும் மோனம்; வீட்டிலுள்ளோர் அனைவரும் உறங்கியதும் நிலவும் மோனம்; நாம் நள்ளிரவில் கண் விழிக்கப் பெற்று - மலைத்தாக்குகளில் ஆந்தையின் அகவலைக் கேட்கும்பொழுது தனக்குரித்தான அழுத்தத்துடன் உள்ள மோனம்; இணையாந்தை அதற்கு மறுகுரல் கொடுப்பதற்குமுன்னுள்ள மோனம்; பாழடைந்த வீட்டின் மோனம்; அசையா மலையின் மோனம்; ஒரு பொருளை, ஒருமிக்கக் கண்டும், உணர்ந்தும், செயலாற்றி யும் உள்ள இருவரிடையே நிலவும் மோனம்.

தமக்கே சிறப்பான கல்லுருவங்களைக் கொண்ட அப்பழமையான மலைகளின் நடுவில், அன்றிரவு குறிப்பாக நிலவிய மோனம், நாம் அருகிலுள்ள சுவரைத் தொடுவது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாக இருந்தது. சாளரத்தின் வெளியே சுடர்விடும் விண்மீன்களை நோக்கி னோம். தன்னால் உண்டான மோனமன்று; சிற்றூர்கள் தோறும் மனித இனம் உறங்கி மன அமைதியடைந்ததின் மோனமுமன்று; அம்மோனம் ஒவ்வொரு இடத்திலிருந்தும், வான்வெளிச் சுடர் மீன்களிடமிருந்தும் கரிய மலைகளி

லிருந்தும், நம் மனத்திலிருந்தும், உள்ளத்திலிருந்தும் வந்தது. வானம் பொழிந்தால்தான் உயிரோட்டம் என்றுள்ள அவ்வோடையின் மிகச் சிறிய மணற்படுகைகளிலிருந்து, நெடிதுயர்ந்து விரிந்த ஆலமரம் வரை அம்மோனம் பரந்திருந்தது. அக்கணம், மென்காற்று சற்றே வீசத் தொடங்கியது. ஒலியாலும், எண்ணத்தினாலும் அனுபவம் என்ற காற்றினாலும் தீண்ட வொண்ணாத் தன்மையே மனத்தின் மோனம். இம்மௌனம் கள்ளமற்றது எனவே முடிவும் அற்றது. மனத்தின் மோனம் இத்தன்மையதாயின் அதிலிருந்து வெளிவரும் செயலும் கலக்கத்தையோ, துன்பத்தையோ விளைவிக்காது.

முழுமையான மோனத்தையுடைய மனத்தின் தியானம், மனம் என்றென்றும் தேடும் நீள் விசும்பின் நல்லாசி யாகும். இம்மோனம் எல்லா வகை மோனங்களின் பண்பை யுடையது.

வழிபடுவோர்களும், பயணிகளுமற்ற கோவிலிலும் நாட்டின் மிக உட்புறத்தேயுள்ள மனிதரற்ற மாதாக் கோவிலிலும் உள்ள மௌனம் விந்தையானது. நீர்ப்பரப்பின் மேல் படிந்திருக்கும் ஆழ்ந்த மௌனமும் மனத்தின் மோனத்திற்கு அப்பாற்பட்டது.

தியானமுள்ள மனம், எல்லாவித மாற்றங்களையும் தன்னுள் கொண்டதும், எல்லா வகையான மௌனங்களின் ஒட்டத்தையும் தன்னுள் அடக்கியதுமாகும். உண்மையில் மெய்ப்பொருள் கண்டாரின் மோனமே இத்தகைய மோனம், இதுவே விண்ணின் மோனம். மண்ணின் மோனமும் அதுவே. இத்தகைய மௌனத்திலேயே தியான உள்ளம் பெருகியோடும். அன்பும் இம்மனத்தின் வழியாகும். பேரின்பமும் களியாட்டமும் இப்பரமோனத்திலேதான்!

அந்த மாமன் மறுபடியும் வந்தார். ஆனால், இம்முறை கணவனை இழந்த மருமகள் அவருடன் வரவில்லை.

இம்முறை சற்றுக் கவனத்துடன் உடையணிந்திருந்தார். முன்பைவிடப் பதற்றத்துடனும், கவலையுடனும் காணப்பட்டார். பொறுப்புணர்ச்சியும், ஆவலும் மிகுந்த முகம் கருமையுற்றிருந்தது. நாங்கள் அமர்ந்திருந்த தரை சற்றுக் கடினமாக இருந்தது. சிவப்பு போகன்வில்லாவும் அங்கிருந்தது. அந்தப் புறாவும் சில நேரத்தில் இங்கு வரலாம். அதே மரக்கிளையில் அதே இடத்தில் தன் முதுகை சாளரத்துக்குக் காண்பித்து, தலையைத் தெற்கே சாய்த்து உட்காருவதும், மென்குரலில் கூவும் ஒலி சாளரத்துக்குள் புகுந்து வருவதும் வழக்கமாய் இருந்தது.

''உயிரின் அழியா நிலையைப் பற்றியும், அதன் முழுமையைப் பற்றியும், அது மெள்ள மெள்ள மேம்படுத்திச் செம்மையடையும் வாழ்க்கைத் தத்துவத்தின் பேருண்மையைப் பற்றியும் உங்களுடன் பேச விரும்பு கிறேன். நீங்கள் அன்று கூறியதிலிருந்து, மெய்ப்பொருளை நேருக்கு நேர் கண்டவரென அறிந்தேன். நாங்களோ அறியாமையினால் நம்பிக்கை மட்டுமே கொள்கிறோம். உண்மையில் எங்களுக்கு 'ஆத்மாவைப்' பற்றி ஒன்றுமே தெரியாது; அச்சொல் மட்டுமே அறிமுகமானது. அடையாளமோ, இடுகுறியோ உண்மையென ஆகிறது; நீங்கள் இடுகுறியைப் பற்றி விளக்கியதும் எங்களுக்குப் பயம் உண்டாகியது. அச்சமுள்ள போதிலும் இடுகுறியை இறுகப் பற்றிக் கொள்கிறோம். ஏனெனில், எமக்குக் கற்றுக் கொடுத்ததும், முன்னால் ஆசிரியர்களால் உரைக்கப் பட்டதும் எப்போதும் சுமையாகி நிற்கும் வழிவழி மரபுரிமைகளே. இதைத் தவிர வேறொன்றும் தெரியாது. முதலிலே என்றுமழியாததான மெய்ப்பொருளென்று ஒன்றுளதா, இவ்வுண்மையை ஆத்மா, ஜீவாத்மா என்று எப்பெயரிட்டு அழைத்தாலும் சரி, இறந்ததற்குப் பின்னரும் தொடர்ந்துள்ள பொருள் ஒன்று உள்ளதா என்பதையே தெரிந்துகொள்ள விரும்புகிறேன். நான் சாவைக் கண்டு அஞ்சவில்லை. என் மனைவியை இழந்ததால், 'இறப்பு'

என்பதை நன்கு கண்டுள்ளேன். ஆனால், 'ஆத்மா'வின் உண்மையைப் பற்றி அறிய ஆவல் கொண்டுள்ளேன். இத்தகைய அழியாப் பொருள் என்னிடத்தே உளதா?''

நாம் 'நிலையாயுள்ள பொருள்' என்பதைப் பற்றிப் பேசுங்கால் அதைச் சுற்றி இடையறா மாறுதல்கள் இருந்தபோதிலும், பலவித அனுபவங்கள், பலவிதக் கவலைகள், இடர்கள், துயரங்கள், அல்லல்கள் இவற்றை அடைந்தபோதிலும், ஏதோ ஒன்று தொடர்ந்து இருக்கை பெற்றதாக அல்லவா புரிந்துகொள்கிறோம்? அழியாத் தன்மையுள்ள ஒன்று உண்டா? முதலிலே அதை எவ்வாறு கண்டுபிடிப்பது? எண்ணங்களாலும், சொற்களாலும் அதைத் தேடியடைய முடியுமா? நிலையாயுள்ள ஒன்றை நிலையற்ற ஒன்றைக் கொண்டு கண்டறிய முடியுமா? இடையறா மாறுதல்களையடையும் எண்ணங்களால் மாறுதலேயற்ற ஒன்றைக் காண முடியுமா? எண்ணம் – ஒரு தோற்றத்திற்கு அல்லது கருத்திற்கு – ஆத்மா – ஆவி – உயிர் இவைகளுக்கு அழியா நிலையை என்றும் கொடுக்கக் கூடும்; இவை மெய்யே என்று உணர்த்தும் வன்மையும் அதற்குண்டு. ஏன்? எண்ணம் இந்த இடையறா மாறுதலைப் பற்றிய அச்சத்தால் அழியாப் பொருளொன்றைத் தேடியலைகிறது; அதாவது மனிதர்களுக்கிடையில் உள்ள உறவை, அன்பை, காதலை நிலையாக்க முயலுகிறது. எண்ணம், ஒரு அழியும் பொருள்: மாறிக் கொண்டேயிருப்பது. அது 'நிலையானது' என்று செய்யும் ஏற்பாடு எதுவும் நிலைத்திருக்க முடியாது. ஏனெனில் எண்ணத்தைப் போலவே அவையும் நிலையற்றவை. எண்ணம் எந்த நினைவையும் வாழ்வு முழுவதும் பற்றிக் கொள்ளும் திறனுடையது: அந்நினைவையே 'என்றுமுள்ளது' எனக் கூறி, பிறகு அது இறப்பின் பின்பும் தொடர்ந்து இருக்குமா என்றும் வினவுகிறது. எண்ணமானது 'இந்நிலை'யை உருவாக்கி, அதற்கு நீடித்திருக்கும் தன்மையையுங் கொடுத்து, நாள்தோறும் அதை நன்கு வளர்த்து அதனுடன் ஒன்றி நிற்கிறது. காட்சிப்

பிழைகளிலேயே மிகப் பெரிய பிழை இதுவேதான். ஏனெனில், எண்ணம் 'கால சக்தியைக் கொண்டு வாழும் ஒன்று. நேற்றைய நிகழ்ச்சிகளை இன்றும், மற்றும் நாளைக்கும் நினைவு கூர்கிறது. இதுவே காலத்தின் விளைவு – ('காலம்' பிறத்தலும் இதனால்தான்) – ஆகவே காலத்தின் அழியா நிலையும், மெய்வழியடைய வேண்டித் தன்னால் உருவாக்கிய கருத்துக்கும் அழியா நிலை ஏற்படுகிறது. அச்சம் – காலம் – அருஞ்செயல்கள் – இவையனைத்தும் எண்ணத்தின் படைப்புகளே.

''இத்தகைய எண்ணங்களை உருவாக்கும் எண்ணுபவன் யார்?''

எண்ணுபவன் என்று யாராவது இருக்கிறானா? அல்லது எண்ணம் பலவற்றைச் சேர்த்து முடித்து வைக்கும் ஏற்பாடே எண்ணுபவனா? இவ்வாறு எண்ணுபவன் என்பதை நிறுவி, அதை நிலைநிறுத்த வேண்டி, ஆத்மா, ஆவி இவற்றை ஏற்படுத்துகிறது.

''நான் நினைப்பதை நிறுத்தினால், 'நான்' எனும் பொருள் ஒன்றுமே இல்லை என்றா கூறுகிறீர்?''

இயல்பாகவே நினைவு முற்றுமொழிந்த நிலை உங்களுக்கு எப்பொழுதாவது ஏற்பட்டிருக்கிறதா? அந்நிலையில் உங்களுக்கு, உங்களைப் பற்றி – எண்ணுபவன், காண்பவன், துய்ப்பவன் என்ற உணர்வு ஏற்பட்டுள்ளதா? எண்ணம், நினைவுகளின் மறுமொழி – நினைவுக் கூட்டங்களின் சேர்க்கையே எண்போன் என்ற உரு. நாம் யாரைப் பற்றி பல சந்தடிகளும், பரபரப்பும், கூச்சலும் உண்டாக்குகிறோமே அந்த 'நான் – எண்ணம் ஒழிந்த நிலையில் இருப்பைப் பெறுகிறதா? நாம் இங்கு பேசுவது மறதி நோயால் வாடும் ஒருவனைப் பற்றியோ, பகல் கோட்டைகளைக் கட்டி வாழும் ஒருவனைப் பற்றியோ அன்று. எண்ணத்தினால் நினைவுகளை அடக்கி,

அமைதியடையச் செய்யும் ஒருவனைப் பற்றியே இங்கு கூறுகிறோம். எண்ணம் அல்லது சொல் ஒழிந்தபொழுது மனத்தின் ஆழத்தின் அளவு வேறானது இல்லையா?

'' 'நான்' என்பது செயல்படாத வேளையில் - 'நான்' ஆதிக்கம் செலுத்தாத வரை - முற்றிலும் வேறான நிலை யொன்றிருப்பது திண்ணமே! 'நான்' செயல்படவில்லை - அதனால் 'நான்' என்ற பொருள் இல்லை என்பதாகுமா?''.

'நான்' என்பது கட்டாயமாக இருக்கிறது! 'நான்' அஹங்காரம், நினைவின் மூட்டைக் கட்டுகள் இவை இருக்கின்றன. சூளுரையின் மறுமொழியாக அது ஆகும்பொழுது நாம் அதை நன்கு காண்கிறோம். தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டும், மறைவாகவும் அது இருக்கக்கூடும். ஆனால், திரும்பவும் இடர்வரவு நோக்கிப் பதிலுரைக்கக் காத்திருக்கும். பேராசை உடையவன் தன்நேரத்தில் பெரும்பான்மையான பகுதியைப் பேராசை யிலேயே கழிக்கிறான். சில நொடிகள் செயல்புரியாமல் இருந்தபோதிலும் அது அங்கே இருந்து கொண்டே யிருக்கும்.

''எந்த உள்ளிருப்பு பேராசையாக வெளிவருகிறது?''

அதுவும் பேராசையே - அவை இரண்டல்ல.

'நீர் கூறும் அஹங்காரம், 'நான்', தன் நினைவு, அதன் பேராசை, அதன் உரிமை நாட்டம், அந்த அஹங்காரத்தின் பலவிதத் தேவைகள் இவைகளைப் புரிந்துகொள்கிறேன். ஆனால், இந்த அஹங்காரத்தைத் தவிர வேறொன்றும் இல்லையா? இந்த 'நான்' இல்லாத நிலையை மறதி பாழ் என்றா கூறுகிறீர்.?'

அக்காகங்கள் கரைவதை நிறுத்தியபொழுதும் ஏதோ ஒன்று இருக்கிறது... அந்த 'ஏதோ ஒன்று' மனத்தின் கிசுகிசுப்புக்களேயாம்; அதாவது சிக்கல்கள், கவலைகள், பிணக்குகள், இப்பொழுது கேட்கப்படும் 'மரணத்துக்குப்

பின் இருப்பது என்ன' என்ற கேள்வி இவை யாவும். பேராசை, பொறாமை இவைகளிலிருந்து விடுபட்ட மனத்தினாலேயே இக்கேள்விக்கு பதிலளிக்க முடியும். நாம் இப்பொழுது அக்கறைகொண்டிருப்பது 'நான்' என்பதின் அடைமொழிகள் அழிந்து போவதைப் பற்றியேயொழிய, நான் முடிவுற்றதும், எஞ்சியிருப்பது என்ன என்ற கேள்வியன்று. கேள்வி இதுதான். உண்மை என்ன என்பதைப் பற்றியோ அல்லது நிலையான பொருள் உள்ளதா, என்றுமுளதா என்பதைப் பற்றியோ அன்று. பண்பாட்டினால் வரையறுக்கப்பட்டு அப்பண்பாட்டிலேயே வாழும் மனம், அத்தகைய பண்பாட்டை உருவாக்கும் பொறுப்பை உடைய மனம் இவற்றிலிருந்தெல்லாம் தன்னைத்தானே விடுவித்துக்கொண்டு மெய்யென்பதைக் கண்டுபிடிக்க முடியுமா என்பதே கேள்வி.

''அவ்வாறானால் என்னை விடுவித்தல் எவ்வாறு?''

உம்மை விடுவித்துக்கொள்ள முடியாது. நீரே இத்துயரத்தின் விதை. 'எவ்வாறு' என்று கேட்கும்பொழுது, 'நீர்' என்ற ஒன்றை அழிப்பதற்காக ஒரு வழியைத் கேட்கிறீர். அவ்வாறு 'நீர்' என்பதை அழிக்கும் முறையினாலேயே மற்றொரு புதிய 'நீர்' என்பதையும் படைக்கிறீர்.

''நீர் அனுமதித்தால் அழியாப்பேறு என்பதென்ன என்ற கேள்வியைக் கேட்க விரும்புகிறேன். சாவு என்பது இறப்பாகும். துயர், துன்பம் இவற்றுடன் கூடிய வாழ்க்கைப் பாதையே சாவாகும். மனிதன் இடையறாது அழியாப் பொருள், இறப்பிலா ஒன்றைத் தேடுகிறான்.''

ஐயா! மறுபடியும் காலத்திற்கும், எண்ணத்திற்கும் அப்பாற்பட்ட பொருளைப் பற்றிக் கேட்கிறீர். எண்ணங்களைக் கடந்துள்ளது கள்ளமில்லா எளிமை, எண்ணமோ அது எவ்வளவு முயன்றாலும் அந்நிலையைத் தீண்ட இயலாது. ஏனெனில் எண்ணம் எப்பொழுதும் பழமையானது. எளிமை என்னும் கள்ளமின்மை அன்பைப்

போலவே இறப்பற்றது. அந்த எளிமை நிலைத்து நிற்க மனம் பல்லாயிரக்கணக்கான நென்னல்களையும், அவையொட்டிய நினைவுகளையும் முற்றுமிழக்க வேண்டும். வெறுப்பு, வன்முறை, விலங்குத்தனமான கொடுமைகள் இவை முற்றும் அற்ற நிலையே வீடு. நாம் இவற்றை வெளியேற்றாமல் அழியாப்பேறு, மெய், அன்பு என்பவை என்ன என்ற கேள்விகளை எவ்வாறு வினவுதல் கூடும்?





## இந்தியா - 6

தியானம் செய்ய முனைவீரானால் அது தியானமாகாது. நீங்கள் நல்லவராதல் வேண்டும் என ஆயத்தம் செய்தால், நன்மை மலராது. பணிவு பயிர் செய்யும் பொருளன்று. அவ்வாறு செய்தால் அது பணிவாகாது. சாளரத்தைத் திறந்து வைத்தால் உள்ளே வீசும் காற்றைப் போன்றது தியானம். நீர் வேண்டுமென்றே திறந்து வைத்தாலும், வலுக்கட்டாயமாக அழைத்தாலும் அது அங்கு காட்சி தராது.

தியானம் எண்ணத்தின் வழியன்று. ஏனெனில், எண்ணம் சாமர்த்தியமுள்ளது. எண்ணிலடங்கா வகையில் தன்னையே ஏமாற்றிக் கொள்ளும் திறனுள்ளது. ஆக, தியானம் தன் வழியிலிருந்து தவறிவிடும். தியானம் அன்பைப் போன்றே பின் தொடர முடியாத ஒன்று.

அக்காலை வேளையில் அந்த ஆறு அசைவற்றிருந்தது. மேகங்களையும், கார் காலத்தின் புதிய கோதுமைப் பயிர்களையும் அதற்கப்பாலுள்ள சிறு சோலைகளையும் அவ்வாற்று நீரின் ஒளி திருப்பத்தில் காணலாம். மீனவரின் சிறு படகும் அசைவற்ற அந்நிலையைக் கெடுக்கவில்லை. காலையின் அமைதி தரையின் மீது படிந்திருந்தது. இளம்பரிதி மரநுனிகளில் ஏறி வந்தது. தூரத்தில் யாரோ அழைக்கும் ஒலி, அருகே சமஸ்க்ருதம் ஓதுவதின் ஒலியும் காற்றில் மிதந்தது.

கிளிகளும், மைனாக்களும் இரை தேடத் தொடங்க வில்லை. கொட்டப் பருந்துகள் வெறிச்சிடும் கழுத்துக் களுடன் ஆற்றில் சவங்கள் மிதந்து வருவதை எதிர்பார்த்து

மரத்தின் மீது காத்திருந்தன. இறந்த விலங்கின் சடலம் மிதந்து வருவதையும், அதன் மீது ஓரிரு பருந்துகள் உட்கார்ந்திருப்பதையும், காகங்கள் தமக்கும் ஒரு பங்கு கிடைக்குமா என்று படபடப்பதையும் நீங்கள் அடிக்கடி பார்க்கலாம். நாய் ஒன்று நீந்திச் சென்று, ஆற்றில் கால்வைக்க இயலாமல், மறுபடியும் கரையடைந்து சுற்றித் திரிவதுண்டு. அவ்வழிச் செல்லும் ரயிலொன்று, 'கிரீச்'சிட்ட இரும்புச் சத்தத்துடன் நீண்ட பாலத்தின் மேல் போவதுமுண்டு. அதற்கப்பால், ஆற்றின் மேலோட்டத்தில் அந்நகரம் பரந்து அமைந்திருக்கிறது.

அமைதியான அக்காலை இன்பம் கொண்டதாய் இருந்தது. ஏழ்மை, நோய், துன்பம் இன்னும் சாலையில் நடமாடத் தொடங்கவில்லை. சிற்றாற்றின் மேல் ஆடு பாலம் ஒன்று; இச்சிற்றாறு அழுக்கும் பழுப்புமாய், பெரிய ஆற்றுடன் கலக்குமிடத்தில் (இது மிகமிக புண்ணியமெனக் கருதும் இடம்) - திருநாட்களில் ஆண், பெண், குழந்தைகள் கூட்டமாய் நீராட வருவார்கள். அதிகக் குளிர். அவர்கள் அதைப் பொருட்படுத்துவதில்லை. எதிரேயிருந்த கோவில் குருக்களுக்கு நல்ல வருவாய். அதுவே அருவருப்பின் தொடக்கமும்.

அவர் தாடி வைத்திருந்தார். தலையில் தலைப்பாகை. ஏதோ வியாபாரம் செய்பவர் – தோற்றத்திலிருந்து செல்வமுடையவராகவும், நன்கு ஊட்டம் பெற்றவராகவும் காணப்பட்டார். அவர் நடையும், நினைக்குந்திறனும் கூட சற்று மந்தமாக இருந்தது. அவருடைய செய்கைகளும், மறு செய்கைகளும் அதைவிட மந்தமாகவே இருந்தன. ஒரு சிறிய கருத்தையும் புரிந்து கொள்வது கடினமாக இருந்தது. அவருக்கென்றே ஒரு குரு இருப்பதாகவும், இவ்வழியே செல்கையில், இங்கு வர ஆவல் கொண்டு, தனக்கு முக்கியமெனத் தோன்றிய சில விஷயங்களைப் பற்றி உரையாட விரும்புவதாகவும் கூறினார்.

''நீர் ஏன் குரு, ஆசார்யர் இவர்களுக்கு எதிராகவே இருக்கிறீர்? அது நகைப்புக்குரியதாகக் காண்கிறதே? அவர்கள் அறிந்தவர்கள். எனக்கோ ஒன்றும் தெரியாது. எனக்கு வழிகாட்டவும், நான் என்ன செய்யவேண்டும் என்று கூறவும், என்னைப் பல தொல்லைகளிலிருந்தும், நோயிலிருந்தும் காப்பாற்ற அவர்களால் இயலும், இருட்டில் வெளிச்சம் போன்றவர்கள் அவர்களால் வழிகாட்டப் பெற வேண்டும். இல்லையென்றால், நாம் திக்குத் தெரியாது கலக்கம் கொண்டு துன்பத்துடன் திரியக் கூடும். வழிவழி வந்த அறிவை ஒப்புக் கொள்ளாதவர்களைப் பார்த்து, உரையாடுவதிலுள்ள அபாயத்தைப் பற்றி என்னை எச்சரித்திருக்கிறார்கள். ஆகவே, உங்களைப் பார்க்கக்கூடாது என்றும் கூறியுள்ளார்கள். ஏனெனில் நான் மற்றவர்கள் கூறுவதைக் கேட்டால், மிக்க கவனத்தோடு அவர்கள் கட்டிய இவ்வீட்டைப் பாழ்படுத்தி விடுவேன் என்றும் அவர்கள் கூறினார்கள். ஆனால் அவர்கள் அவ்வாறு கூறியபோதிலும் உங்களைக் காணும் ஆவல் மிகுதியால் நான் இங்கு வந்துள்ளேன்.''

தனது மனம் வழுக்கிய செய்கையைக் கண்டு அவர் பெருமிதம் அடைவதாகத் தெரிந்தது.

குருவையடையத் தேவை என்ன? உம்மைவிட அவர் மிக அறிவாளியா? அவர் தானறிந்தவன் என்றால் உண்மையில் அவர் அறியவில்லை. தவிர, சொற்கள் உண்மை நிலையைக் குறிக்காது. அவ்வரிய மனோநிலையை உங்களுக்குக் கற்றுத் தரக் கூடியவர் எவராவது இருக்கிறாரா? ஒருக்கால், அவர்களால் அந்நிலையை விளக்கவும், உம்முடைய அக்கறையை வளர்க்கவும், அந்நிலையைப் பற்றிக் கொள்ளவும், அதை அனுபவிக்க வேண்டுமென்ற வேட்கையைத் தூண்டவும் முடியலாம். ஆனால், அந்த அறிவை உங்களுக்குக் கொடுக்க இயலாது. தனிமையாகவே அப்பயணத்தை ஏற்க வேண்டும். அப்பயணத்திலும் உமக்கு நீரே ஆசிரியர், நீரே மாணாக்கர்.

''இவையெல்லாம் மிகக் கடினமானவையில்லையா? அவ்வுண்மையைக் கண்டோர், அவ்வழியின் படிகளைச் சற்று எளிமையாக்கித் தரக்கூடுமே'' என்றார்.

இதனால் அவர்கள் கட்டளை இடும் அதிகாரிகள் ஆகிறார்கள். நீர் செய்ய வேண்டியதெல்லாம், அவர்களைப் பின்பற்றுவதும், அவர்களைப் போன்ற நடையுடைகளை மேற்கொள்வதும், கீழ்ப்படிதலும், தோற்றங்களையும் முறைகளையும் ஒப்புக்கொள்ளுதலுமேயாகும். நீர் அவர்கள் உண்மையென எண்ணுவதை அப்படியே கடைப்பிடிக்கிறீர். இதனால் நேரில் கண்டறிவதையும், தானாகச் செயல்படுவதையும் இழக்கிறீர். ஆனால், உண்மையை அடைய ஒரு வழியும் கிடையாது.

''நீர் என்ன கூறுகிறீர்?'' என்று திடுக்கிட்டுக் கூச்சலிட்டார்.

பிரசாரத்தினாலும் தன்னை வளர்த்த சமூகச் சூழலினாலும், ஒவ்வொரு மதமும் தன்னுடைய வழியே உயர்ந்ததென்று கூறும் வாதங்களினாலும் மனித இனம் கட்டுண்டு கிடக்கிறது. தம் வழிமுறை, தாம் செய்த ஏற்பாடுகள் தம்முடைய தியானத்தின் வழிகள், இவையே உண்மைக்கு அழைத்துப் போகும் ஒரே வழி என்று கூறும் குருமார்கள் ஆயிரக் கணக்கானவர் இருக்கிறார்கள்.

நீர் கூர்ந்து நோக்கினால், ஒவ்வொரு சீடனும் மற்றொரு குருவின் சீடர்களை ஒரு விதப் பரிவுடன் பொறுத்துக் கொள்வதைக் காண்பீர். அரசியல், மத, சமூக வேற்றுமைகளைப் பொறுத்துக் கொள்வது என்பது ஒரு நாகரிகமான உடன்பாடாகும். ஏனெனில், வெவ்வேறு நம்பிக்கைகளையுடைய ஒவ்வொருவனுக்கும் ஆறதலளிக்க வேண்டி மனிதன் பல வழிகளை ஏற்படுத்தியிருக்கிறான்.

''நான், என் குருவைத் துறக்க வேண்டும் என்றா கூறுகிறீர்? அவர் கற்றுத் தந்த எல்லாவற்றையும் உதறித் தள்ளவா? நான் திசை தெரியாது தவிப்பேன்.''

ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டுமானால் பரிதவிப்பு வேண்டாமா? நாம் பரிதவிக்கவும், உறுதியற்ற நிலையைக் கண்டும் அஞ்சுகிறோம். அவர்கள் மத, அரசியல், சமூக ...பாதிகள் எவராயிருந்தாலும் விண்ணுலகத்தைத் தருவதாக ...ாக்களிக்கும் எவரையும் பின்தொடர விழைகிறோம். ஆகவே, அவர்களும் அச்சத்தை வளர்த்து, நம்மையும் அச்சம் என்ற சிறையிலடைக்கிறார்கள்.

''நான் தனியாக நடப்பது என்பது இயலுமா?'' என்று நம்பிக்கையற்ற குரலில் கேட்டார்.

பல கடைத்தேற்றுபவர்களும், சான்றோர்களும், குருமார்களும், அரசியல் நிபுணர்களும், மெய்நூல் வல்லுநர்களும் உள்ளார்கள். ஆனால், ஒருவரும் உங்களைத் துன்பத்திலிருந்தும், கலக்கத்திலிருந்தும் மீட்கவில்லை. அதனால் அவர்களைப் பின்பற்றுவானேன்? ஒருக்கால் நம்முடைய சிக்கல்களுக்கு எல்லாம் வேறு வழி இருக்கக்கூடுமே.

''இவர்களைத் தனித்துப் போராட நான் அவ்வளவு பொறுப்புணர்ச்சியுள்ளவனா?.

நீர் சிக்கல்களைப் புரிந்து கொள்ளும் பொழுது தான் இவ்வாறு ஆழ்ந்த பொறுப்புணர்ச்சி உள்ளவர் ஆவீர். மற்றோர் உதவியைக் கொண்டல்ல – அன்றி, நீங்கள் அடையத் தேடும் இன்பங்களின் உதவியைக் கொண்டு மல்ல. நீங்கள் இப்போது இன்பத்தின் அளவிலேயே வாழ்கிறீர்கள். இன்பமே கூடாது என்று கூறவில்லை. ஆனால், இன்பத்தைத் தேடுவதே வாழ்க்கையின் தொடக்கமும் இறுதியுமாக இருப்பதால் நீர் ஆழ்ந்த கருத்துள்ளவராக இருக்க முடியாது.

''என்னை உதவியற்றவனாகவும், நம்பிக்கை இழந்தவனாகவும் ஆக்குகிறீர்''

''நீர் இரண்டையுமே விரும்புகிறீர். ஆழ்ந்த பொறுப்புணர்ச்சியும் வேண்டும். உலகம் தரக்கூடிய இன்பங்கள் அனைத்தும் வேண்டும். இவற்றுக்கெல்லாம் மேல் நீர் 'கடவுள்' எனக்கூறும் இன்பத்தையும் விழைகிறீர். மற்றவரின் எவ்வித உதவியுமின்றி இவற்றை நேரில் கண்டறிந்தால் – நீர் காண்பது – 'நீரே அறிவாளி – நீரே மாணாக்கர்' என்ற நிலை. இதுவே இதன் சிறப்பான கருத்து. அவ்வமயம் கற்போன், கற்றுக் கொடுப்போன், கல்வி எல்லாம் நீர் ஒருவரே என்பது நிலைக்கும்.''

''ஆனால், நீரும் ஒரு குருவே – இன்று காலை எனக்கு ஒரு கல்வி புகட்டினீர் – ஆகவே, நான் உங்களைக் குருவாக ஏற்கிறேன்.''

உங்களுக்கு ஒன்றும் கற்பிக்கப்படவில்லை. ஆனால் நீங்களாகவே நோக்கினீர். அந்நோக்கு உமக்கு ஒன்றைக் காண்பித்தது. அந்நோக்கே உங்கள் குரு என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளலாம். நோக்க வேண்டுமா? வேண்டாமா என்பது உம் கையில்தான் இருக்கிறது. உம்மை யாரும் கட்டாயப் படுத்த இயலாது. ஆனால், கைம்மாறு ஒன்றை எதிர்பார்த்து அல்லது தண்டனை கிடைக்கும் என்று அச்சங்கொண்டு, அதையே தூண்டுகோலாகக் கொண்டு பார்த்தீரானால் அவ்விதச் செய்கை, நோக்குவதைத் தடை செய்யும். 'நோக்கு'வதற்கு எவ்வித ஆதிக்கத்திலிருந்தும், மரபு வழிகளிலிருந்தும், அச்சத்திலிருந்தும், ஸாமர்த்தியமான சொற்களையுடைய எண்ணத்திலிருந்தும் விடுபெற வேண்டும். மெய்பொருள் எங்கோ தூரத்தே இருக்கும் பொருளன்று. இருப்பதை இருந்தவாறே நோக்குவதில் இருக்கிறது. உள்ளதை உள்ளபடியே நோக்குங்கால் – அவ்விழிப்புணர்வில் தேர்வு உண்டாவதில்லை. அதுவே அனைத்து வேட்கையின் தொடக்கமும் இறுதியுமாகும்.



## இந்தியா - 7

வெட்டவெளியின் தன்மையைத் தனக்குத்தானே விளக்கிக் கொள்ளவும் அல்லது உருவாக்கவும் எண்ணத்தினால் இயலாது. எண்ணத்தினால் முறை விளக்கஞ்செய்து, அதன் வரையறைக்குட்பட்ட எதிலும், எண்ணத்தின் குறுகிய தன்மை இருந்தே தீரும். தியானம் வந்தடையும் அவ்வெட்டவெளி இதுவன்று. எண்ணம் எப்பொழுதும் தொடுவானம் உடையது. தியான மனம் தொடுவான மேயற்றது. எல்லைக்குட்பட்ட மனம் அளவிடற்கரிய ஒன்றை அடைதல் ஆகாது; அன்றியும் வரம்புடைய பொருளை வரம்பற்றதாகச் செய்வதும் அரிது. இவற்றில் ஒன்று நிலைக்க வேண்டுமானால் மற்றொன்று ஓய்ந்தேயாக வேண்டும். கற்பனைக்கும் ஊக்கத்திற்கும் எட்டாத, வெட்டவெளியின் கதவைத் திறப்பதே தியானம். எண்ணம் என்ற மையத்தைச் சுற்றிக் கருத்தென்ற வெளியின் பரப்பு இருக்கிறது. இவ்வெளியின் பரப்பை மேலும் பல கருத்துக்களால் மிகையாக்குதலும் கூடும். ஏதோ ஒருவகைத் தூண்டுதலினால் ஏற்படுத்தப்படும் பரப்பானது, மையமேயற்ற வெட்டவெளியாகாது. இந்த மையத்தைப் புரிந்து கொள்வது தியானம். ஆகவே, வெளியையும் கடக்கும் தன்மையுள்ளது. மோனமும் வெட்டவெளியும் ஒன்று சேர்ந்தே இயங்கும். மோனத்தின் அளவில்லாத் தன்மை, மையம் ஒழிந்த மனத்தின் அளவில்லாத் தன்மையாகும். இவ்வெளியும் மோனமும் எண்ணத்திற்குப் புலனாகாது. எண்ணம் தன்னால் உருவாக்கப் பட்டவை

களையே உணரும். இந்த உணர்வாலேயே எண்ணம் தன் எல்லையையும் ஏற்படுத்திக் கொள்கிறது.

மூங்கிலாலும், மண்ணாலும் செய்த அந்த ஆடும் பாலத்தால் அவ்வோடையைக் கடக்கலாம். ஓடை பெரிய ஆற்றுடன் கலந்த, வேகமிகுந்த வெள்ளத்தில் மறைந்தது. அப்பாலம் பலப் பொத்தல்களையுடையது. அதன் மீது சற்றுக் கவனத்துடன் செல்ல வேண்டும். மணல் சரிவுக்கு மேல் ஏறி அங்கேயுள்ள சிறிய கோவிலைத் தாண்டுங்கள். சற்று தொலைவில் ஒரு கிணறு, உலகின் மிக்க பழமைக் கிணறுகளைப் போன்ற ஒன்று அச்சிற்றூரின் மூலை யிலிருந்தது. அங்கேதான் பல வெள்ளாடுகளும் பட்டினி மனிதர்களும், குளிர் தாங்காமல் அழுக்காடையால் சுற்றப்பட்ட பெண்களும் இருந்தார்கள். பலர் அப்பெரிய ஆற்றில் மீன் பிடித்து வந்தபோதிலும், மெலிந்தும், தேய்ந்தும், வயதுக்கு மீறிய முதுமை எய்தியும், முடங்கியும் இருந்தனர். ஒளி மங்கிய சாளரங்களுடைய கறுத்து இருண்ட அறைகளிலே மிகவும் அழகான சித்திர வேலைப்பாடு மிகுந்து பட்டுச் சேலைகளையும், காசிப் பட்டுப் புடவை களையும் நெய்யும் நெசவாளிகள் அவ்வூரில் இருந்தனர். தொழில் தந்தை மகனுக்குக் கற்பித்தது. தலைமுறையாய் வந்த தொழில். ஆனால், இடைத்தரகர்களும், கடைக் காரர்களுமே பணத்தை ஈட்டினார்கள்.

நீங்கள் அவ்வூர் வழியாகச் செல்லாமல், இடது பக்கமாகத் திரும்பினால், தூய்மையானது என்று கருதும் ஒரு பாதையை அடையலாம். ஏனெனில் 2500 ஆண்டுகளுக்கு முன்னர் புத்த பகவான் அதே பாதையில் காலடி வைத்து நடந்ததாகக் கருதப்படுகிறது. ஆகவே, பயணிகள் நாட்டின் பல இடங்களிலிருந்து அவ்வழியில் நடக்க வந்தார்கள். இப்பாதை பசுமையான வயல்களூடும், மாந்தோப்புக் குள்ளும், கொய்யா மரங்களிடையிலும், அங்குமிங்கு மாயிருந்த பல கோவில்களின் பக்கத்திலும் சென்றது. அப்பழைய ஊரிலே புத்தர் பிரானைவிட பழமையான

ஊரிலே பல கோவில்களும், பூஜைக்குரிய இடங்களும், பயணிகள் இராத் தங்கும் சத்திரங்களும் இருந்தன. அவை பாழடைந்து காணப்பட்டன. அவற்றைக் கவனிப்பார் யாருமில்லை. வெள்ளாடுகள் அவ்விடம் திரிந்து கொண்டிருந்தன. மிகப் பெரிய மரங்கள், ஒரு பழம்பெரும் புளியமரம், அதன் மேல் கிளைகளில் பருந்துகளும் மற்றும் கிளிக் கூட்டங்களும் நிறைந்திருந்தன. கிளிகள் கூட்டமாய் வருவதும், பச்சை மரங்களுள் மறைந்து போவதுமாய் இருந்தன. கிளிகள் அவ்விலைகளின் நிறத்தை உடையவை. 'கீரிச்' என்ற ஒலி மட்டுமே கேட்க முடிந்தது. ஆனால், அவற்றைக் காண முடியவில்லை.

அப்பாதையின் இரு பக்கங்களிலும், குளிர் காலத்துக் குரிய கோதுமைப் பயிர்; தூரத்தில் ஊர்ப்புற மக்கள் சமைக்கும் தீயின் புகை பரவியிருந்தது. அசைவற்ற அவ்வேளையில் அப்புகையும் நெடுங்குத்தாகவே சென்றது. கொழுத்து அச்சந்தரக் கூடிய காளை, ஆனால் தீங்கற்றது. இடையன் அக்காளையை மேய்க்கையில் அது வயல்களிடையே திரிந்து பயிர்களைத் தின்றது. இரவு பெய்த மழையால், தூசி கனத்து கீழே படிந்திருந்தது. பகலில் வெய்யில் கடுமையாகத்தான் இருக்கும். ஆனால், இப்பொழுது கார் மேகங்கள் கவிந்திருந்ததால், பகலிலும் கால்நடையாகவே செல்லலாம்; மண்ணின் மணத்தை நுகரலாம்; அவனியின் அழகைக் காணலாம். மிக பழமையான நிலம் – உள்ளத்தை மயக்குவதாயும், துயரம் நிறைந்ததாயும், ஏழ்மை கொண்டதாயும், பயனற்ற கோவில்களையுடையதாயும் இருந்தது.

''நீர் அழகைப் பற்றியும், அன்பைப் பற்றியும் வேண்டிய அளவு உரைத்திருக்கிறீர். உம் உரையைக் கேட்டபின் எனக்கு அன்பு, அழகு இவைகளைப் பற்றி ஒன்றும் தெரியாது எனக் காண்கிறேன். நான் ஒரு சாதாரண மனிதன். ஆனால், இலக்கியத்தையும், மெய்யறிவு நூல்களையும் நிறையப் படித்துள்ளேன். அவை தரும் விளக்கம் நீர் சொல்வதிலிருந்து

வேறாக இருக்கிறது. இந்நாட்டின் முன்னோர்கள் அழகையும், அன்பையும் பற்றிக் கூறியதையும் மேற்கோள் களுடன் என்னால் எடுத்துக்காட்ட முடியும். ஆனால், அது 'அதிகாரத்தை'க் காட்டும் செயல் என்று நீர் கருதுவதும் எனக்குத் தெரியும். நீர் இசைந்தால் நாம் இப்பொருளைப் பற்றி உரையாடலாம். அதற்குப் பின் அழகையும், அன்பையும் ஒருக்கால் நான் புரிந்துகொள்ளக் கூடும்.''

நம் வாழ்க்கையில் அழகு மிகக் குறைவாக இருப்பது ஏன்? பொருட்காட்சி சாலைகள், சித்திரங்கள், சிலைகள் இவை தேவைதானா? இனிய இசையை ஏன் கேட்க வேண்டும்? ஒருவருக்கு நல்ல சுவையைப் பற்றிக் கற்றுத் தர இயலும். இயல்பாகவே ஒருவருக்கு நற்சுவை இருக்கலாம். ஆனால் நற்சுவை அழகாகாது. அழகு என்பது பலவற்றைச் சேர்த்து புனைந்த ஒன்றில் இருக்கிறதா? அதாவது வழுவழுவென்று இருக்கும் தற்கால வான ஊர்தி, சீராகச் செய்யப்பட்ட டேப்ரிகார்டர், நவீன ஹோட்டல் அல்லது யவனரின் பண்டைக் கோவில்கள் அல்லது இழையின் நேர்மை, மிகச் சிக்கலான யந்திரம், ஆழ்ந்த குகைகளைக் கடந்து செல்லும் பாலத்தின் வளைவு இத்தகையவற்றில் மட்டுமே இருக்கிறதா?

''அழகாகச் செய்யப்பட்டு முழுமையாக இயங்கும் பொருட்களில் அழகு இல்லை என்றா கூறுகிறீர்? உயர்தரமான மிகவும் நேர்த்தியான கலைத்திறனில் அழகு இல்லையா?''

நிச்சயமாக இருக்கிறது. ஒரு கைக்கடிகாரத்தின் உள்ளே பார்க்கையில் மெச்சத் தகுந்த விதத்தில் நுட்பமான ஒரு பொருளைப் பார்க்கையில், அழகின் தன்மை உண்மையாக இருக்கிறது. அதேவிதம், பண்டைச் சலவைக்கல் தூண்களி லும், புலவரின் சொற்களிலும்கூட அழகு இருக்கிறது. ஆனால், அழகு என்பது இவ்வளவேதான் என்றால் அவ்வழகு புலன்களின் மேலெழுந்தவாரியான மறு

மொழியேயாம். சாயும் பரிதியின் கதிர்களுக்கெதிரே தன்னந்தனியாக நிற்கும் பனை மரத்தைப் பார்க்கும் பொழுது, அதன் வண்ணமா, அதன் அசையாத் தன்மையா – அன்றி அமைதியான மாலைப் பொழுதா, எது உங்களுக்கு அழகை உணர்த்துகிறது? அல்லது அழகும் அன்பைப் போன்றே தீண்டுதல், பார்வை என்ற புலனுணர்வுகளுக்கு அப்பாற்பட்டதா? கல்வியின் பயனாய் வரைமுறைகளில் கட்டுண்ட பொருள் 'இது அழகு – அது அழகன்று' இவ்வாறு கூறுகிறதா? பழக்கவழக்கங்களிலும், பாங்கிலும், பண்பட்ட எண்ணம் இது ஊழல், ஆனால் அது சீரானது, நன்மை இங்கே மலரும்' என்று கூறுகிறதா? வரையறுக்கப்பட்ட பொருள் பண்பாடு, மரபு வழி இவற்றால் விளைந்த ஒன்று ஆகையால் அது அழகாகாது. அழகென்பது ஒன்றைத் துய்ப்பதால் விளையும் ஒன்று அல்லது துய்ப்பதின் மணமே என்று வைத்துக் கொண்டால் – மேனாட்டினருக்கும் சரி, கீழ் நாட்டினருக்கும் சரி அழகு என்பது கல்வியையும், மரபு வழி முறைகளையுமே சார்ந்து நிற்கும் பொருளாகும். அழகைப் போன்றே அன்பும் கீழ் நாட்டினருக்கும், மேனாட்டினருக் கும், கிறிஸ்தவர்களுக்கும், இந்துக்களுக்கும் சொந்த மானதா? அல்லது நாட்டின் முழு உரிமைக்கும், கருத்தியலுக்கும் சொந்தமா? அன்பு இவை யாவற்றிற்கும் சொந்தமில்லையென்று ஐயமறத் தெரிகிறது.

''அப்படியென்றால் அழகு என்பது என்ன?''

ஐயா! தன்னிழப்பின் பேரெளிமை என்பதே அழகு என்று உமக்குத் தெரிந்திருக்கும். எளிமையில்லாமல் அன்பு இல்லை, தன்னிழப்பில்லாமல் அழகிற்கு உண்மையிருப்புக் கிடையாது. 'எளிமை' என்று நான் கூறுவது கடுமையான கட்டுப்பாடுள்ள முனிவர், துறவி அல்லது படைத் தளபதியின் கட்டுப்பாட்டை அல்ல. எளிமை என்பது தன் மறுப்பு என்ற பெருமிதத்தோடு கூடிய செய்கையன்று. அன்றியும் எந்தக் கட்டுப்பாட்டினால் அவர்களுக்குச் செல்வாக்கும், ஒப்புதலும் உண்டாகிறதோ அதுவும்

எளிமையன்று. எளிமை கடினமானதன்று, கட்டுப்பாட்டினால் தன்சிறப்பை உறுதிப்படுத்தும் செயலுமன்று. இன்பத்தை மறுத்தலாலும், ஏழ்மை, பிரம்மசாரியம் போன்ற விரதத்தை மேற்கொள்வதாலும் உண்டாவதன்று. அறிவின் பொழிப்புரையே எளிமை. தன்னிழப்பொன்றிலேயே எளிமையின் இருப்பு. வலிவுடைய விருப்பத்தின் வழியாகவும், தேர்ந்தெடுப்பதின் வழியாகவும், வலுக்கட்டாயத்தின் வழியாகவும் அதையடைய முடியாது. அழகின் செய்கை - தன்னிழத்தல். அன்பு கொண்டு வருவது உள்ளாழ் மனத்தின் தெளிவு என்ற பேரெளிமை. எங்கு அளவு முற்றுப் பெறுமோ அதுவே அழகென்னும் இவ்வன்பு. அத்தகைய அன்பு, அது எது செய்தாலும் அதுவே அழகு.

'' 'எது வேண்டுமானாலும் செய்யட்டும்' இதற்கு விளக்கம் என்ன? தன்னையிழந்தபின் செய்வதற்கு என்று என்ன இருக்கிறது?''

செயலும், இருப்பும் ஒன்றிலிருந்து வேறொன்றல்ல. அத்தகைய பிரிவு கொண்டு வருவது கலக்கமும், அருவருப்புமே. இப்பிரிவு இல்லாதிருக்கையில், வாழ்க்கை என்பதே அன்பின் செயல். பேரெளிமையின் உள்ளாழ்ந்த தன்மை இரட்டைகளற்ற வாழ்வை உருவாக்குகிறது. சொற்களைக் கொண்டு விளக்காமல் மனம் மேற்கொள்ள வேண்டிய பயணம் அழகைக் காண வைக்கும். இவ்வழிப் பயணமே தியானம்.



# இந்தியா - 8

தியானம் கடினமான உழைப்பு. அது கோருவது மிக உயர்ந்த ஒழுக்கத்தையே அன்றி ஒருவரின் கருத்துக்கிணங்கி நடப்பதும், நடை உடைகளைப் பின்பற்றுவதும், மற்றவர்க்கு அடங்கி வணங்குவதும் அன்று. அத்தகைய ஒழுக்கம், உங்களையொட்டிய யாவிலும் உள்ளும் புறமுமாய் இடையறா விழிப்புணர்வுள்ள கவனிப்பின் விளைவாகும். தன்னைப் பிரித்துக் கொள்ளும் செயல் தியானமாகாது. அன்றாட வாழ்க்கையில் ஒத்துழைப்பையும், நுண்மையான உணர்வையும், அறிவையும் வற்புறுத்திக் கோருவது தியானத்தின் செய்கையாம். அறநெறி வாழ்க்கையை அடிக்கல்லாக அமைக்காவிட்டால், தியானம் வாழ்க்கையிலிருந்து தப்பி ஓட ஒரு வழியாகும். அதனால் அது பயனற்றதாகும். சமூகக் கோட்பாடுகளைப் பின்பற்று வது, பகைமையை வளர்க்கும். பொறாமை, பேராசை, செல்வாக்கைத் தேடியலைதல் இவற்றிலிருந்து விடுதலையே அறநெறி வாழ்க்கை. இவற்றிலிருந்து விடுதலை என்பது மனத்தின் வலியுறுத்தலால் விளையும் செய்கையன்று. தன்னறிவினாலும் இவற்றை நன்கு நோக்குவதாலும் வருவதாகும். தான் இயற்றும் செய்கைகளை நன்றாகப் புரிந்து கொள்ளாதவரை, தியானம் என்பது புலனுணர்வு களின் பதற்றமாகும். அதனால் குறிப்பிடத்தக்க பயனொன்று மில்லை.

அவ்வூர் அமைந்துள்ள விதத்தில் அங்கு காலை, பின் மாலை இரண்டுமே மிகக் குறைவானது. அக்காலையில் பரந்தும் ஆழமானதுமான அந்த ஆறு உருக்கிவிட்ட ஈயத்தை

ஒத்திருந்தது. பாரின் மீது பரிதி இன்னும் எழவில்லை. ஆனால், கிழக்கு வெளுத்திருந்தது. பறவைகள் தம் அன்றாட காலை இசைக் கச்சேரியைத் துவக்கவில்லை. ஊர்ப்புற மக்களும் ஒருவரையொருவர் விளித்து கூவத் தொடங்க வில்லை. காலை வெள்ளி வானில் சற்று உயரத்தே இருந்தது. நாம் நோக்க நோக்க அது மெல்ல வெளிர்ந்து மறையவும், காலைப் பரிதி மரங்களுக்கு மேல் எழும்பி வந்தது – அந்த ஆறு பொன்னும் வெள்ளியுமாய்த் திகழ்ந்தது.

பறவைகளின் இசை தொடங்கி ஊர் விழித்தது. அவ்வமயம், திடீரென்று சாம்பல் நிறம், கரிய முகம், புதர் போன்று புன்மயிர் நெற்றியில் – பெருங் குரங்கொன்று சாளரத்தின் அடியே தோன்றியது. அதன் கைகள் கரியன; நீண்ட வால் சாளரத்தின் அடிபாகத்தின் வழியாக உள்ளே தொங்கியது. ஆடாது அசையாது அமைதியாக உட்கார்ந்து கண்கொட்டாமல் நம்மைப் பார்த்தது. நாங்கள் மிக அருகில் இருந்தோம். ஓரிரண்டு அடிகளே இடைவெளி. திடீரென்று தன் கையை நீட்டியது. நாங்களிருவரும் சிறிது நேரம் கைப் பிடித்திருந்தோம். கூரை மீதும், சாளரத்தின் மேலுள்ள சிறிய கைப்பிடிச் சுவர் மீதும் ஏறி வந்து கீழிறங்கி உட்கார்ந்தது. அதனுடைய கை சுரசுரப்பாகவும், கருமையாகவும், தூசி படிந்தும் இருந்தது. அது இளைப்பாறித் தணிவுடன் காணப்பட்டது, குறிப்பாக மிகுந்த களிப்புடன் காணப் பட்டது சற்று ஆச்சரியமாக இருந்தது. அச்சம் துளியும் இல்லை. ஆறுதல் உடையதாகத் தென்பட்டது. இதற்குத் தன் சொந்த வீட்டிலேயே இருக்கும் உணர்ச்சி ஏற்பட்டதெனத் தோன்றியது. அது அங்கே வீற்றிருந்தது. கீழே ஆறு பளிச்சிடும் தங்கமாகத் தெரிந்தது. அதற்கு அப்பால் பசுமையான கரைகளும், தூரத்தேயுள்ள மரங்களும். நாங்கள் சற்று அதிக நேரமாகவே கைப்பிடித்திருந்தோம். அதற்குப் பிறகு அது தன் கையைப் பின்வாங்கிக் கொண்டபோதிலும், தான் இருந்த இடத்திலேயே அமர்ந்திருந்தது. நாங்கள் ஒருவரையொருவர் நோக்கியிருந்தோம். அதன் சிறிய கரிய

விழிகள் பளபளத்ததில் ஒரு விதமான, ஆவலைக் காண முடிந்தது. அதற்கு உள்ளே வர ஆவலிருந்தபோதிலும், சற்றுத் தயங்கியது. பின் தன் கை - கால்களை நீட்டி, கைப்பிடிச் சுவரையடைந்து கூரைக்கு மேலேறிப் போய் விட்டது. அன்று மாலை ஒரு மரத்தின் உச்சியில் அது ஏதோ ஒன்றை மென்று கொண்டிருந்தது. நாம் அதற்குக் கையசைத்துச் சைகை செய்தபோதிலும் அதனிடமிருந்து மறுமொழி கிடைக்கவில்லை.

அம்மனிதர் ஒரு சந்யாசி, துறவி. சற்றே மென்மை பொருந்திய முகம். கைகள் நுண்ணுணர்வு பெற்றவை. அவர் சுத்தமாக இருந்தார். அவர் ஆடைகள் இஸ்திரி வைக்கப் படாமலிருந்தாலும், அண்மையில் தோய்க்கப்பட்டிருந்தன. அவர் ஹ்ருஷிகேசத்திலிருந்து வந்ததாகக் கூறினார். பல ஆண்டுகள் ஒரு குருவிடம் பயின்றவர். இப்பொழுது அந்த குரு, தனிமையை நாடி இமயமலையின் மேற்சாரலுக்குப் போய்விட்டாராம். தான் பல ஆச்ரமங்களுக்குச் சென்றிருப்ப தாகக் கூறினார்.

அவர் சுமார் இருபது வயதாக இருக்கையில் வீட்டைத் துறந்து வெளி வந்ததாகக் கூறினார். அவருக்கு எந்த வயதில் வீட்டைத் துறந்தார் என்பது நன்றாக நினைவில்லை. அவருக்குப் பெற்றோரும், பல உடன்பிறந்தவர்களும் இருந்தபோதிலும் முற்றிலும் தொடர்பு வைத்துக்கொள்ள வில்லை. பல அறிவாளிகளும், குருக்களும் நம்மைக் கட்டாயமாகப் பார்க்க வேண்டும் என்று கூறியதால் எமைக் காண அவர் இவ்வழி வந்ததாகவும், இங்குமங்குமாக எமைப்பற்றிப் படித்திருப்பதாகவும் தெரிந்தது. தவிர, அண்மையில் தன்னுடன் இருக்கும் மற்றொரு சந்நியாசியு டன் உரையாடியதன் விளைவாக இங்கு வந்தார். அவருடைய வயதை ஊகிக்க இயலவில்லை. நடுத்தர வயதைக் கடந்ததாகத் தோன்றியபோதிலும், அவருடைய குரலும், கண்களும் இளமையாகவே இருந்தன.

''இந்தியா முழுவதும் சுற்றும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டதால் பல மையங்களையும், அவற்றின் குரு

மார்களையும் பார்க்க முடிந்தது. அதில் சில குருக்கள் கற்றறிந்தவர்கள், ஒரு சிலர் அறிவற்றவராயிருந்தபோதிலும் அவர்களிடம் ஏதோ ஒருவகைப் பண்பு இருக்கிறது; மற்றுஞ் சிலரோ, மற்றவர்களைத் தந்நயஞ் செய்து மந்திரங்களைப் போதித்துப் பயன்பெறுபவர்கள். இவர்கள் வெளிநாடுகள் சென்று மக்களின் பாராட்டை அடைகிறார்கள். மிகச் சிலரே இதைக் கடந்தவர்கள். அத்தகையவரில் ஒருவரே அண்மையில் என் குரு. இப்பொழுது அவர் இமயமலையில் மிகவும் தொலைவாயும், ஒதுங்கியதாயுமுள்ள ஓரிடத்திற்குச் சென்றுவிட்டார். அவரைத் தரிசித்து ஆசி பெற எங்களின் பெரிய கூட்டமொன்று ஆண்டில் ஒரு முறை செல்கிறது.''

உலகத்திலிருந்து தன்னைப் பிரித்துக் கொள்வது தேவைதானா?

''ஒருவர் உலகைத் துறக்க வேண்டுமென்பது தெளிவானதே. உலகமோ உண்மையன்று, கற்றுக் கொடுக்க ஒரு குரு வேண்டும். ஏனெனில், குரு அவ்வுண்மையை உணர்ந்தவர். அவர் தன்னைப் பின்பற்றுபவருக்கு அவ்வுண்மையை அடைய வழி செய்வார். அவர் அறிந்தவர், நாமறியோம். நீர் குருவே தேவையில்லை என்பது எமக்குத் திகைப்பாய் இருக்கிறது. நீர் மரபு வழியுரிமைக்கு நேர் எதிராகச் சொல்கிறீர். நீரும் பலருக்குக் குருவாகவே இருக்கிறீர். உண்மை என்பது தனியாகக் கண்டுணர்வ தல்லவே. சடங்குகள், அறிவாளியின் வழிகாட்டு என்ற உதவிகள் ஒருவருக்குத் தேவையே. ஒருக்கால் இதன் முடிவில் நாம் தனியாகவே நிற்க வேண்டியிருக்கலாம். ஆனால், இப்பொழுதல்ல. நாம் குழந்தைகள். பாதையில் முன்னேற்றம் கொண்டவரின் உதவி தேவையே. அறிந்தவரின் காலடியிலேயே அமர்ந்தால்தான் நாம் கற்றுக்கொள்ள முடியும். நீர் இவற்றையெல்லாம் மறுக்கிறீர். இது ஏன் என்பதை ஆழ்ந்து தெரிந்துகொள்ளவே இங்கு வந்துள்ளேன்.''

காலை ஒளி படிந்த ஆற்றையும், பசுமையொளியிடும் செழுமையான கோதுமைப் பயிருடைய வயல்களையும்,

அதற்கப்பால் மரங்களையும் பாருங்கள். பேரழகு. அதை முற்றுமுணர கண்கள் அன்பு நிறைந்ததாய் இருக்க வேண்டும். இரும்புப் பாலத்தின் மேல் கிலுகிலுக்கும் ரயிலின் ஒலியைக் கேட்பது, பறவையின் குரலைக் கேட்பதைப் போன்ற தனிச் சிறப்புடையது. ஆகவே கண்கொடுத்துப் பாருங்கள்! புறாக்கள் கூவுவதைக் கேளுங்கள். அந்த இரு கிளிகளுடன் கூடிய புளிய மரத்தைப் பாருங்கள். ஆற்றுடன், அவ்வாற்றின் வழியே மக்கள் நிறைந்து செல்லும் படகுடனும், படகை வலித்து செல்லும்போது பாடும் இசையுடனும் இணைப்பு இருந்தால்தான் கண்கள் அக்காட்சியைப் பார்க்கக் கூடும். இதுவும் உலகின் ஒரு பகுதியே. இதைத் துறப்பதில் அழகும், அன்பும், அவற்றுடன் இம் மண்ணுமே துறக்கப்படும். நீர் துறப்பது மனித சமூகத்தையே. ஆனால், மனிதன் இவ்வுலகத்தைக் கொண்டு ஆக்கிய பொருள்களையன்று. நீர் உலகை விட்டுத் தனித்து ஒதுங்கும்பொழுது பண்பாடும், மரபுரிமை வழிகளும் - அவ்வுலக அறிவும் உம்மைவிட்டு அகலாது. நீர் அஞ்சுவது அழகு, அன்பு இந்த இரண்டு சொற்களையும் அவற்றுக்குப் பின் தேங்கி நிற்கும் பொருளையுமேதான்.

அழகு என்பது புலனுணர்வின் உண்மையோடு இணைந்ததே. அதாவது; பால், இனம் இவற்றின் தொடர்பும் அதையொட்டிய காதல், அதன் சிக்கல்கள் இவையே. இவற்றைத் துறப்பவரைத் துறவு என்றும், 'மத ஈடுபாடுள்ளவர்' என்றும் யாவராலும் அழைக்கப்படுபவர். இத்தகையத் துறவு இவர்களைத் தன்மையம் உள்ளவர் களாகச் செய்கிறது. ஒருக்கால், உலக வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவர்களைப் பார்க்கச் சற்று உயர்ந்த நிலையான தன்மையத்தை உடையவர்களாக இருந்தபோதிலும் அத்துறவும் தன்மையத்தின் செயலேயாகும். அழகும், அன்பும் இல்லாதபொழுது அளக்கவொணா அப்பொருளை அடையும் வாய்ப்பு ஒருவருக்கும் இல்லை. சந்நியாசிகள்,

மகாத்மாக்கள் இவர்களின் உரிமை எல்லைக்குள் கூர்ந்து நோக்கினால் இந்த அழகும், அன்பும் அவர்களிடமிருந்து அதிகத் தொலைவிலுள்ளன என்பதும் தெரியவரும். அவர்கள் அவற்றைப் பற்றிப் பேசலாம். ஆனால், அவர்கள் கடினமான ஒழுங்கு முறைகளை வற்புறுத்துபவர்கள், தம் கோரிக்கைகளிலும், அடக்கு முறைகளிலும் வன்மையோடு இருப்பவர்கள். இதன் முக்கியமான பொருள் - காவியுடையணிந்திருந்தாலும் அல்லது கறுப்புடை அணிந்திருந்தாலும் - அவர்கள் உலகப் பற்றுடையவர்களே. ஏனைய தொழிலைப் போன்றே அதுவும் ஒரு தொழில்; நிச்சயமாக அது மெய் வழியாகாது. அதைவிட மெய்ந்நெறி என்ற போர்வையை அணியாமல், தொழில் திறனுள்ளவர்களாயிருப்பதே மேல்.

''ஐயா! நீர் மிகக் கடுமையானவராக இருக்கிறீர் என்பது உமக்குத் தெரியாதா?''

இல்லை. நாம் ஒரு உண்மையையே விளம்பினோம். அவ்வுண்மைக்குக் கடினம், இனிமை, இனிமையற்றது என்பது கிடையாது. அதன் தன்மை அதுவேதான். நம்மில் பலர் உள்ளதை நேருக்கு நேர் பார்ப்பதைத் தடை செய்து கொள்கிறோம். இது வெளிப்படையாகவும், தெளிவாகவும் உள்ளது. தன்னைப் பிரித்துக் கொள்வது என்பது வாழ்வின் வழி - உலகத்தின் வழியும் அதுவே. ஒவ்வொரு தனி மனிதனும் - மணமானாலும் இல்லாவிட்டாலும், ஒற்றுமையைப் பற்றிப் பேசினாலும், பேசாவிட்டாலும், நாட்டுப்பற்று, குறிக்கோளையடைதல், வெற்றி இவற்றைப் பற்றிக் கூறாவிட்டாலும், தன்மையமாகக் கொண்ட செய்கைகளினால் தன்னை உலகத்தினின்று பிரித்துக் கொள்கிறான். இத்தகைய பிரிவு எல்லை மீறுகையில், நரம்புக் கோளாறின் விளைவாய், ஏதோ ஒருவிதத் திறமை, கலை, நல்ல இலக்கியம் இவற்றை உண்டாக்குகிறது. உலகினின்றும் அதன் பல்வகை ஒலிகளினின்றும் வன்முறை, வெறுப்பு, இன்பம் இவற்றிலிருந்தெல்லாம்

தன்னை ஒதுக்கிக் கொள்ளுதல், 'பிரித்துக் கொள்வதின் ஒரு பகுதிதானே, இல்லையா? துறவி மெய்ந்நெறியின் பெயரா லும், கடவுளின் பெயராலும் இச்செய்கைகளைச் செய் கிறான். போட்டி மனப்பான்மையுள்ளவன், பிரிந்து ஒதுங்கு வதை உலகியல்பின் ஒரு பகுதியாக ஒப்புக்கொள்கிறான்.

இவ்வாறு பிரிந்து ஒதுங்குவதில் சில சித்திகளையடைதல் கூடும். ஒருவகைத் தன்மையுள்ள பேரெளிமையும், தன்னடக்கமுள்ள நோன்பும், ஒரு வகைச் செல்வாக்கைக் கொடுக்கின்றன. செல்வாக்கு என்பது ஒலிம்பிக் பந்தயத்தின் வெற்றி வீரருடையதாயினும் அல்லது பிரதம மந்திரியுடைய தாயினும் அல்லது மடாதிபதியுடையதாயினும் அல்லது மாதாக் கோவில் தலைமைப் பாதிரியுடையதாயினும் – அவை ஒன்றேதான். செல்வாக்கு எவ்வுரு ஏற்பினும் தீமையே. (இச்சொல்லை நாம் கையாளக் கூடுமானால்) செல்வாக்குடையவன் எக்காலத்திலும் உண்மையென்ற க்தவைத் திறத்தலாகாது. ஆகவே, தன்னைப் பிரித்துக் கொள்வது என்பது உண்மைக்கொரு வழியன்று.

வாழ வேண்டுமானால் ஒத்துழைப்பு என்பது இன்றியமை யாதது. அந்த ஒத்துழைப்பு சீடனிடமும் இல்லை, குருவினிடமும் இல்லை. குரு சீடனையும், சீடன் குருவையுமாக ஒருவரையொருவர் அழிக்கிறார்கள். இத்தகைய ஓர் உறவில் ஆசிரியன் – கற்பிப்பவன் – மாணாக்கன் – கற்பிக்கப்படுபவன் என்ற நிலையில் ஒத்துழைப்பதும், சேர்ந்து இயங்குவதும், கூடி ஆராய்வதும், ஒன்றாய்ப் பயணம் செய்வதும் எவ்வாறு முடியும்? சமூக அமைப்பின் படிப்படிப் பதவி நிலை, ஆட்சி, பதவிப் பிரிவுகள் இருக்கையில் – மெய்ந்நெறி வாழ்க்கையிலும் அல்லது இராணுவத்திலும் அல்லது வணிகத் துறையிலும், எதிலுமே – அந்தப் பதவிப் பிரிவுகளின் தன்மை என்பது உலகப் பற்றாகும். உலகைத் துறந்தபோதிலும் உலகப் பற்றில் அகப்பட்டுக் கொள்வோம்.

உலகப் பற்றின்மை என்பது ஒரு சாண் உடையும், ஒரு வேளை உணவும், தூண்டக்கூடிய மந்திரமும், ஒரு சொல்லைத் திரும்பத் திரும்பக் கூறுவதும் அன்று. உலகைத் துறந்தும், உள்ளத்தில் பொறாமை, பேராசை, அச்சம், அதிகாரத்தை ஒப்புக்கொள்ளல், அறிந்தவன், அறியாதவன் என்ற வேற்றுமை, இத்தகைய உலகத் தன்மைகளில் பங்கு கொள்வீரானால் நீரும் உலகப் பற்றுடையவரே. நிறை வேற்றத்தைத் தேடுவதும், புகழ் அன்றி அரிய குறிக்கோளை அது கடவுளாயினும் அன்றி எதுவாயினும் சரி, அதை முயன்று பெறுதலும் உலகப்பற்றேதான். பண்பாட்டின் வழிமுறையை ஒப்புக்கொள்வது, இம்மைக்குரிய வாழ்வின் இன்றியமையாத தன்மையே. இவற்றிலிருந்து விலகி மனிதன் கண்காணாத் தொலைவான மலையைப் போயடைவது இச்சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதாகாது. உண்மை, எக்காலத்திலும் உலக வழியில் இருப்பதன்று.

ஒருவர் தனியாக இருத்தல் வேண்டும். ஆனால், அது தன்னொதுங்கலில் இல்லை. பேராசையென்ற உலகத் திலிருந்தும், பகைமையிலிருந்தும், நுட்ப வழிகளையுடைய வன்முறையிலிருந்தும் விடுதலை என்பதே இத்தனிமையின் உள்ளடங்கிய குறிப்பு.

தனிமை என்பது, எந்நாட்டிலிருந்தும், எம்மதத்திலிருந் தும், எந்தக் கொள்கையிலிருந்தும், தீவிர நம்பிக்கையிலிருந் தும், ஒருவித உறவுமற்று ஒரு வெளி மனிதராக இருப்பதே யாகும். இவ்விதத் தனிமையே மனிதன் இழைக்கும் தீமையால் என்றுமே தீண்ட முடியாத, கள்ளமற்ற எளிமையை வந்தடையும். இம்மாசிலா எளிமையே, உலகில் குழப்பங்களிலிருந்தபோதிலும் அதோடு ஒட்டாமல் வாழ வகை செய்யும். எவ்வித குறிப்பிட்ட கோலத்தையும் அது உடையாக அணிவதில்லை. நன்மையின் மலர்ச்சி எந்தப் பாதையிலும் தோய்ந்து கிடப்பதில்லை. ஏனெனில் உண்மை ஒரு வழியற்ற வயல்.



## இந்தியா - 9

தியானம் என்பது அனுபத்தின் தொடர்ச்சியும், விரிவும் என்று எண்ணாதீர். அனுபவம் என்பதில் துய்ப்பவன் என்ற நிலை எந்நாளும் உண்டு - அவனும் இறந்த காலத்தில் கட்டுண்டவனே. அதற்கு எதிர்மாறாக, தியானம் என்பது முழுமையாகச் செயல் ஒழிந்த நிலை - அதுவே அனுபவம் யாவற்றினுக்குமொரு முடிவு. அனுபவத்திலிருந்து விளையும் செயல், இறந்த காலத்தில் வேரூன்றியது. காலத்தின் தளைக்குட்பட்டது. அது அழைத்துப் போவது உயிரற்ற ஒரு செயலை நோக்கியே - அதுவே ஒழுங்கின்மை. உள்ளதை உள்ளவாறே நோக்கும் மனதிலிருந்து விளையும் முழுமையான செயலற்ற நிலையே தியானம் - அதில் இறந்த காலத்தின் பிணைப்பு இல்லை. அதன் செய்கையானது சூளுரையின் மறுமொழியாகாது. சூளுரையின் செய்கையே அது; அதில் இரட்டை நிலை இல்லை. அனுபவத்தை மனதிலிருந்து வெளியேற்றுவதே தியானம். இது நினைவுள்ள நிலையிலும், நினைவற்ற நிலையிலும் எந்நேரமும் நடந்துகொண்டே இருப்பது. ஆகவே நாளின் ஒரு பகுதியில் மட்டும் நடைபெறும் குறுகிய செயலுமன்று. அது காலையிலிருந்து இரவுவரை தொடர்ந்து நடைபெறும் செயல் - காண்பானற்றுக் காணும் நிலை. ஆகவே அன்றாட வாழ்க்கைக்கும், தியானத்திற்கும் நடுவில் இடைவெளி யொன்றுமில்லை, மெய்நெறி வாழ்க்கைக்கும், உலக வாழ்க்கைக்குமுள்ள இடைவெளியும் பிரிவும் அதில் இல்லை. காண்பான் காலத்தில் கட்டுண்ட பொழுதே இப்பிரிவு ஏற்படுகிறது. இப்பிரிவில் உண்டாவது ஒழுங் கின்மை, துன்பம், குழப்பம் - இதுவே சமூகத்தின் நிலை.

தியானம் என்பது தனித்து நிற்குத்தன்மையுடையதன்று - சமூகத் தொடர்பானதுமன்று; இவையிரண்டையும் கடந்து நிற்பது. ஆகவே இரண்டையும் தன்னுடைத்தானது. இதுவே அன்பு. அன்பின் மலர்ச்சியே தியானம்.

காலை குளிர்ந்ததாக இருந்தது. நாள் ஏற ஏறப் பகல் பொழுது மிக்க வெப்பமுள்ளதாயிற்று. நகரின் குறுகிய, மனித நெருக்கமுள்ள, புழுதி நிறைந்து, அழுக்கு மலிந்த, ஆரவாரமுள்ள வீதிகளின் வழியே சென்றால், எல்லாத் தெருக்களுமே அவ்விதமாகவே உள்ளதைக் காண்பீர். மனிதப் பெருக்கத்தின் வெடிப்பையும் காண்பீர். கார் மெள்ளத்தான் நகர்ந்தது - தெருவின் நடுவிலும் மக்களின் நடமாட்டம். இப்பொழுது வெப்பம் மிகையாகியது - கார் ஹார்னை அடித்தவாறே, ஒருபாடாகப் பட்டணத்தைவிட்டு வெளியே வந்தோம். அதைப்பற்றி மகிழ்ச்சிதான். தொழிற் சாலையைக் கடந்து கடைசியில் ஒருவாறாக நாட்டுப் புறத்தை அடைந்தோம்.

வறண்டநாடு, மழை பெய்து நிறைய நாட்களாயின. மரங்கள் அடுத்த மழையை எதிர்பார்த்துக் காத்திருந்தன. காக்க வேண்டிய நாட்களோ மிக அதிகம். நாட்டுப்புற மக்களையும், கால்நடைகளையும், மாட்டு வண்டிகளையும், நடுவழியை அடைத்துக் கொண்டு நகராத எருமைகளையும் கடந்து சென்றோம். அந்தப் பழைய கோவிலையும் கடந்தோம். அது புறக்கணிக்கப்பட்டிருந்தபோதிலும், பழையதொரு புகலிடத்தின் தன்மையை உடையதாய் இருந்தது. மயிலொன்று மரச்செறிவிலிருந்து வெளிவந்தது. அதன் நீலக்கழுத்து வெய்யிலில் மிளிர்ந்தது. மோட்டார் வண்டியைப் பொருட்படுத்தாமல், மிகுந்த மாண்புடன் வயல்களிடை மறைந்தது.

பிறகு, இருமருங்கிலும் ஆழ்ந்த பள்ளங்களையுடைய, செங்குத்தான குன்றுகள் மீது ஏற ஆரம்பித்தோம். இப்பொழுது வெப்பம் சற்றுத் தணிந்தது. மரங்கள்

புத்துணர்வு பெற்றன. சிறிது வளைந்து குன்றுகள் வழியாக வீட்டையடைந்தோம். அப்பொழுது சிறிது இருட்டி விட்டது. விண்மீன்களை நன்கு காண முடிந்தது. அதை எட்டிப் பிடிக்க முடியும் என்ற உணர்வும் ஏற்பட்டது. இரவின் மோனம் மண் மீது விரிய ஆரம்பித்தது. இங்கு மனிதன் ஒரு வித தொல்லையுமின்றி தனிமையாய், விண்மீன்களை முடிவில்லாமல் நோக்கிக் கொண்டேயிருக்க லாம்.

அதற்கு முதல் நாள் புலியொன்று, ஒரு எருமையைக் கொன்றதாகவும், அந்த இரைக்காகத் திரும்பவும் மாலையில் அங்கு வரக்கூடும் என்றும் அம்மனிதன் கூறினான். நாம் புலியைக் காண வர விரும்புகிறோமா? என்று வினவி னான். எமக்கு அது மகிழ்ச்சியே எனக் கூறினோம். அவன் கூறினான். ''அவ்வாறானால், நான் இறந்த எருமைக்கருகில் மரத்தின் மேல் மச்சான் ஒன்றைத் தயாரித்து, ஒரு ஆட்டையும் அங்குக் கட்டி வைக்கிறேன். அப்புலி முதலிரையாக ஆட்டை நோக்கி வரும், அதன் பிறகே பழைய இரையைத் தேடிச் செல்லும்'' என்று கூறினான். புலியைக் காண வேண்டி ஓர் ஆட்டை இரையாக்குவதை நாம் விரும்பவில்லை. சிறிது நேரம் பேசிவிட்டு அவன் சென்றான். மாலையில் நண்பர் கூறினார் : ''நாம் வேண்டு மானால் காரில் காட்டுக்குள் செல்லலாம் – ஒருக்கால் அப்பொழுது அப்புலியை நாம் காணக்கூடும்.'' அந்தி மயங்கும் வேளையில் நாங்கள் காட்டுக்குள் 5–6 மைல்கள் சென்றோம். ஆனால், புலி அங்கு இல்லை. காரின் விளக்கினால் வெளிச்சங்கொண்ட அக்காட்டுப் பாதையில் திரும்பினோம். புலியைக் காணும் ஆசை அறவே ஒழிந்தது. அதைப்பற்றிய நினைவும் இல்லை. ஒரு மூலைத் திருப்பத்தில் திடீரென்று – அப்புலி அங்கே இருந்தது. பாதையின் நடுவில் மிகப் பெரிய உருவம். கூர்ந்து நோக்கும் ஒளியிடும் கண்கள். கார் நின்றது. பெரியதும் அச்சம் விளைவிப்பதுமான அப்புலி காரை நோக்கி உறுமிக்

கொண்டே வந்தது. காரின் ரேடியேட்டருக்கு முன், நமக்கு மிக அருகில் இருந்தது. திரும்பிக் காரின் பக்கமாக வந்தது. நாம் அதைத் தீண்ட அவாக் கொண்டு கையை நீட்டினோம். நண்பர், புலியைப் பற்றி நன்கு தெரிந்தவர். அதனால் கையைப் பிடித்து உள்ளே இழுத்தார். அது நீண்ட வேங்கை – சாளரங்கள் திறந்திருந்ததினால் அதன் வாடையை நுகர முடிந்தது. அது அருவருப்புள்ளதாக இல்லை. விலங்குத் தன்மையின் ஓட்டமும் அழகும் திறனும் அதனிடமிருந்தன. உறுமிக்கொண்டே கானகத்துக்குள் மறைந்தது. நாமும் வீட்டையடைந்தோம்.

அவர், தன் மனைவி, பல குழந்தைகள், இவ்வாறு குடும்பத்துடன் வந்திருந்தார். செல்வராகக் காணப்பட வில்லை. இருப்பினும் சீரான உடைகளை அணிந்திருந்தார். உணவுக்கும் குறையிருந்ததாகத் தோன்றவில்லை. வெளியே போய் விளையாடலாம் என்று கூறும்வரை குழந்தைகள் அமைதியாக அமர்ந்திருந்தனர். அவ்வாறு கூறியதும் குதித்து வெளியே ஓடினர். அவர் அலுவலகம் ஒன்றில் வேலையாக இருந்தார். அதையும் அவர் கடனே என்று செய்ததாகத் தோன்றியது. அவர் கேட்டார் : ''மகிழ்ச்சி என்றால் என்ன? ஏன் அது வாழ்நாள் முழுவதும் தொடருவதில்லை? மகிழ்ச்சியூட்டிய பல நொடிகளையும் நான் உணர்ந்திருக் கிறேன். மகிழ்வுடன் வாழ வேண்டுமென்று போராட்டம் செய்தபோதிலும் துயரமே எந்நாளும் இருக்கிறது. மகிழ்ச்சியுடன் மட்டுமே இருக்க முடியுமா?''

மகிழ்ச்சி என்றால் என்ன? நீர் மகிழ்ச்சியாக இருக்கும் பொழுது, அது அக்கணமே உமக்குத் தெரிகிறதா அல்லது அது கழிந்த சில நொடிக்குப் பின்னரேயா? மகிழ்ச்சி என்பது இன்பமா? இன்பம் தொடர்ந்து இருக்கக் கூடிய ஒன்றா?

''என் வரையில் இன்பம் நான் அறிந்த மகிழ்ச்சியுடைய ஒரு பகுதியே. இன்பமில்லாது மகிழ்ச்சியை என்னால் எண்ண முடியவில்லை. மனிதனின் முதல் உணர்ச்சியே

இன்பம்தான். அதை அகற்றிவிட்டால் மகிழ்ச்சி எப்படி இருக்கக்கூடும்?''

நாம், மகிழ்ச்சி என்ற கேள்வியைப் பற்றி ஆராய்ந்து கொண்டிருக்கிறோம் அல்லவா? நீர் முன்கூட்டியே ஒரு தீர்மானத்துக்கு வந்தாலும், அன்றி அதைப் பற்றி ஊகித்தாலும், நீர் இதில் மிக ஆழமாகப் புக முடியாது. பல கோணங்களையுடைய மனிதனுடைய சிக்கல்களைப் பற்றி ஆராய வேண்டுமானால் முதல் முதலிலிருந்தே விடுதலை தேவை. உம்மிடம் விடுதலை இல்லாவிட்டால், நீர் முளைக் கொம்பில் கட்டுண்ட பசுவைப் போல் ஆவீர். உம்முடைய ஆராய்ச்சியும் அக்கயிற்றின் அளவேயாகும். இதுவே எப்பொழுதும் நடைபெறுகிறது. கொள்கைகள், சூத்திரங்கள், நம்பிக்கைகள் அல்லது அனுபவங்கள் இவைகள் நம்மைக் கட்டுப்படுத்துகின்றன. இவற்றிலிருந்து நாம் ஆராயவும், சுற்றிப் பார்க்கவும் முற்படுகிறோம். இதுவே இயல்பாக நாம் ஆழ்ந்து ஆராய்வதைத் தடை செய்கிறது. நான் கூற விரும்புவது, இன்பந்தான் மகிழ்ச்சி யென்றால், அதுவே துன்பமாம்; நம்பிக்கையொன்றும் கொள்ளாதீர், எதையும் முன்கூட்டியே ஊகிக்காதீர், என்றும் தெளிவான கண்களால் பாருங்கள் என்பதே. இன்பத்தையும் துன்பத்தையும் பிரிக்க முடியாது. இவையிரண்டினுடைய இயக்கம் ஒன்றேதான் இல்லையா?

ஆகவே மகிழ்வு என்றால் என்ன? இன்பம் என்றால் என்ன? மலரொன்றை ஆராய வேண்டி இதழ் இதழாகப் பிரிக்கையில் முடிவில் மலர் என்று ஒன்றும் இருப்பதில்லை. இது நீர் அறிந்ததே. கையிலிருப்பது மலரின் சில துண்டுகளே. துண்டுகளால் மலரின் முழு அழகைத் தர முடியாது. ஆகவே இக்கேள்வியை நோக்கும்பொழுது நாம் அறிவுத் திறன் கொண்டு ஆராய்வதில்லை. அவ்வாறு செய்தால், அது அக்கேள்வி முழுவதையுமே ஒரு வறண்ட பொருளற்ற பாழ் வெளியாக்கும். நாம் இக்கேள்வியை ஆதரவுடைய கண்கள் கொண்டும், புரிந்துகொள்ளும்

கண்கள் கொண்டும், இதழிதழாகப் பிய்த்துப் போடாது, தொட்டு அறியும் கண்கள் கொண்டும் நோக்குகிறோம். ஆகவே அதைப் பல கூறுகளாக்கி வெறுங்கையுடன் திரும்பாதீர். ஆராயும் மனத்தை விட்டுவிடுங்கள்.

இன்பத்தைத் தூண்டி வளர்ப்பது எண்ணமன்றோ? எண்ணம், மகிழ்ச்சிக்கு ஒரு தொடர்ச்சியையும், நாம் மகிழ்ச்சியென்று அழைக்கும் 'நீடித்த இருப்பு' என்ற தோற்றத்தையும் தருகிறது. அதேபோன்று, எண்ணம் துன்பத்திற்கும் நீடித்த இருப்பைத் தரக்கூடும். எண்ணமானது, ''இது எனக்கு விருப்பம், அது விருப்பமற்றது'' என்றும் ''இதை வைத்துக் கொள்வேன்; மற்றொன்றை வெளியே எறிந்து விடுவேன்'' என்றும் கூறுகிறது. இவையிரண்டுமே எண்ணம் ஏற்படுத்தியவை. மகிழ்ச்சி இப்பொழுது எண்ணத்தின் வழியாக ஆகிறது. நீர் ''நான் இன்ப நிலையில் இருக்க வேண்டும்'' என்று கூறும்பொழுது, நீரே அவ்வெண்ணம், முன்விளைந்த அனுபவத்தின் நினைவும் நீரே! இன்பம், மகிழ்ச்சி என்று நீர் அழைப்பதும் இதையே.

ஆகவே இறந்த காலம், நேற்று அன்றிப் பல நேற்றைகள் என்பதே எண்ணம், அது கூறுவது: ''நான் முன்பு துய்த்த மகிழ்ச்சியின் நிலையிலேயே வாழ விழைகிறேன்.'' சென்று இறந்த ஒன்றை நிகழ்காலத்தில் உண்மையெனச் செய்து, அவ்வாறான ஒன்றை நாளை இழந்துவிடுவேன் என்றும் அஞ்சுகிறீர். இப்படி ஒரு தொடர் சங்கிலியை நீரே உருவாக்கியிருக்கிறீர். இத்தொடர்ச்சி இறந்த காலம் என்ற சாம்பலில் வேரூன்றியது. ஆகவே வாழும் பொருளன்று. சாம்பலில் ஒன்றும் மலராது. எண்ணம் என்பதே சாம்பல். ஆக, நீர் மகிழ்ச்சியை எண்ணத்தின் ஒரு பொருளாகச் செய்திருக்கிறீர். உம்வரையில் 'இருப்பது' என்பது எண்ணம் விளைத்த ஒரு பொருளாகும்.

இன்பம், துன்பம், மகிழ்ச்சி, துயரம் இவற்றைத் தவிர ஏதாவது பொருள் ஒன்று இருக்கிறதா? எண்ணத்தின்

தீண்டுதலற்ற நல்லருள் என்பதும் பேரின்பம் என்பதும் உள்ளனவா? எண்ணம் புன்மையானது. அது தன்னாற்றல் உள்ளதுமன்று. இந்தக் கேள்வியைக் கேட்கும்பொழுது எண்ணம் தன்னை இழக்கையில் அங்குக் கைவிடப்பட்ட நிலையின் ஒழுங்கு இருக்கிறது. அதுவே எளிமையின் அருள். அவ்வாறான எளிமை, விலங்குத் தன்மையும், இரக்கமில்லாத் தன்மையும் அற்றது. ஆனால் வலுக்கட்டாய மாக ஏற்கும் கடும் எளிமை, இன்பத்தையும், சலுகை கொண்டு வாழ்வதையும் கண்டு எண்ணம் அருவருப் படைந்ததால் விளையும் ஒன்று.

இந்தத் தன்னிழத்தலிலிருந்து - அதாவது, எண்ணம் தன்னைத்தானே கைவிடுவதால், அது தனக்கேற்படும் அபாயத்தைத் தெளிவுடன் நோக்குகிறது. மனத்தின் கட்டிடங்களனைத்தும் அமைதியடைகின்றன. உண்மையில் இந்நிலை அப்பட்டமான கவனமாகும். இதிலிருந்து வருவது சொற்களின் கட்டுக்கடங்காத நல்லருள், பேரின்பம் இவை. சொற்களைக் கொண்டு இவ்வனுபவத்தைத் உரைக்க முற்பட்டால் அது உண்மையாகாது.



## இந்தியா - 10

அசைவற்ற நிலையின் ஓட்டமே தியானம். மனத்தின் மோனமே செயலின் வழி. எண்ணத்திலிருந்து பிறக்கும் செயல் ஒழுங்கீனத்தை வளர்க்கும் செயலின்மையாகும். இம்மோனம் எண்ணத்தின் விளைவன்று அல்லது மனத்தின் வீண்பேச்சு ஓய்ந்த நிலையுமன்று. மூளை முழுமை அமைதியுடன் இருக்கையிலேயே மனமும் அசைவற்று இருக்கும். பல்லாண்டுகளாக எதிர்த்துத் தாக்கவும், வெளிப்படுத்தவும், தற்காக்கவும், தன்னை உறுதிப்படுத்திக் கொள்ளவும், பழக்கப்பட்ட மூளையின் அணுக்கள், உள்ளதை உள்ளவாறே காணும்பொழுதுதான் அமைதியை அடையும். இத்தகைய மோனத்திலிருந்து சீர்கேட்டை விளைவிக்காத செயல் ஒருக்கால் கைகூடலாம் – அதுவும், காண்பான், மையம், துய்ப்போன் இவை முடிவுற்ற பொழுதே – ஏனெனில், அந்நிலையில் காண்பது என்பதே செயல். எல்லா மதிப்பீடுகளும், நெறிமுறைகளும் முடிவுற்ற பொழுதில் உள்ள மோனத்திலேதான் 'காண்பது' என்பது சாத்தியமாகும்.

இக்கோவில், இதனுள் இருக்கும் தெய்வங்களைக் காட்டிலும் பழைமையானது. கோவிலிலுள்ள அத்தெய்வங் கள் சிறைப்பட்டிருந்தன. பருமனான சுவர்களையும், குதிரை, தெய்வங்கள், தேவதைகள் செதுக்கப்பட்ட வழி நடைகளிலுள்ள தூண்களையும் கொண்டதானது அக்கோவில். அவைகளுக்கு ஒருவித அழகின் சிறப்பு இருந்தது. நாம் அவற்றின் வழிச் செல்கையில்

இவையனைத்தும், அதனுடன் கரு அறையிலுள்ள கடவுளும் உயிர் பெற்றால் என்ன நேரும் என்று வியந்தோம்.

இக்கோவிலின் 'கரு அறை' காலத்தின் கற்பனைக்கும் மேற்பட்டதென்று கூறினார்கள். காலை வெய்யில் சுள்ளென்று தெளிவான நிழல்களை அவ்வழி நடைகளில் உண்டாக்கியது. அதன் வழிச் செல்கையில், எவ்வாறு மனிதன் தன் மனத்திற்குகந்ததாகவே தன்னுடைய தெய்வங்களை உண்டாக்கி, தன் கைகளைக் கொண்டு உருவமைத்து, அவற்றைக் கோவில்களிலும், மாதாக் கோவில்களிலும் வைத்து வணங்கி வருவதின் பொருள் என்ன என்பதைப் பற்றி வியந்தோம்.

பண்டை நாளைய கோவில்களில் ஒரு விந்தையான அழகும், திறனும் இருந்தன. இம்மண்ணே அவ்வுருக் கொண்டு தோன்றியதுபோல் இருந்தது. மனிதன் மண்ணில் தோன்றிய காலத்திலே உண்டாக்கிய இக்கோவிலிலுள்ள தெய்வங்கள் பட்டாடைகள், மாலைகள் அணிவிக்கப்பட்டு நறும்புகை, மணியொலி, பாடல் இவற்றால் திருப்பள்ளி எழுப்பப்பட்டன. பல காணி நிலப்பரப்பையுடைய அப்பெருங்கோவில் நூற்றாண்டுகளாக ஊட்டிய நறும்புகையால் நிறைந்திருந்தது.

இதைக் காண நாட்டின் எல்லா மூலைகளிலிருந்தும் ஏழை, செல்வந்தர் அனைவரும் வந்திருந்தபோதிலும், கருவறைக்குச் சில வகுப்பினரே அனுமதிக்கப்பட்டனர். அதற்குள் செல்லத் தாழ்ந்த கற்கதவும், அதையடுத்துப் பல்லாண்டுகளாய்த் தேய்ந்து போன சிறிய கைப்பிடிச் சுவரும் இருந்தன. கருவறையின் வெளியே கற்களால் செய்த இரு காப்பாளர் சிலைகள் இருந்தன. வெளியே வந்தபோது இடுப்புக்கு மேல் ஒன்றும் அணியாது, ஓதிக் கொண்டிருப்பவராகவும், ஆழ்ந்த கருத்துடையவராகவும், மேன்மை பொருந்தினவராகவும் அர்ச்சகர்கள் காணப்பட்டனர். நல்ல ஊட்டம் பெற்ற உடல், பெரிய

வயிறு, மென்மையான கைகள். பல ஆண்டுகள் ஓதி வருவதால் ஏற்பட்ட காரகரப்பான குரல்கள். அந்தத் தெய்வச் சிலைகள் வடிவமற்று காணப்பட்டன. ஒரு காலத்தில் நல்ல முகமுடையதாக இருந்திருக்கலாம். இப்பொழுது உறுப்புக்களை காண முடியவில்லை. அதன் மீதிருந்த அணிமணிகளோ விலை கடந்தவை.

ஓதுவது நின்றதும், உலகம் சுழல்வது நின்றுபோன அமைதியான உணர்வு. இங்கு சூரிய ஒளி இல்லை. எண்ணெய் விளக்குத் திரிகளினுடைய வெளிச்சம் மட்டுமே இருந்தது. திரிகளின் புகையால் அவ்வறையின் மேல்பாகம் கறுத்து, மிகவும் மூடுமந்திரமாகக் காணப்பட்டது.

எல்லாத் தெய்வங்களையும் மறைவிலும், இருட்டிலுமே தான் தொழவேண்டும் – இல்லாவிடில், அவைகளுக்கு இருப்பிடம் இல்லை.

பின்னர், திறந்த வெளியில் சூரிய வெளிச்சத்தில் வெளிவந்தபோது நீலவானையும், உயர்ந்து வீசியாடும் பனைமரங்களையும் பார்கையில் மனிதன் ஏன் தன்னையே தன் கையினாலும், மனத்தினாலும் உருவாக்கி, தன்னையே வணங்கவும் செய்கிறான் என்ற வியப்பு ஏற்பட்டது. அச்சத்திற்கும், அழகான அந்நீல வானத்திற்குமுள்ள இடைவெளி மிகையாகத் தோன்றியது.

அவன் இளைஞன், சுத்தமான கூர்ந்த முகமும், பளிச்சென்ற கண்களும், எளிதில் புன்சிரிப்பும் உடையவன். நாம் தோட்டத்தை எதிர்நோக்கியிருக்கும் சிறிய அறையின் தரையில் அமர்ந்தோம். தோட்டம் நிறைய ரோஜா மலர்கள். வெள்ளையிலிருந்து கிட்டத்தட்ட கருநிறம் வரை அவற்றின் வண்ணங்கள். ஒரு கிளையில் கிளியொன்று ஒளியுண்ட கண்கள், சிவந்த அலகுடன் தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருந்தது. தன்னைவிடச் சிறிய பறவையொன்றை உற்று நோக்கிக் கொண்டிருந்தது.

அவன் ஆங்கிலத்தில் நன்றாகப் பேசினான். ஆனால், சொற்களைக் கையாளுவதில் சற்றுத் தயக்கம். அந்தக் கணத்தில் ஆழ்ந்த யோசனை உள்ளவனாக இருந்தான். ''மெய்ந்நெறி வாழ்க்கை என்றால் என்ன?'' என்று நான் பல மத ஆசிரியர்களிடம் கேட்டிருக்கிறேன். அவர்கள் உரைப்ப தெல்லாம் வழக்கமான மறுமொழிகளே. அனுமதித்தால் அதே வினாவைத் தங்களிடமும் கேட்க விரும்புகிறேன். நான் நல்ல வேலையில் இருந்தேன், மணமாகாதவன், மெய்ந்நெறியால் மிகவும் ஈர்க்கப்பட்டேன். ஆகவே, அவ்வேலையை விட்டு விட்டேன். மெய்ந்நெறியற்ற இவ்வுலகில் ''மெய்ந்நெறியில் வாழ்வது என்றால் என்ன? என்பதைக் காண விரும்புகிறேன்.''

மெய்ந்நெறி வாழ்வு என்றால் என்ன என்று வினவுவதைக் காட்டிலும் வாழ்வு என்றால் என்ன? என்று கேட்பதே மேல். (நான் இந்த யோசனையைக் கூறலாம் என்றால்) அப்பொழுது ஒருக்கால் உண்மையில் மெய்ந்நெறி வாழ்வு என்பதை நன்கு புரிந்துகொள்ளக்கூடும். மெய்ந்நெறி வாழ்க்கை என்று பொதுவாக அழைக்கப்படுவது, நாட்டுக்கு நாடு, சூழ்நிலைக்குச் சூழ்நிலை, வகுப்புக்கு வகுப்பு, நம்பிக்கைக்கு நம்பிக்கை வேறுபடுவது. இவ்வாறு பலவிதமாக நிறுவனம் செய்யப்பட்டு, உரிமை கோரும் மதப்பிரசாரங்களினால் மனிதன் இடுக்கண்ணுறுகிறான். நாம், கோட்பாடுகளையும், பிடிவாதமான நம்பிக்கைகளை யும், சடங்குகளையும், இவை மட்டுமின்றி - மதம் என்ற பண்பாட்டின் ஒழுக்கத்தால் விளையும் கண்ணியம், நேர்மை எல்லாவற்றையும் - சற்றே தள்ளி வைக்க முடியுமானால், ஒருக்கால் மனித எண்ணத்தினால் தீண்டப் பெறாத மெய்ந்நெறி வாழ்க்கை என்பதைக் கண்டறியக் கூடும்.

ஆனால், நாம் இதைச் செய்வதற்கு முன்னால் - நாம் சொன்னதுபோல் - வாழ்வது என்றால் என்ன? இதைக் கண்டறிவோம். வாழும்பொழுது அந்நிலையின் உண்மை என்பது நாள்தோறுமுள்ள அலைச்சல், அன்றாட

வழக்கமான வேலைகள், அதனால் ஏற்படும் போராட்டங்கள், குழப்பங்கள், தனிமையின் ஏக்கம், செல்வம், வறுமை இவற்றின் இன்னல்கள், அழுக்குச் சூழல்கள், முன்னேற்றம் என்ற பேரவா, நிறைவேற்றத்தை நாடுதல், வெற்றி, துயரம், இனிய வாழ்க்கை, இவற்றின் பரப்பையே நாம் வாழ்க்கை என்று கூறுகிறோம். சண்டையில் வெற்றி அல்லது தோல்வி, இன்பத்தை முடிவில்லாமல் பின் தொடர்தல் இதை வாழ்வென்று கூறுகிறோம்.

இதற்கு எதிர்மாறாக, மெய்ந்நெறி வாழ்க்கை என்று ஒன்று உள்ளது. ஆனால், எப்பொருளிலும் அதற்கு நேர் எதிரான தன்மையின் விதையும் அப்பொருளிலேயே உள்ளது. ஒருவர், வெளியாடையை மாற்றிக் கொள்ளலாம். ஆனால் ஒரு பொருளின் இன்றியமையாப் பண்பு – அன்றும் இன்றும் எக்காலத்திலும் ஒன்றாகவேதான் இருக்கும். இந்த இரட்டை நிலை எண்ணத்தின் விளைவே. ஆகவே மேலும் குழப்பத்தை விளைவிக்கும். குழப்பத்தின் வழிநடையோ முடிவற்றது. இவையனைத்தும் நாம் அறிந்தவையே. பிறரால் சொல்லக் கேட்டும், நாமாகவே உணர்ந்தும் அறிந்த இதையே வாழ்க்கையென்று அழைக்கிறோம்.

மெய்ந்நெறி வாழ்க்கை ஆற்றின் அக்கரையில் இருப்பதன்று. இதே கரையில் – மனிதன் முழுமையாக வாடி வருந்தும் இக்கரையிலேதான் இருக்கிறது. இதையே நாம் புரிந்துகொள்ள வேண்டும். புரிந்துகொள்ளும் செயலே மெய்ந்நெறியின் செயல். விபூதியை அணிவதும், ஒரு சாண் துணியை அணிவதும், பாதிரியின் தொப்பியை அணிவதும், உயர் ஆஸனத்தில் அமர்வதும், அம்பாரியில் அமர்ந்து வலம் வருவதும் அன்று.

முழுமையாய் மனிதன் வரைமுறைகளுக்கு கட்டுப்படுவதையும், இன்பத்தையும், துன்பத்தையும் நன்கு காண்பதும் முதலில் முக்கியமாகும்.

மெய்ந்நெறி வாழ்க்கை என்றால் என்ன என்பது வீண் ஊகம், வீணான எண்ணமே. எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பது போலி எண்ணமேயாகும். கற்பனையும், உலக நெறியும் எண்ணங்களும் ஒன்று சேர்ந்து புனையும் கட்டுக்கதையே இது. உலகநெறி, சமூக, மத, தொழிற் சார்பான இந்த நெறிகளை ஒருவர் மறுத்தேயாக வேண்டும். இது அறிவினால் செய்யப்படுவதன்று. உலக நெறியின் அமைப்பு என்ற நிலையே நெறியற்றது. இதிலிருந்து மெல்ல நழுவுவதே மறுப்பாகும்.

உண்மையில் கேள்வி இதுவே. இந்த அமைப்பிலிருந்து நழுவுதல் கூடுமா? எண்ணமே இந்த அச்சந்தரக்கூடிய துன்ப நிலையை உண்டாக்கி, மெய்ந்நெறி, மெய்ந்நெறி வாழ்க்கை என்ற இவ்விரண்டிற்குமே முட்டுக்கட்டை போடுகிறது. எண்ணமோ, இவ்வமைப்பிலிருந்து தான் விலக இயலும் என நினைக்கிறது. அவ்வாறு செய்யும் அச்செய்கையே எண்ணத்தின் விளைவாகும். எண்ணத்திற்கு உண்மை இருப்பு என்பது இல்லை. ஆகவே, எண்ணம் மற்றுமொரு பொய்த் தோற்றத்தை உருவாக்குகிறது.

உலக நெறியின் அமைப்பைக் கடப்பது எண்ணத்தின் செயலன்று. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். இல்லாவிடில், எண்ணம் என்ற சிறையில் மறுபடியும் பிடிபடுவீர். பார்க்கப்போனால் 'நீர்' என்பது பல்லாயிர நேற்றைய நாட்களில் விளைந்த நினைவு, மரபு வழி, அறிவு இவற்றின் முடிச்சு அன்றோ? துயர் என்பது எண்ணத்தின் விளைவு. ஆகவே, துயர் முடிவுற்றால் சண்டை, பகை, பொறாமை, வன்முறை ஆகியவற்றின் உலகத்திலிருந்து வெளியேறக்கூடும். இவ்வெளியேறுதலே மெய்ந்நெறி வாழ்க்கை. இத்தகைய மெய்ந்நெறி வாழ்க்கை எவ்வித நம்பிக்கையும் அற்றது. ஏனெனில் அவ்வாழ்க்கை 'நாளை' என்பதே இல்லாதது.

''ஐயா! நீர் கேட்பது ஒரு நடக்காத செயலன்றோ? வியப்புக்குரிய அதிசயமொன்றையன்றோ வினவுகிறீர்? எவ்வாறு நான் எண்ணமேயற்று வெளியேறுவது? என்னிருப்பே எண்ணம் அன்றோ?''

அதுவேதான்! 'இருப்பு' என்பதே எண்ணம். அது முடிவடைதல் வேண்டும். தன்மையம் என்ற இத்தன்மை, எளிதாகவும், இயல்பாகவும் தன்னுடைய செய்கைகள் யாவிலிருந்தும் இறக்க வேண்டும். இவ்விறப்பே - புதிய மெய்ந்நெறி வாழ்க்கை என்ற பிறப்பாகும்.





## இந்தியா - 11

தியானம் செய்ய வேண்டுமென்று வலுவில் ஒரு நிலையையோ மனப்பாங்கையோ ஏற்படுத்திக் கொண்டால், அது ஒரு பொழுதுபோக்குக் கருவியாகவும், மனத்தின் விளையாட்டுப் பொருளாகவும் ஆகும். வாழ்வின் கலக்கத்திலிருந்தும், துன்பத்திலிருந்தும் விடுவித்துக் கொள்ளவேண்டுமெனத் தியானத்தில் இறங்கினால் அது கற்பனையின் அனுபவம். அதுவும் - தியானமாகாது. மனத்தின் அடியில் தேங்கிக் கிடந்து வெளிப்படாத நினைவுகளையுடைய மனமாயினும், வெளிப்படையான அறிவுடைய மனமாயினும், இவ்விரண்டுமே தியானத்தில் பங்கு கொள்ளல் ஆகாது. தியானத்தின் எல்லையையும், அழகையும் இவை எட்டிப் பார்க்கக்கூடாது. அவ்வாறு இருந்தால், அதற்கு மாறாக ஒரு காதல் நவீனத்தை வாங்கிப் படியுங்கள்.

அறிவதும், திரும்பவும் அடையாளங்கொண்டு அறிவதும், அவ்வமயம் ஏற்படும் நிகழ்வை நினைவு கூர்வதும், தியானத்தின் முழுமையான கண்காணிப்பில் இல்லை, தன்னை அளவுபடுத்திக் கொள்ளுதல், தன்மையம், இவற்றையுடையவை காலமும் எண்ணமும். இவை தியானத்தில் அடியோடு முடிவடைகின்றன.

ஒளி பிறக்கும் அந்நொடியிலேயே எண்ணங்கள் அழிவடையும். தியானத்தைப்பற்றி வலுவில் துய்ப்பதும், நினைவு கூர்வதும், அதை விவரிப்பதும் சென்ற காலத்தின் வெற்றுச் சொற்களே! சொல்லிற்கு எக்காலத்திலும் உண்மை இருப்பு இல்லை. காலத்தைக் கடந்த அக்கணத்தில்,

இறுதியே உடனடித் தொடக்கமும் ஆகும். ஆனால், கடந்து நிற்கும் அந்த இறுதி என்பது இடுகுறியற்றது. அது மனித உருவன்று, அது தெய்வமுமன்று.

விடியுமுன் காலையில் - அந்த மலையடிவாரம் சிறப்பான அமைதியுடையதாக இருந்தது. ஆந்தையின் அலறலும் நின்றுபோனது - தொலைவிலுள்ள குன்றங்களிலிருந்து, அதன் இணையும் மறுகுரல் கொடுக்கவில்லை - நாயொன்றும் குரைக்கவில்லை - ஊர்ப்புறம் இன்னமும் கண் விழிக்கவில்லை. கிழக்கில் ஒளியின் மினுமினுப்பு - ஒரு வகை அறிகுறி - தென் சிலுவைச் சுடர்மீன் இன்னும் மறையவில்லை. இலைகளின் கிசுகிசுப்பும் அங்கில்லை. மண்ணும் தந்நிலையில் சுழலுவதும் நின்றுபோன உணர்வு. அம்மோனத்தைத் தீண்டவும், நுகரவும் இயலும். அம்மோனம் ஊடுருவுந் தன்மையதாய் இருந்தது. அது அசைவற்ற மரங்களினுடையதும், குன்றுகளினுடையதும் அன்று. நாமும் மோனத்தினுடையதாகவே இருந்தோம். அதுவும் நாமும் இரண்டறக் கலந்திருந்தோம். ஒலி, அமைதி என்ற பிரிவு அங்கில்லை. அந்த அசைவற்ற கருங்குன்றங்கள் நம்மைப் போலவே மோனத்தின் தன்மையுடையதாகவே இருந்தன.

அம்மோனம் சுறுசுறுப்புள்ளது. அது ஒலியின் எதிர் மாறான அமைதியன்று. விந்தை மிகுந்த அக்காலையில் அது முழுமுதற் பொருளின் நறுமணம் போன்றும், புலனறிவோடும், உணர்வோடும் சாளரத்தின் வழி உட்புகுந்தது. நாம் சாளரத்தின் வெளியே நோக்குகையில் எல்லாப் பொருள்களும் தத்தம் இடைவெளி இழந்து ஒன்றாயின. அவ்வைகறைப் பொழுதோடு நம் கண்களும் விழிப்புற்றன. யாவும் புதியவையாக நோக்கினோம்.

''பால் உணர்வு, ஏற்றத்தாழ்வற்ற சமூக நிலை, கடவுள் இவற்றில் நான் அக்கறை கொண்டவன். இவையே வாழ்வில் பொருட்படுத்த வேண்டியவை - மற்றெதுவு

மில்லை. அரசியல், மதங்கள் அவையொட்டி மதக்குருக்கள், அவர்களுடைய வாக்குறுதிகள், சடங்குகள், குற்றத்தை ஒப்புக்கொள்ளுதல் - இவையெல்லாம் மனிதனைக் குறைவு படுத்துவதாகக் காண்கின்றன. அவை எப்பொருளுக்கும் விடையளிப்பதுமில்லை, உண்மையில் சிக்கல்களைத் தீர்ப்பதுமில்லை. அவை சிக்கல்களைத் தள்ளிப் போடவே உதவுகின்றன. அவை பாலுணர்வைப் பலவிதமாக நிந்தனை செய்கின்றன. சமூக ஏற்றத்தாழ்வுகளைத் தொடர்ந்து நீடிக்கவும் செய்கின்றன. அவர்களுடைய மனத்தின் தெய்வமோ ஒரு கல். அதற்கு அவர்கள் காதல், உணர்ச்சியுருக்கம் என்ற உறைகளை அணிவித்து இருக்கிறார்கள். என்வரையில் அவை உபயோகமற்றவை. இவற்றையெல்லாம் நாம் ஒதுக்கி வைத்துவிட்டு, பால் உணர்வு, சமூகத் துன்பங்கள், கடவுள் என்றழைக்கப்படும் பொருள் என்ற மூன்றை மட்டுமே எடுத்துக் கொள்வதற்காக நான் இதைக் கூறுகிறேன்.''

''உணவு எவ்வளவு தேவையான ஒன்றோ அதேபோன்று எனக்குப் பால் உணர்வும் தேவை. ஆண், பெண், இரவின் இன்பம் இவற்றை இயற்கை படைத்திருக்கிறது. கடவுள் என்று சொல்லப்படும் உண்மையைக் கண்டுபிடிப்பது எத்தகைய சிறப்பு வாய்ந்ததோ என்னளவில் பால் உணர்வும் அவ்வளவு முக்கியமே. தன் இல்லாளிடம் அன்பு காட்டுவதும், அண்டை அயலாரிடம் அக்கறை காட்டுவதும் ஒரேயளவான முக்கியத்துவத்தைக் கொண்டது. பால் உணர்வு எனக்குச் சிக்கலான ஒன்றல்ல. அதில் நான் இன்பமடைகிறேன். ஆனால், என்னுள் ஒருவித அச்சம், தெரியாத ஒன்றைப் பற்றிய அச்சம் உள்ளது. இவ்வச்சத்தை யும், துன்பத்தையும் ஒரு வினாவின் விடையாக அன்றி அதற்குள் புகுந்து, அதிலிருந்து தெளிந்து அறிய விரும்புகிறேன். உங்களுக்குப் போதிய நேரமிருந்தால் இவற்றை ஆராய்வோம்.''

நாம் இம்மூன்றில் கடைசியாகக் கூறிய அச்சம் என்றதை முதலில் எடுத்துக் கொண்டால், மற்ற இரண்டு வினாக்களையும் ஆழ்ந்து புரிந்துகொள்ள இயலும். ஒருக்கால் அப்பொழுது அதன் உட்பொருள், இன்பம் என்ற சொல்லின் பொருளிலிருந்து வேறாக இருக்கக் கூடும் அன்றோ?

உம்முடைய நம்பிக்கையை வலுப்படுத்திக் கொள்ள விரும்புகிறீரா? அல்லது உண்மையில் மெய்யைக் காண விரும்புகிறீரா - அதைத் துய்ப்பதற்காக மட்டும் அன்று, கவனமும், தெளிவும் உள்ள மனத்தாலும், உள்ளத்தாலும் உண்மையில் காண விழைகிறீரா? நம்பிக்கை என்பது ஒன்று, காண்பது என்பது வேறொன்று. நம்பிக்கையும் மதத்தைப் போன்றே இருட்டிற்கு அழைத்துச் செல்லும். மேலும், மாதாக் கோவில்களுக்கும், இருண்ட கோவில்களுக்கும், சடங்குகள் அளிக்கும் இன்ப உணர்ச்சிகளுக்கும் உம்மை அழைத்துச் செல்லுகிறது. ஆகவே நம்பிக்கையின் வழியில் உண்மை இல்லை. மனத் தோற்றங்களும் கற்பனையின் கைத்திறமைகளுமே அக்கோவில்களை நிரப்பும் பொருள்கள் ஆகின்றன.

அச்சத்தை வேருடன் மறுத்தால் உமக்கு நம்பிக்கையின் தேவை இல்லை. ஆனால், நம்பிக்கையோடும், பிடிவாதமான கொள்கையோடும் நீர் ஒட்டிக் கொண்டால், அச்சம் வலியுறுத்தப்படும். மதச் சார்பாக மட்டுமே நம்பிக்கை எழுவதில்லை. நீர் எம்மதத்தினராக இருந்தபோதிலும் நம்பிக்கை எவ்வகையிலாவது வந்து உம்மையடையும். தனிப்பட்ட வகையிலோ, தனிச் சிறப்புள்ள வகையிலோ நம்பிக்கை கொண்டவராக இருப்பினும், அது தெளிவின் ஒளியால் விளைந்ததன்று. எண்ணம் - தானே அச்சம் என்ற நிலையை ஏற்பாடு செய்கிறது. தன்னை இந்நிலையிலிருந்து காத்துக் கொள்ள வேண்டி நம்பிக்கையில் முதலீடும் செய்கிறது. மெய்க் காணும் வழியைக் கூர்ந்து நோக்குதலில் உள்ள விடுதலை எண்ணத்தின் வழியில் இல்லை.

அளவிடற்கரிய பொருளை எண்ணத்தால் அடைய முடியாது. ஏனெனில் எண்ணம் எப்பொழுதும் அளவு கோலுடையது. எண்ணத்தினுடையவும் அல்லது காரணங்காட்டி உறுதிப்படுத்துவதால் ஏற்படும் அமைப்பின் கட்டுக்குள் அரிய பொருள் இருக்க முடியாது. மற்றும் அப்பொருள் உணர்ச்சியின் வசத்தினாலோ, உருக்கத் தினாலோ விளைவதன்று. எண்ணத்தை முற்றும் ஒழித்தலே கவனமாகும். அதுவே அன்பு. பெரும் பொருளை நீர் தேடித் தேடி அலைகையில் அது உமக்குக் கிட்டாது. உமக்கு அதிருஷ்டம் இருந்தால் உம்மைத் தானாகவே வந்தடையும். அந்த அதிருஷ்டம் என்பது உள்ளம் என்ற திறந்த சாளரம் – எண்ணம் அல்ல.

''நான், என்னுடையதாகவே பேணி, கருத்துடனும், உறுதியாகவும் வளர்த்த என்னையும், நான் அமைத்த முழுக் கட்டிடத்தையும் – மறுக்கச் சொல்கிறீரே – இது கடினமானது இல்லையா? கடவுள் என்று அழைக்கப்படும் இன்பத்தை என்றுமிருப்பதாக எண்ணியிருந்தேன். இதுவே என்னுடைய பாதுகாப்பு. அதிலேயே என் எதிர்கால நம்பிக்கையும், மகிழ்ச்சியும். நீர் கேட்பதோ இவற்றையெல்லாம் ஒதுக்கி வைப்பது. இது கூடுமா? உண்மையில் அவ்வாறு செய்ய நான் விரும்புகிறேனா? தவிர, இவ்வாறு ஒதுக்கி வைத்தால், அதற்குக் கைம்மாறாக ஏதோ ஒன்றை நீர் வாக்குறுதி அளிப்பதாக அல்லவா ஏற்படுகிறது? நிச்சயமாக நீர் பரிசொன்றும் அளிப்பதாகக் கூறவில்லையானாலும், நான் உண்மையாக – உதட்டளவில் இல்லாமல், எதை நம்பி இவ்வளவு காலம் வாழ்ந்து வந்தேனோ இவற்றையெல்லாம் உதறித்தள்ள இயலுமா?

நீர் வலுவாக ஒதுக்கித் தள்ள முயன்றால், அது முரண்பாட்டிலும், துன்பத்திலும், இடையறா இடரிலும் கொண்டுவிடும். ஆனால், இந்த விளக்கின் உண்மையை – அதாவது அதன் மின்மினுக்கும் சுடர், திரி, பித்தளைத் தண்டு – இவற்றை காண்பது போல, இதன் உண்மையைக் காண்பீரானால் நீர் முழுவதும் வேறுபாடான ஒரு

நிலைக்குள் காலெடுத்து வைப்பீர். இத்தகைய நிலையில் அன்புக்குச் சமூகச் சிக்கல்கள் இல்லை. சாதி, வகுப்பு, இன அறிவைப் பற்றிய பிரிவுகளும் இல்லை. ஏதாவது ஒரு வகையில் சம உணர்வு அற்றவர் என்போருக்கே இணை, நிகர் இவற்றின் தேவைகள். தன்னிகரில்லை என நினைப்பவர்களுக்குத் தன் பிரிவு, தன் வகுப்பு, தன் வழி என்ற தேவைகள். தான் தாழ்ந்தவன் என நினைப்பவர் எப்பொழுதும் உயர்தலை வேண்டி முயல்பவர், அடக்கப் பட்டவர், அடக்கியாளுபவராக வேண்டும் என்ற நிலை. இதைச் சட்டமாக அமலாக்குதல், அத்தகைய சட்டம் தேவையானபோதிலும் இந்தக் கொடுமையுள்ள பிரிக்குந்தன்மை முடிவடைவதில்லை. நாம் வேலை மூலம் பதவியடைய விழைகிறோம். அதிலிருந்தே ஏற்றத்தாழ்வு என்ற சுழலின் தொடக்கமும் உருவாகிறது. சமூகமே உருவாக்கியுள்ள நெறிமுறைகளினால் சமூகச் சிக்கல்கள் முடிவுறாது. அன்புக்கு சமூகம் உருவாக்கியுள்ள நெறிமுறை யில்லை. அன்பு சீர்திருத்தமும் அன்று. அன்பு இன்பமாகும் பொழுது துன்பத்தைத் தவிர்க்க முடியாது. அன்பு எண்ணமன்று – இன்பம், பால் உணர்வின் இன்பம், நிறை வேற்றத்தின் பயனான இன்பம் எனப் பலவகை இன்பங்களைத் தருவது எண்ணம். ஒரு கணத்தின் இன்பத்தை வலுப்படுத்தி அதற்கு தொடர்ச்சியையும் தருகிறது, இன்பத்தை நினைவுகூர்ந்த அடுத்த கணத்திலும் இன்பம் உண்டு என்ற உறுதியை ஏற்படுத்துகிறது. இவ்வின்பத்திற்காக எழும் உரிமைக் கேள்வியே பால் உணர்ச்சி இல்லையா? இதனுடன் எழும் மிகுந்த காதல், இளகும் மனம், கவனிப்பு, தோழமை, துணை என்று மற்றெல்லாம் இருப்பினும் – அவற்றையெல்லாம் ஊடுருவி நிற்கும் இழை துன்பமும் அச்சமுமே. எண்ணம் தன் செயலால் இதை அறுந்து போகாமல் இருக்கச் செய்கிறது.

''பால் உணர்விலிருந்து இன்பத்தை நீக்க முடியுமா! நான் அவ்வின்பத்தின் வழியே வாழ்கிறேன். அதை நான்

விரும்புகிறேன். பணம், பதவி, புகழ் இவற்றையெல்லாம் விட அவ்வின்பமே எனக்குப் பெரிது. இன்பம் துன்பத்தைத் தருவதாயினும், துன்பத்தைக் காட்டிலும் இன்பம் அதிகமாக இருப்பதால் நான் துன்பத்தைப் பொருட்படுத்தவில்லை.''

நீர் விழையும் இவ்வின்பம், - வயதின் பொருட்டாகவும், எதிர்பாராத நிகழ்வினாலும், காலத்தினாலும் முடிவுறுகையில் - அப்பொழுது நீர் நன்கு அகப்பட்டுக் கொள்வீர். அச்சமயம் துயரமே உங்கள் நிழல். அன்பு என்பது இன்பமல்ல, வேட்கையின் விளைவுமல்ல. அதனால்தான் ஐயா! நீர் வேறு ஒரு நிலையை அடைதல் வேண்டும். அந்நிலையில் நம்முடைய சிக்கல்களும், நம்மால் ஏற்படும் விளைவுகளும் கரைந்து தெளிவுறும். அதுவன்றி, நீர் வேறு எது வேண்டுமானாலும் செய்துபாரும் - துயரமும், கலக்கமும் அங்கு இருந்தே தீரும்.



## இந்தியா - 12

பெரிய பறவைக் கூட்டங்கள் தலைக்கு மேலே பறந்து கொண்டிருந்தன. சில பறவைகள் அகன்ற ஆற்றைக் கடந்தும் மற்றும் சில உயரப் பறந்தும், பெரிதாக வட்டமிட்டுக் கொண்டும் இருந்தன. அவற்றின் சிறகுகள் சிறிதும் அசைந்ததாகத் தெரியவில்லை. மிக உயர இருந்த பருந்துகள் காற்றை எதிர்த்துத் திசை மாறியபொழுது சூரியனின் வெண்ணொளியில் அவை சிறுதுளிகள் எனத் தோன்றின. தரை மீது இருக்கையில் பருந்துகள் வெளுத்த கழுத்துடனும், அகன்று கனத்த இறக்கைகளுடனும் காணப்பட்டன. புளிய மரத்தில் இருந்த சில பருந்துகளைக் காகங்கள் துன்புறுத்திக் கொண்டிருந்தன. சிறப்பாக ஒரு காகம் பருந்தொன்றின் மீது தொத்தி உட்கார முயன்றது. அப்பருந்து சலிப்புற்றுப் பறக்கையில் காகம் பின்புறம் பறந்து பருந்தின் மீது உட்கார்ந்து கூடப் பறந்து சென்றது. பருந்தின் முதுகில் காகம் செய்த சவாரி, பார்க்கப் புதுமையாக இருந்தது. காகத்தை விலக்க முயன்றதில் ஒருபாடாகக் காகம் ஆற்றின் மறுகரைக்குச் சென்று மரங்களிடை மறைந்தது.

கிளிக்கூட்டம் வளைந்தும் நெளிந்தும் கிறீச்சிட்டும், உலகம் முழுவதும் தம் வருகையைப் பறை சாற்றியும் ஆற்றின் மேல் பறந்து வந்தது. பளிச்சிடும் பச்சை நிறத்துடனும், சிவந்த மூக்குகளுடனும் உள்ள பல கிளிகள் புளிய மரத்தில் இருந்தன. காலையில் வெளியே வந்து ஆற்றின் வழியே போய் மாலையில் கீச்சென்று கத்தியவாறு வருவதும் போவதுமாய் இருந்தன. அதிகமாக நாள் முழுவதும் வெளியில் தங்கி, வயல்களில் திரிந்து

தானியங்களைக் கள்ளத்தனமாக உண்டும், தமக்குக் கிடைத்த பழங்களைக் கொறித்தும், மாலையில் திரும்பி வந்தன. அவற்றைப் புளிய மரத்தில் காணலாம். சில நொடிகளில் மாயமாய் மறைந்துவிடும். அந்தப் பச்சை இலைகளினூடு அவற்றைக் கண்டுபிடிப்பது அரிதாய் இருந்தது. மரத்தின் ஒரு பொந்தில், ஆணும் பெண்ணுமாய் அவை வாழ்ந்தன. எக்களிப்போடு கிறீச்சிட்டுக் கொண்டு அவை பறக்கும்போது மிக நெகிழ்ச்சியுடன் காணப்பட்டன. காலையிலும், பின் மாலையிலும் ஆற்றின் குறுக்கே கதிரவன் அமைத்த வழி காலையில் பொன்னின் ஒளி, மாலையில் வெள்ளியின் ஒளி எனத் திகழ்ந்தது. மனிதர் ஆற்றை வணங்குவதில் வியப்பொன்றும் இல்லை. ஓர் உருவத்தைச் சடங்குகள், நம்பிக்கைகள் இவற்றோடு வழிபடுவதைக் காட்டிலும் இதுவே மேல். அந்த ஆறு ஆழம் நிறைந்ததாகவும், ஓட்டமுள்ளதாகவும், உயிருடையதாகவும் இருந்தது. அதன் கரைகளிலிருந்த குட்டைகளில் நீர் எப்பொழுதும் தேங்கி நின்றது.

ஒவ்வொரு மனிதனும், தன்னை ஒரு குட்டையில் தனியாகத் தேக்கிக் கொண்டு அழிவடைகிறான். அவன் ஆற்றின் முழு வெள்ள ஓட்டத்தை அடைவதில்லை. அந்த ஆறு, மனிதர்களால் மேல்புறத்தில் மிகவும் மாசுற்ற போதிலும், நடுப்பகுதியில் மாசற்று நீலமாகவும், பசுமையாகவும், ஆழமாகவும் இருந்தது. கதிரவன் எழா வைகறைப் பொழுதில் அந்த ஆறு சிறப்பான மேன்மையோடு ஒளிர்ந்தது. அசையா அமைதியுடன் உருக்கிய வெள்ளியென ஒளிர்ந்தது. பரிதியும் மரங்கள் மீது ஏறிவர, செம்பொன்னாகவும் திரும்பவும் வெள்ளிப் பாதையாகவும் மாறியது. நீர் உயிர் பெற்றது.

ஆற்றை நோக்கியிருந்த அவ்வறை மிகவும் குளிர்ந்ததாக இருந்தது. அது முன்பனிக்காலம். எதிரே அமர்ந்திருந்த அம்மனிதர் இளமையாக இருந்தார். அவருடன் மனைவி

இன்னும் இளமையாகவும் இருந்தாள். சற்றே குளிர்ந்த, கெட்டியான தரை மீது விரித்த கம்பளத்தில் நாம் எல்லோரும் அமர்ந்தோம். அவர்கள் ஆற்றைப் பற்றி அக்கறை காட்டவில்லை. அந்த ஆற்றின் அகலத்தையும், அழகையும், பசுமையான அக்கரையையும் நாம் சுட்டிக் காண்பித்தபொழுது மரியாதைக்குரிய வகையில் ஏற்றுக் கொண்டனர். அவர்கள் சற்றுத் தொலைவில் வடக்கிலிருந்து பஸ்ஸுலும், ரயிலும் ஏறி தங்கள் மனதிலிருப்பதை எம்முடன் ஆவலாக உரையாட வந்திருந்தனர். நேரமிருந்தால் பின்பு காணக்கூடிய பொருள்தானே அந்த ஆறு!

அவர் சொன்னார், ''மனிதன் என்றும் விடுதலை பெறுவது இல்லை. தன் குடும்பத்தோடும், தன் குழந்தைகளோடும், தன் வேலையோடும் கட்டுண்டவன். சாகும்வரை பொறுப்புகளை உடையவன். தவிர, ஒருக்கால்... துறவியாகவோ, சந்நியாசியாகவோ ஆனால்...'' என்று இழுத்தார்.

அவர் மனிதன் விடுபட வேண்டியதின் தேவையை நன்குணர்ந்தபோதிலும் போட்டியும், விலங்குமுறையுள்ள இவ்வுலகத்திலிருந்து தன்னால் அதையடைய இயலாது என்றும் உணர்ந்தார். அவருடைய மனைவி சற்று வியப்புக் குறியுடன் அவர் கூறுவதைக் கேட்டாள். தன் கணவன், ஆழ்ந்த யோசனையுள்ளவராய் தன் எண்ணங்களைத் தடங்கலின்றி நன்றாக ஆங்கிலத்தில் தெரிவிப்பதைக் கேட்டு மகிழ்ச்சிக் கொண்டாள். அது அவளுக்கு உடைமையைப் பற்றிய பெருமையை அளித்தது. அவள் சற்றே பின்புறம் உட்கார்ந்திருந்தாளாகையால், அதைப்பற்றி அவர் சிறிதும் உணரவில்லை.

''எப்பொழுதாவது ஒருவனுக்கு விடுதலை உண்டா?'' எனக் கேட்டார். சில அரசியல் எழுத்தாளர்களும், கொள்கைவாதிகளும், கம்யூனிஸ்டுகளைப் போலவே

அவர்களும் விடுதலை என்பது நடுத்தர வகுப்பினரின் மனப்பான்மை என்றும், அடைய முடியாத ஒன்று என்றும் உண்மையற்றது என்றும் கூறுகிறார்கள். குடியரசுவாதிகளின் உலகமோ விடுதலையைப் பற்றி ஏராளமாக பேசுகிறது. அவ்வாறே முதலாளி வகுப்பினரும். நிச்சயமாக ஒவ்வொரு மதமும் தத்தம் பெருமையை எடுத்துரைக்கும்பொழுது வாக்குறுதிகளால் விடுதலையை வலியுறுத்தினபோதிலும் அவைகளே, தம்முடைய தனிப்பட்ட நம்பிக்கைகளாலும், கொள்கைகளாலும், மனிதனைச் சிறைப்படுத்துகின்றன. அவற்றின் வாக்குறுதிகளும் இச்செய்கையாலேயே புறக்கணிக்கப்படுகிறது. உண்மையிலேயே மனிதன் அறிவு நுட்பத்தின் வழியாக இல்லாமல், விடுதலையுள்ளவனாக உலகில் இருக்க முடியுமா என்று கண்டுபிடிக்கவே இங்கு வந்துள்ளேன். அலுவலகத்தின் அன்றாட வேலை முறைகளிலிருந்தும், நான் வாழும் சிறிய பட்டணத்தின் வழக்கமான வாழ்விலிருந்தும் விடுமுறைப் பெற்று இங்கு வந்திருக்கிறேன். என்னிடம் மேலும் பணமிருந்தால் தன்னுரிமையோடு, விருப்பம்போல் எங்கு வேண்டுமானாலும் செல்லவும், எதை வேண்டுமானாலும் செய்யவும் – சித்திரம் வரையவும் சுற்றுப் பயணங்கள் செய்யவும் இயலும். ஆனால், அது நடவாத செயல். என்னுடைய வருமானமோ அளவுள்ளது. எனக்குப் பொறுப்புகளும் உண்டு. நான் அவற்றால் சிறைப்பட்டுள்ளேன்.''

அவர் மனைவி இவற்றையெல்லாம் சரிவரப் புரிந்து கொள்ளவில்லையாயினும் ''பொறுப்புகள்'' என்ற சொல் கேட்ட மாத்திரத்தில் கூர்ந்து செவி சாய்த்தாள். அவர் தன் வீட்டைவிட்டு உலகம் முழுவதும் திரியவேண்டும் என்கிறாரோ என்று வியந்திருக்கலாம்.

மேலும் கூறினார், ''இந்தப் பொறுப்புக்கள் உள்ளும் புறமுமாய் என்னைத் தன் விருப்பத்திற்கு எதிராகத் தடை செய்கின்றன. உலகத்தைப் பற்றியதான தபாலாபீஸ், கடை கண்ணிகள், அலுவலகம் இவற்றிலிருந்து முற்றிலும்

விடுதலை பெற முடியாது என்பதைப் புரிந்து கொள்கிறேன். நான் கண்டுணர வந்தது, உள்ளத்தளவில் விடுதலை என்பது நடைபெறும் செயலா என்றுதான்.''

தாழ்வாரத்திலிருந்த புறாக்கள் கூவிப் படபடத்தன. கிளிகள் சாளரத்தின் வெளியே கீச்சிட்டன. அப்பொழுது பரிதியின் கதிர்கள் பொலியும் அப்பசுஞ் சிறகுகளிலே ஒளியிட்டன.

விடுதலை என்றால் என்ன? அது ஒரு கருத்தா? அல்லது சிக்கல் வரிசையில் அகப்பட்டுக் கொள்வதால் எண்ணம் வளர்க்கும் ஒரு உணர்வா? விடுதலை என்பது ஏதோ ஒன்றின் விளைவா, ஒரு கைம்மாறா அல்லது ஒரு செய்கையின் இறுதியில் கிடைக்கும் பொருளா? சினத்திலிருந்து உம்மைத் தவிர்த்துக் கொள்வது விடுதலையா? நீர் விரும்புவதைச் செய்ய இயலுமானால் அது விடுதலையா? பொறுப் பொன்றைக் கண்டபொழுது அதை ஒரு சுமையாகக் கருதித் தள்ளி வைப்பது விடுதலையா? ஒன்றை நாம் தவிர்க்கும்பொழுது அது விடுதலையாகுமா? அல்லது அதற்கு இணங்குகையில் விடுதலையா? எண்ணம் இந்த விடுதலையை அளிக்குமா அன்றி ஏதாவதொரு செயல் இந்த விடுதலை ஏற்படுத்துமா?

''நீர் சற்று மெதுவாக, படிப்படியாகக் கூறுங்கள் – அச்சமாக இருக்கிறது.''

விடுதலை என்பது அடிமைத்தனத்தின் எதிரிடையா?... சிறையிலிருக்கையில், சிறையில் இருக்கிறோம் என்று அறிந்து, சிறைக்கூடத்தின் எல்லாக் கட்டுப்பாடுகளையும் உணர்கையில், விடுதலை என்பது மனத் தோற்றமா? மனத் தோற்றம் எவ்விதம் விடுதலையளிக்கக்கூடும் அன்றி விடுதலை என்பது எண்ணத்தின் விநோதமா? நமக்கு உண்மையில் தெரிந்ததும், உண்மையில் உள்ளதும், சிறைப்பிடிக்கப் பட்டிருக்கிறோம் என்பதே. அடிமைத்தளை என்பது வெளிப் பொருள்களான வீடு, குடும்பம், தொழில்

என்பதில் மட்டுமல்ல – உள் மனத்தின் மரபு வழிமுறை, பழக்கங்கள், ஆதிக்கம், உரிமை, இன்பம், அச்சம், நிறைவேற்றம் அதன் பயன் என்று இன்னும் பலபல... வெற்றியடைவதால் உண்டாகும் மகிழ்ச்சியின் பொழுது ஒருவரும் இதிலிருந்து விடுதலை என்பதைப் பற்றிப் பேசுவதுமில்லை, நினைப்பதுமில்லை. துன்பம் நெருங்கி வந்தபோதே நாம் விடுதலையைப் பற்றிப் பேசுகிறோம். உள்ளும் – வெளியுமாக இப்பொருள்களிலெல்லாம் நாம் கட்டுண்டு கிடக்கிறோம். இதுவே இருப்பு எனும் சிறை. 'இருப்பு' என்னும் சிறையைத் தவிர்த்தலையே விடுதலை என்று கூறுகிறோம். 'இருப்பு' என்பதைத் தவிர்ப்பதாலும், அதிலிருந்து ஓடிப் போவதாலும் அல்லது அதையடக்குவ தாலும் அதிலிருந்து எவ்வாறாவது விடுவித்துக் கொள்வோம் என்று நம்புகிறோம்.

உள்ளாழ் மனத்தால் நாம் அறிந்தது – அடிமைத்தளை, தவிர்த்தல் என்ற இவையிரண்டே. தவிர்த்தலே அடிமைத்தளை என்பதை உருவாக்குகிறது.

''மன்னிக்கவும், எனக்கு ஒன்றும் புரியவில்லை.''

நீர் சினத்தையும், பகைமையையும் தவிர்க்குங்கால் என்ன நேருகிறது? நீர் பகைமையைத் தடுத்து ஒரு சுவர் அமைக்கிறீர். ஆனால், பகைமை அங்கு இருக்கத்தான் செய்கிறது. அந்தச் சுவர் பகைமையை உம்மிடமிருந்து மறைக்கிறது – அவ்வளவேதான். சினம் தவிர்க்க வேண்டும் என்று உறுதி செய்தால் இவ்வுறுதியும் சினத்தின் ஒரு பிரிவே. அதைத் தவிர்ப்பது சினத்தை மேலும் வலுவடையச் செய்கிறது. இவ்வுண்மையை நீர் நோக்கினால் உமக்குள் இது நிகழ்வதை நன்கு காணலாம். ஒன்றைத் தவிர்த்தல், அடக்குதல், கீழ்ப்படுத்துதல் அல்லது கடக்க முயலுதல் என்பதெல்லாம் உண்மையில் ஒன்றே – இவையாவும் மனவுறுதியால் ஏற்படும் வினைகளாகும். அப்பொழுது தவிர்த்தல் என்ற சுவரை மேலும் கெட்டிப்படுத்துகிறீர்கள்.

ஆகவே மேன்மேலும் அடிமைத்தளையில் வீழ்ந்து குறுகி, தாழ்ந்த மனப்பான்மையுடையவராவீர்கள். இந்தத் தாழ்ந்த குறுகிய மனத்திலிருந்தே விடுதலையையும் கோருகிறீர்கள். அவ்வாறு விழைதலே மற்றுமொரு தடுப்புச் சுவராகவும், மேலும் அற்ப மனப்பான்மையை உருவாக்கவும் செய்யும். ஆக ஒன்றைத் தவிர்த்தல் வேண்டி, மற்றொரு சுவர் அல்லது வேலி ஒன்றை அமைத்து அதற்கு வெவ்வேறு நிறமும், தன்மையும், பெருந்தன்மையுடைய சொற்களையும் தருகிறோம். ஆனால், தவிர்த்தல் என்பதே அடிமைத்தளை – அடிமைத்தளையே துன்பம்.

''அவ்வாறானால் – வெளியார் எவரும் ஒருவனைத் தம் விருப்பப்படி உதைக்கவும், வளைக்கவும் கூடும். ஆனால், உள்ளத்தில் தன்னுடைய சினம் முதலியவற்றிற்கு முழு ஆட்சி கொடுக்க வேண்டும் என்றல்லவா பொருள் ஏற்படுகிறது?''

நீர், இங்குக் கூறியவற்றிற்கு நன்கு செவிசாய்க்க வில்லையெனத் தெரிகிறது. இன்பந்தரும் பொருளானால், அது கொடுக்கும் மயக்கத்தை நீர் பொருட்படுத்துவதில்லை. அது மகிழ்ச்சியான உணர்வு. ஆனால், அதுவே நோய் தருகையில், நீர் அதைத் தவிர்க்கிறீர். இன்பத்தைப் பிடித்துக் கொண்டே துன்பத்திலிருந்து விடுதலையையும் விழைகிறீர். இவ்வின்பத்தைப் பிடித்து வைத்துக் கொண்டிருப்பதே – தவிர்ப்பு என்பதாகும்.

மறுமொழி கூறுவது இயற்கையே. ஊசி குத்தும்பொழுது ஏற்படும் வலிக்கு உடலளவில் மறுமொழி கூறாவிட்டால், நீர் மரத்துப்போன நிலையுடையவராவீர். அதேபோல் உள்ளத்தளவில் எதற்கும் மறுமொழி இல்லையென்றால் அதுவும் ஏதோ தவறுதான். நீர் எவ்வாறு மறுமொழி கூறுகிறீர், அம்மறுமொழியின் தன்மை என்ன என்பது, அம்மறுமொழியைக் காட்டிலும் முக்கியமானது. ஒருவர் உம்மை புகழும்பொழுதும் இகழும்பொழுதும் உம்மிடம்

அவற்றிற்கு ஏற்றவாறு மறு இயக்கம் உண்டாகிறது. இவ்விரண்டும் தவிர்த்தலே, ஒன்று இன்பம் மற்றொன்று துன்பம். ஒன்றைப் பிடித்து வைத்துக் கொள்கிறீர். மற்றொன்றைப் புறக்கணிக்கிறீர் அல்லது அதை எதிர்த்துத் தாக்குகிறீர். ஆனால், இவ்விரண்டுமே தவிர்ப்பாகும். பிடித்து வைத்துக் கொள்வதும், புறக்கணிப்பதும் தவிர்ப்பின் உருவமே. விடுதலை என்பது தவிர்ப்பதன்று.

''இன்ப – துன்பத்தைத் தவிர்க்காமல் என்னால் மறுமொழி கூற இயலுமா?''

நீர் என்ன நினைக்கிறீர் ஐயா!? நீர் என்ன உணர்கிறீர்? நீர் இவ்வினாவை என்னிடம் வினவுகிறீரா, அல்லது உம்மையே வினவிக் கொள்கிறீரா? வெளி மனிதரோ, வெளியேயுள்ள ஒரு 'தொடர்போ' இதற்குப் பதிலளித்தால் அப்பொழுது அதை ஒரு சார்பாகப் பற்றிக் கொள்வீர். அவ்வாறு ஏற்படும் சார்பு ஒரு அத்தாட்சியாக ஆகும். அத்தாட்சியும் ஒருவகைத் தவிர்த்தலே. பிறகு திரும்பவும் அவ்வத்தாட்சியிலிருந்து மீளவும் விரும்புகிறீர். ஆகவே, இவ்வினாவை நீர் எவ்வாறு மற்றொருவரிடம் கேட்க முடியும்?

''நீங்கள் ஒருக்கால் அதைக் குறித்துக்காட்ட இயலும். அப்பொழுது நான் அதைப் பார்த்தால், அதில் அத்தாட்சியின் சிக்கல் இல்லையே?''

ஆனால், நாம் ஏற்கனவே 'இருப்பது' என்பதை உமக்குச் சுட்டிக் காண்பித்தோம். இன்ப துன்பத்தோடு மறுமொழி கூறாமல் – உள்ளது என்பதைக் காணுங்கள். காண்பது விடுதலை. விடுதலையே காண்பது. விடுதலையில்தான் நீர் காண இயலும்.

''இவ்வாறு, காண்பது என்பது விடுதலையின் செய்கை யாக இருக்கலாம். ஆனால், என்னுடைய அடிமைத்தளை மீது இந்த 'இருப்பதும்' 'காண்பதும்' விளைவிப்பது என்ன?''

காண்பது என்பது விடுதலையின் செயலாக இருக்கக் கூடும் என்று நீர் கூறுவதால், அது ஊகத்தின் விளைவாகும். ஆக நீர் காண்பது என்பதும் ஓர் ஊகமே. உள்ளது என்பதை நீர் காணவில்லை.

''எனக்குத் தெரியவில்லை ஐயா! என் மாமியார் என்னைப் படுத்துவதைப் பார்க்கிறேன். இதை நோக்கு வதால் என்னைப் படுத்துவதை அவள் நிறுத்துவாளா?''

உம்முடைய மாமியாரின் செய்கையைப் பாருங்கள். உம்முடைய மறுமொழிகளையும் பாருங்கள். ஆனால், அதில் இன்ப துன்பங்களைக் கலக்காமல் மறுமொழியை விடுதலையோடு நோக்குங்கள். அப்பொழுது உம் செய்கையானது அவள் சொல்வதை முழுமையாகப் புறக்கணிக்கலாம். அல்லது அந்நிலையிலிருந்து வெளியேற லாம். அவ்வாறு வெளியேறுவதோ, புறக்கணிப்பதோ - தவிர்த்தல் ஆகாது. அதுவே தேர்ந்தெடுக்காத விழிப்புணர் வென்ற விடுதலை. இத்தேர்ந்திரா விழிப்புணர்வு அரசியலைச் சேர்ந்ததன்று; எக்கொள்கையையும், மதத்தையும் சேர்ந்ததன்று, எண்ணத்தின் விளைவுமன்று. அந்த விடுதலையிலிருந்து உண்டாகும் செயலை முன்கூட்டி அறிவிக்கவும், ஒரு முறைப்பாட்டில் அடக்கவும், சமுதாய நெறிமுறைச் சட்டத்திற்குள் வரைப்படுத்தவும் இயலாது.



## இந்தியா - 13

''நான் கடவுளை அறிய விரும்புகிறேன்'' என்று உணர்ச்சி வேகத்துடன் கூறினார். ஏறக்குறைய கத்தினார் என்றே கூறலாம். பருந்துகள் வழக்கம்போல மரத்தின் மீது அமர்ந்து இருந்தன. ரயில், பாலத்தின் மீது கடகடத்துச் சென்றது. ஆறும் ஓடிக் கொண்டிருந்தது. அங்கு அது மிக அகன்றும், அமைதியாகவும், ஆழமாகவும் இருந்தது. இளங்காலைக் காற்றில் நாம் தொலைவிலிருந்தே தண்ணீரின் புதிய தன்மையையும், தெளிவையும் நுகரலாம். பகல் வளர்ந்த போதிலும் அதன் தன்மை கெடவில்லை. கிளிகள் கிரீச்சிட்ட வண்ணம் சாளரத்துக்கெதிரே வயல்களை நோக்கிப் பறந்தன. நேரம் சென்றபின் மீண்டும் புளிய மரத்தை வந்தடையும். காகங்கள் கூட்டம் கூட்டமாக ஆற்றைக் கடந்து, உயரத்தில் பறந்து கொண்டிருந்தன. அவை மரங்கள் மீதும் அக்கரையிலுள்ள வயல்களிலும் வந்திறங்கும். பனிக் காலத்தின் தெளிந்த காலை நேரம் குளிராக இருந்த போதிலும் ஒளி மிகுந்திருந்தது. வானத்தில் ஒரு மேகமுமில்லை. இளங்காலைக் கதிரவனின் ஒளியை நோக்குகையில் தியானம் நடந்து கொண்டேயிருந்தது. அமைதியுள்ள அக்காலையில் கூத்தாடும் அந்நீரை (மொழி பெயர்த்து அதற்கு பொருள் கொடுக்கும் மனத்தினால் இல்லாமல்) நாம் நோக்குகையில் அந்தப் பாயுமொளியும் தியானத்தின் ஒரு பகுதியாகவே இருந்தது. கண்களும் அவ்வொளியைத் தவிர வேறொன்றையும் காணவில்லை.

ஒலியைப் போன்றே ஒளியும் மிகச் சிறப்படைய ஒன்று. ஓவியர்கள் திரையின் மீது தீட்ட முயலும் ஒளி, காமெராக்கள்

தம்முள் சிறைப்பிடிக்கும் ஒளி, இருண்ட இரவில் ஒரேவொரு விளக்கு தரும் ஒளி, ஒருவர் முகத்தின் மீது படியும் ஒளி, கண்ணுக்குப் பின்னால் நிறைந்து கிடக்கும் ஒளி, கண்கள் காணும் அவ்வொளி, நீர் மீது படிந்திருந்த ஒளியன்று. அவ்வொளியோ மிக்க வேறானது - எல்லையற்று பரந்திருந்த அவ்வொளி - கண்ணின் குறுகிய புலனறிவுக்கு எட்டாதது. ஒலியைப் போன்று அவ்வொளி யும் உள்ளும் புறமுமாக, கடல் அலையைப் போன்றே முடிவில்லாமல் இயங்கியது. நாம் அசைவற்று இருக்கையில் நாமும் அதனுடன் ஒன்றாக இயங்கினோம். கற்பனையில் அல்ல. புலனுணர்வின் வசமாகவும் அல்ல. நம்மை யறியாமலேயே அதனுடன் சென்றோம். காலத்தின் அளவையெல்லாம் கடந்து, அதனுடன் சென்றோம்.

அவ்வொளியின் அழகே அன்பைப் போலவே தீண்டத் தகாதது. அல்லது சொல்லிலும் புகுத்த இயலாது. நிழலிலும் திறந்தவெளியிலும், வீட்டினுள்ளும், வழியின் எதிரேயுள்ள சாளரத்தின் மேலும், அந்தக் குழந்தைகளின் சிரிப்பிலும், அது அங்கே இருந்தது. அந்த ஒளியின்றி நாம் காணும் எதுவும் பொருள் அற்றதாக இருந்தது. எனில், ஒளியே யாவும்; தியானத்தின் ஒளி நீரின் மேலிருந்தது. திரும்பவும் மாலையிலும், இரவு முழுவதும் பரிதி ஆற்றைத் தங்கமாகச் செய்துகொண்டு மரத்தின் மேலேறி வருகையிலும் அது அங்கே இருக்கும். தியானம் தரும் மனத்தின் ஒளியே, செயலின் வழிக்கும் ஒளி காட்டும். அவ்வொளியின்றி அன்பும் இல்லை.

அவர் வாட்டமான பெரிய ஆள். நீவிய முகம். ஆற்றை நோக்கியிருந்த அச்சிறிய அறையில் தரையின் மீது அமர்ந்திருந்தோம். குளுமையான தரை, பனிக்காலம். அதிக உடைமையற்றவரின் பெருந்தன்மை அவரிடமிருந்தது. மற்றவர்கள் என்ன கூறுவார்கள் என்ற அச்சம் அவரிடம் இல்லை.

''கடவுளையறிய நான் விரும்புகிறேன். இவ்விழைவு தற்கால நடையுடைக்கேற்றவாறு இல்லை. எதிர் இயக்கங்கள், அரசியல் அலுவல்கள், நியாயமான, அநியாய மான கோரிக்கைகள் இவற்றால் பாதிக்கப்பட்ட வரும்காலத் தலைமுறைகளான மாணாக்கர்கள், எல்லா மதங்களையும் இகழ்கின்றனர். குருக்களையும், பூசாரிகளையும் பார்க்கும் போது மாணவர்கள் செயல் நியாயமாகவே படுகிறது. அவர்கள் இதை விரும்பாதது இயற்கையே! கோவில்களும், மாதாக் கோவில்களும் மனிதனைச் சுரண்டுவதையே குறிப்பாகக் கொண்டுள்ளது. இளம் மாணாக்கர் இந்த உயர்வு தாழ்வுகளையுடைய மத மைய குருக்களின் மனப்பான்மை யைப் பற்றியும், அவர்களுடைய மீட்பவர்களை பற்றியும், அர்த்தமற்ற சடங்குகளைப் பற்றியும் முற்றிலும் ஐயம் உடையவர்கள். நானும் அதை ஒப்புக் கொள்கிறேன். அதில் சிலருக்கு, எதிராக இயக்கம் எழுப்பவும் உதவியிருக்கிறேன். இருந்தபோதிலும், கடவுளை விரும்புகிறேன். நான் முன்பு கம்யூனிஸ்டாக இருந்தேன். பல காலம் முன்பே அதிலிருந்து நீங்கினேன். ஏனெனில், கம்யூனிஸ்டுகளுக்கும் விருப்ப முள்ள தெய்வங்கள், பிடிவாதமான கொள்கைகள், கோட்பாடுகள் யாவும் உண்டு. நான், உண்மையில் மிகத் தீவிரமான, கம்யூனிஸ்டாக இருந்தேன். முதலில் அவர்கள் சில பெரிய உண்மையை வாக்குறுதியாக அளித்தபோதிலும், புரட்சிகளைச் செய்தபோதிலும், இப்பொழுது முதலாளி வகுப்பினரைப் போன்றே அவர்களும் பொருளுடையவராக இருக்கின்றனர். கம்யூனிஸ்டுகளும் உலகப் போக்கிலேயே போய்க் கொண்டிருக்கின்றனர். சமுதாயத்தை மாற்றியமைப் பதிலும், அரசியல் ஈடுபாட்டிலும் ஊக்கம் உள்ளவனாக இருந்தேன். மனிதன் எக்காலத்திலும், தன்னுடைய கவலை யிலிருந்தும், நம்பிக்கை இழத்தலிலிருந்தும், அச்சத்திலிருந் தும், விஞ்ஞானத் தொழில் திறனிலிருந்தும், கலைத் திறனிலிருந்தும் விடுதலை பெறவே முடியாது என்பதைக் கண்டதால், இவற்றை அடியோடு விட்டுவிட்டேன். இதற்கெல்லாம் ஒரேயொரு வழி இருத்தல் கூடும். நான்

எவ்வழியிலும் மூட நம்பிக்கையுள்ளவனல்லன், மற்றும் வாழ்க்கையையொட்டிய அச்சமுள்ளவனும் அல்லன். இவற்றையெல்லாம் ஊடுருவி வெளிவந்துள்ளேன். இன்னும் பல ஆண்டுகள் என்னை எதிர்நோக்கியுள்ளது என்பதையும் நீர் காணலாம். 'கடவுள் என்பது என்ன?' என்று அறிய விரும்புகிறேன். அலைந்து திரியும் துறவிகளையும் 'கடவுள் இருக்கிறார் – நோக்குதல் ஒன்றே தேவை' என்று இடைவிடாமல் கூறுபவர்களையும், மூடு மந்திரங்களினுடைய முறையைக் காண்பிப்பவர்களையும் கேட்டறிந்துள்ளேன். இவ்வாறு பிடிபடுவதைக் கண்டு அலுத்துள்ளேன். எவ்வாறாவது கண்டுபிடித்தேயாக வேண்டும் என்ற உணர்வுடன் இங்கு வந்துள்ளேன்.''

நாம் சிறிது நேரம் அமைதியாக இருந்தோம்: கிளிகள் சாளரத்தின் எதிரில் கீரிச்சிட்டுச் சென்றன. பளிச்சிடும் பச்சைச் சிறகுகளிலும் சிவந்த அலகுகளின் மீதும் ஒளி பாய்ந்தது.

நீங்கள் அதைக் கண்டுபிடிக்க முடியுமா? அதைத் தேடிப்போவதால் நீங்கள் அதையடைய முடியும் என நினைக்கிறீரா? அதைத் துய்த்தல் என்பது கூடுமா? உம் மனத்தின் அளவைக் கொண்டு அளவற்ற ஒன்றை அடைதல் கூடுமா? எவ்வாறு அதைக் கண்டுபிடிப்பீர், எவ்வாறு அறிந்து கொள்வீர்? அதை எந்த அடையாளத்தைக் கொண்டு அறிவீர்?

''உண்மையில் எனக்கு தெரியாது'' எனக் கூறினார். ''ஆனால், இதுவே உண்மை என்றபோதில் அதை அறிந்து கொள்வேன்.''

அதை உங்கள் மனத்தாலும், உள்ளத்தினாலும், அறிவினாலும் அறிந்துகொள்வீர் என்றா கூறுகிறீர்?

''இல்லை, அறிவது என்பது இவை எவற்றையும் சார்ந்ததன்று. புலன்களின் அபாயத்தையும் நன்கறிந்துள்

ளேன். எவ்வாறு காட்சிப் பிழைகள் எளிதில் ஏற்படும் என்பதையும் நன்குணர்கிறேன்.''

அறிவது என்பது துய்ப்பதாகுமா? துய்த்தல் என்பது அடையாளங்கொண்டு அறியப்படுவது. அதுவே நினைவின் சேர்க்கை என்பதாகும். நீர் கூறும் 'அறிவு' என்பது சென்ற கால நிகழ்வின் விளைவு - நினைவு - முன்பே நடைபெற்ற நிகழ்ச்சி - ஆகவே ஏற்கெனவே நிகழ்வுற்ற ஒன்றை அறிவது என்றல்லவா ஆகிறது? ஒன்று நிகழுங்கால் உள்ளபடியே நடைபெறுவதை அறியக் கூடுமா? அல்லது அந்நிகழ்வுக்கு ஒரு விநாடி பின்னரே அல்லது அது முடிவுற்ற பின்பேதான் அறிய முடியுமா? உண்மையில் நிகழ்வு என்பது காலத்தில் உட்பட்டதன்று. அறிவதோ காலத்திற்குட்பட்ட ஒன்று. நிகழ்ச்சியைக் காலம் என்ற கண்கொண்டு நீர் பார்க்கிறீர். மொழி பெயர்க்கிறீர். அதை மனத்தில் பதிவும் செய்கிறீர். ஆராய்ச்சியின் வழியாகவும், உடனடி அடையாளம் கொண்டு அறியும் வழியாகவும் இதுவே 'அறிவது' எனக் கூறப்படுகிறது. இந்த அறிவது என்ற பரப்பிற்குள் மலைக்கப்பாலும், மரத்தின் பின்புறமும் இருப்பதைக் கொண்டுவர விரும்புகிறீர். அதை அறிந்தேயாக வேண்டும் என்று வலுக்கட்டாயப்படுத்துகிறீர். அப்பரந்த நீரை உம்மனதிலும் கையிலும் பிடித்து வைத்திருக்க முடியுமா? நீர் பிடித்து வைத்திருப்பது உம் கண்களின் காட்சியாகும். அதைச் சொற்கள் கொண்டு நினைவில் வைக்கிறீர். உம் நினைவு என்பது அந்த வெள்ளமன்று - எக்காலத்திலும் அவ்வாறு இருக்க முடியாது.

''அது சரியே! அப்படியானால் நான் அதை அடைவது எப்படி? என்னுடைய நீண்ட ஆர்வமுள்ள வாழ்க்கையில் எதுவுமே மனிதனை உய்விக்க முடியாது - எந்த நிறுவனத்தாலும், எந்த சமுதாயத் திட்டத்தினாலும், எதனாலும் - உய்வித்தலரிது. ஆகவே, நான் படிப்பதை நிறுத்திவிட்டேன். ஆனால், மனிதனை உய்விக்க வேண்டும். இதிலிருந்து அவன் எவ்வாறாவது வெளியேறித் தீர

வேண்டும். என்னுடைய இந்த உடனடிக் கோரிக்கையான கடவுளைக் கண்டுபிடித்தேயாக வேண்டும் என்பதும், மனிதனைப் பற்றிய கவலையினால் உண்டாகும் ஒரு கதறலேயாகும். இப்பொழுது பரவி வரும் வன்முறை மனிதனை விழுங்குகிறது. இதன் சார்பாகவும் - எதிராகவுமுள்ள வாதங்களனைத்தையும் நான் அறிகிறேன். ஒரு காலத்தில் எனக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால், என்னிடமிருந்து அந்த நம்பிக்கைகள் அகன்றுவிட்டன. உண்மையில் இனியொன்றும் செய்ய வகையில்லாது தவிக்கிறேன். நம்பிக்கை இழந்ததாலோ அன்றி மேலும் நம்பிக்கையை வளர்ப்பதற்காகவோ நான் இக்கேள்வியைக் கேட்கவில்லை. என்னால் சிறிதளவும் வெளிச்சத்தைக் காண இயலவில்லை. ஆகவே, இந்த ஒரே கேள்வியை வினவுகிறேன். உண்மை என்பது இருப்பதானால் - உண்மையைத் திறக்க நீர் உதவுவீரா?''

மீண்டும் நாம் சற்று நேரம் மௌனமாக இருந்தோம். புறாக்கள் கூவும் ஒலி அறையினுள் வந்தது.

''நீர் சொல்லுவதின் பொருளை நான் அறிகிறேன். இதற்கு முன்பு நான் முழுமையான அமைதியை அடைந்ததில்லை. இவ்வமைதிக்கு வெளியில் இக்கேள்வி இருக்கிறது. இவ்வமைதியுடன் நான் அதை நோக்குகையில் அது பின்வாங்குகிறது. ஆகவே, இந்த முழுமையான - முன்னேற்பாடு செய்யாத அமைதியில்தான் - அளவிடற்கு அரியது இருக்கிறது என்றா நீர் கூறுகிறீர்?''

மற்றொரு ரயில், பாலத்தின் மீது கடகடவென ஒலி எழுப்பிச் சென்றது.

இது, எல்லாவித முட்டாள்தனத்தையும், மூடு மந்திரங் களையும் தெளிவற்ற நினைவுகள் விளைவிக்கும் காட்சிப் பிழைகளையும் ஒருங்கே அழைக்கிறது. ஐயா! இதை நாம் கூறவில்லை. அரசியல் சார்புள்ள, மதச் சார்புள்ள, வருங்காலத்தைச் சார்ந்த எல்லா மயக்கங்களையும் ஒழிப்பது

மிகக் கடினம். நாமாகவே ஒன்றையும் கண்டுபிடிப்ப தில்லை. ஆனால், நாம் அவ்வாறு எண்ணுகிறோம். அதுவே எல்லாக் காட்சிப் பிழைகளிலும் மிகப் பெரியது. எண்ணமே காட்சிப் பிழை. இந்தக் குழப்பத்தை, அதாவது மனிதன் தன்னைச் சுற்றித்தானே நெய்துகொள்ளும் நலமற்ற செயலை நோக்குவதே கடினமான வேலை. காண்பதற்கும், விடுவித்துக் கொள்வதற்கும் மிகுந்த நலம் உடைய மனம் தேவை. அதாவது, காண்பது, விடுதலை என்ற இவ்விரண்டும் முற்றிலும் தேவையே. காண வேண்டும் என்ற தூண்டுதலிலிருந்தும் மனிதன் விஞ்ஞானத்திலும், தொழில் நுண்ணறிவிலும் வைத்திருக்கும் நம்பிக்கையிலிருந் தும், மதங்களால் கண்டுபிடித்த உண்மைகளிலிருந்தும் விடுதலை மிகத் தேவை. இந்நம்பிக்கை காட்சிப் பிழை களை வளர்க்கிறது. இதைப் பார்ப்பதே விடுதலை. இவ்விடுதலை இருக்கையில் நீர் எதையும் கூவியழைப்ப தில்லை. அப்பொழுதுள்ள அளவற்ற தன்மையே மனம் ஆகும்.



## இந்தியா - 14

**அ**வர் ஒரு துறவி. முதியவர். பல்லாயிரக்கணக்கான வர்களால் போற்றப்படுபவர். அவர் தன் மேனியை நன்றாக வைத்திருந்தார். முண்டனம் செய்த தலை, சந்நியாசிகளுக்குரிய காவியுடை, கையில் பல ஆண்டுகளைக் கண்டதான ஒரு தடி, தேய்ந்துபோன பாதக் குறடுகள். நாம் ஆற்றின் மேல்புறத்தில் ஒரு திண்ணையில் அமர்ந்திருந்தோம். வலப்புறத்தில் ரயில் பாலம், இடப்பக்கத்தில் ஆறு சுழன்று இறங்கி ஓடிக் கொண்டிருந்தது. பெரிய வளைவைச் சுற்றி அந்தக் காலை வேளையில் பனி மூடி இருந்ததால் அக்கரையிலுள்ள மரங்களின் நுனிகளை மட்டுமே காண முடிந்தது. அந்நீர்ப் பரப்பின் மேல் அம்மரங்கள் மிதப்பது போன்ற தோற்றம். காற்றின் மூச்சுமற்ற அசையா நிலை, நீர்க்குருவிகள் தண்ணீர் வரப்பில் தாழப் பறந்து கொண்டிருந்தன. மிகத் தொன்மையான ஆறு – புண்ணிய நீர். மிகத் தொலைவிலிருந்து மக்கள் அதன் கரையில் இறப்பதற்கும், எரிக்கப்படுவதற்கும் என்று வருகிறார்கள். வழிபாட்டினாலும், இசையாலும் போற்றப்பட்ட அந்த ஆறு மிகத் தூய்மையானது எனக் கருதப்படுகிறது. எல்லா வகையான மாசுகளும் அதில் எறியப்பட்டன. மக்கள் அதிலேயே குளித்தார்கள், அதையே குடித்தார்கள், அதிலேயே துணியும் துவைத்தார்கள். அதன் கரையில் மக்கள் கண்களை மூடி நிமிர்ந்து உட்கார்ந்து அசையாமல் தியானம் செய்வதையும் பார்க்கலாம். அள்ளி வழங்கும் அந்த ஆற்றை மனிதன் மாசுபடுத்திக் கொண்டிருந்தான். மழைக் காலத்தில் இருபது, முப்பது அடி உயர்ந்து எல்லா

மாசுகளையும் அடித்துக் கொண்டுபோய், நிலத்தைக் கரிசலால் நிரப்பிவிடும். அது அக்கரையில் வேளாண்மை செய்வோருக்கு உரமாகும். வளைந்து ஓடிவரும் வெள்ளத்தில் சிலபொழுது முழு மரங்கள் வேருடன் அடித்துக் கொண்டு செல்வதைப் பார்க்கலாம். இறந்த விலங்குகளின் சட லத்தின் மேல் பருந்துகளும், காகங்களும் ஒன்றுடன் ஒன்று சண்டையிடுவதையும் பார்க்கலாம். சிற்சில பொழுதில் - முழு மனிதச் சடலம் அல்லது கை, கால்கள் மிதந்து போவதையும் பார்க்கலாம்.

அன்று காலை அந்த ஆறு இனிமையாக இருந்தது. ஒரு சுளிவும் இல்லை. அக்கரை மிகத் தொலைவில் காணப்பட்டது. பரிதி எழுந்து பல மணி நேரமாகியும், மூடு பனி விலக வில்லை. அந்த ஆறோ மறைப்பொருள் போன்று ஓடிக் கொண்டேயிருந்தது. அந்தத் துறவி அவ்வாற்றோடு நல்ல பழக்கம் கொண்டவர். அவர் அதன் கரையில் தம் சீடர்களுடன் பல்லாண்டுகள் இருந்திருக்கிறார். மனிதன் உள்ளவரை ஆறும் அவ்வாறாகவே இருக்கும் என்ற நினைப்பில் இருந்தார். பழகிப் போனதால் அந்த நினைவு - அது இரங்கத் தக்கது. அந்த ஆற்றை ஆயிரம் முறை பார்த்துப் பார்த்துப் பழகிய கண்களைக் கொண்டு அவர் நோக்கினார். அழகுக்கும், அழகின்மைக்கும் பழகிப் போகிறோம். அந்த நாள் தன் புதுமைமையை இழந்தது.

''ஏன், நீர் சமுதாய நெறிக்கும், மிகத் தூயவை என்று நாங்கள் கருதும் நூல்களுக்கும் எதிர்ப்புக் கூறுகிறீர்?'' என்று அதிகாரம் தெரிவிக்கும் குரலில் வினவினார். ''ஒருக்கால் நீர் மேனாட்டினரால் கெடுக்கப்பட்டிருக்கலாம் - மேனாட்டில் விடுதலை என்பது வரம்பு மீறிய செய்கையாகும். அங்கு ஒரு சிலரைத் தவிர ஒருவருக்கும் ஒழுக்கம் என்றால் என்ன என்பதே தெரியாது. நீர் நம்முடைய மறைநூல்களைப் படிக்கவில்லை என்று விளங்குகிறது. அன்றொரு நாள் நம்முடைய தெய்வங்களைப் பற்றியும், பூசாரிகளையும், மதக் குருக்களையும், சான்றோர்களைப் பற்றியும் நீர்

பேசுவதைக் கேட்டு அயர்ந்து போனேன். இவையன்றி மனிதன் வாழ்தல் எவ்வாறு? அவ்வாறு வாழ்ந்தால், பொருளில் வேட்கையுள்ளவனாகவும், உலகப் பற்றுள்ளவனாகவும், முழுமையாக விலங்கு போலும் அல்லவா மனிதன் இருக்க வேண்டும்! மிகத் தூயவையாக நாம் கருதும் அறிவை நீர் மறுப்பதுபோல் அல்லவா இருக்கிறது? ஏன்? நீர் பொறுப்புள்ளவர் என்று தெரிகிறது. தொலைவிலிருந்தே பல்லாண்டுகளாக உம்மைத் தொடர்ந்து கொண்டிருக்கிறோம். உங்களை உடன் பிறந்தவராகவே கண்டு வருகிறோம். எம்மில் ஒருவராகவே கருதியும் வந்தோம். நீர் இதையெல்லாம் மறுத்து வருவதால், நாம் இப்பொழுது அறிமுகமற்றவராக இருக்கிறோம். நாம் வெவ்வேறு வழியில் செல்வது மிகமிக இரங்கத்தக்கது.''

தூயவை என்றால் என்ன? கோவிலிலுள்ள உருவமா, அடையாளமா அன்றி, சொல்லா? எது தூயது? தூய்மையின் இடம் எது? அந்த மரத்திலா அன்றிச் சுமையைத் தூக்கிச் செல்லும் அந்தக் குடியானவப் பெண்ணிலா? நீர் தூய்மை என்றும், தகுதி வாய்ந்தது என்றும் கருதும் பொருளிடத்தில் தூய்மையைத் திணிக்கிறீர் இல்லையா? கையினால் அன்றி மனத்தினால் இயற்றிய உருவத்தின் மதிப்பு என்ன? அந்தப் பெண், அம்மரம், அப்பறவை, உயிரினம் இவை ஏதோ காலப்போக்கில் உள்ளவை என்று அல்லவா மறுக்கிறீர்? வாழ்க்கையைத் தூயவை, தூய்மையற்றவை, நெறியுள்ளது, நெறியற்றது என்று இரு கூறாகப் பிரிக்கிறீர். இப்பிரிவு துன்பத்தையும், வன்முறையையும் வரவழைக்கிறது. ஒன்று யாவும் தூயவை அல்லது யாவும் தூய்மையற்றவை. நீர் கூறும் யாவையும், அதாவது உம் சொற்கள், எண்ணங்கள், ஓதும் மந்திரங்கள் ஆழ்ந்த கருத்துள்ளனவா அன்றி, அவை மனத்தை வஞ்சித்துக் கற்பனை உலகிற்கு அழைத்துச் செல்லும் ஒன்றா? அவை பொய்த் தோற்றமே அல்லது காட்சிப் பிழையேயாகும். ஆகவே, நீர் ஆழ்ந்த கருத்துள்ளவராய் இருக்க முடியாது. 'தூய்மை' என்று ஒன்று

உள்ளது. ஆனால், அது சொல்லிலோ அன்றி சிற்பத்திலோ அன்றி எண்ணத்தால் ஆக்கப்பெற்ற உருவத்திலோ இல்லை.

இந்தப் பேச்சு எங்கு அழைத்துச் செல்லும் என்று தெரியாது, திகைப்படைந்து குறுக்கிட்டார் : "நாம் இங்கு ஆராய்வது எவை தூயவை, எவை தூய்மையற்றவை என்பதல்ல. நீர் ஏன் ஒழுக்கத்தை இளப்பமாகக் கூறுகிறீர் என்பதைப் பற்றிக் கேட்க விரும்புகிறேன்."

பயனற்ற அரசியல், சமுதாய அல்லது மதச் சார்பான கொள்கைகளுக்கு இணங்கி ஒழுகுவதையே – ஒழுக்கம் என்று கூறுகிறோம். இவ்வாறு இணங்குவதும், ஒருவரைப் பின்பற்றுவதும், கீழ்ப்படிதலும் உண்மையில் இருப்பதைக் கடந்து செல்வதேயாகும் இல்லையா? நீர் கூறும் ஒழுங்கு முறையில் தொடர்ந்து போராட்டமும், மனத்தின் பண்பு வேறுபடுவதும் விளக்கமாகத் தெரிகிறது. இவ்வாறு இணங்குவதானது பரிசு ஒன்றை எதிர்நோக்கியே. ஏதோ ஒன்று கிடைக்கும் என்பதால் நாம் நம்மை ஒழுங்குபடுத்திக் கொள்கிறோம். பயனொன்று நிறைவேறும் என்பதாலேயே கீழ்ப்படிதலும், அடங்கி நடத்தலும். எடுத்துக்காட்டாக, கம்யூனிஸ்டுடைய நெறியானாலும், மதச் சார்பினுடைய நெறியானாலும் அல்லது நம்முடையதேயானாலும், அது அத்தாட்சி என்ற உரிமையாக மாறும். இதில் விடுதலை யென்பதே இல்லை. ஒழுக்கம் என்றால் கற்பது. கற்பது என்பது எல்லாவித உரிமைகளையும், கீழ்ப்படிதலையும் முற்றும் மறுத்தலாகும். இதை சரிவரக் காண்பது ஒரு ஆராயும் வழியன்று. ஒழுக்கம் என்ற கட்டிட அமைப்பின் சுளிவு – நெளிவுகளைக் காண்பதே ஒழுக்கம். அதாவது, ஒழுங்கின் அமைப்பைக் காணும் கல்வியே ஒழுக்கம். இவ்வாறு கற்பது – செய்திகளைச் சேர்த்து வைத்துக் கொள்வ தன்று. அதற்கு மாறாக, ஒழுக்கத்தின் அமைப்பையும், அதன் தன்மையையும் உடனுக்குடன் காண்பதே கல்வி. அதுவே உண்மை ஒழுக்கம். ஏனெனில், நீங்கள் கற்கிறீர், ஆனால்,

இணங்குவதில்லை. கற்பதற்கு விடுதலை கட்டாயமாகத் தேவை.

''இதனால் உங்கள் விருப்பப்படியே செல்லுங்கள் என்ற பொருள் குறிப்பாக ஏற்படுகிறது அல்லவா? அரசாங்கத்தின் அதிகாரத்தை நாம் புறக்கணித்தலாகாதா?'' எனக் கேட்டார்.

கண்டிப்பாக இல்லை ஐயா! இயற்கையாகவே நீர் நாட்டினுடையவும், காவல்படையினுடையவுமான நெறிகளை அவை மாற்றப்படும்வரை ஒப்புக் கொண்டேயாக வேண்டும். நீர், மோட்டார் வண்டியைச் சாலையின் ஒரு பக்கமாகவே செலுத்த வேண்டும். வேறு வண்டிகளும் அங்கே போய்க் கொண்டிருப்பதால் சாலை முழுவதும் இங்குமங்குமாகச் செல்ல முடியாது. ஆகவே, சாலை நெறிகளைப் பின்பற்றியேயாக வேண்டும். ஒருவர் தம் விருப்பப்படியே நடந்தால் – (நாம் மறைமுகமாக அவ்வாறு செய்துவந்த போதிலும்) அது முற்றிலும் குழப்பத்தை விளைவிக்கும். அதுவே இன்றைய இருப்பின் நிலை. வர்த்தகர்களும், அரசியல்வாதிகளும் பெரும்பான்மையில் ஒவ்வொரு மனிதனும் கண்ணியம் என்ற போர்வையை அணிந்து, தன்னுடைய மறைமுக வேட்கைகளையும், பசியையும் தொடர்ந்து பின்பற்றுவதால் உலகில் குழப்பத்தை விளைவிக்கின்றனர். இவற்றை மூடி மறைக்க வேண்டி நெறிகளையும், அனுமதிகளையும் உண்டாக்குகிறோம். இது விடுதலையாகாது. உலகம் முழுவதும் மக்கள் பழையனவாயும், புதியனவாயுமுள்ள பல தூய நூல்களை வைத்திருக்கின்றனர். அவற்றைத் திரும்ப ஓதியும், அவற்றுக்கு இசையமைத்தும், மேற்கோள்களை முடிவற்று எடுத்துரைத்து வந்தபோதிலும் அவர்கள் உள்ளத்தில் வன்முறை, பேரவா, அதிகாரத்தைத் தேடியலைவது என்பவற்றை உடையவராகவே இருக்கின்றனர். புண்ணிய நூல்கள் என்றழைக்கப்படும் நூல்கள் ஒரு பொருட்டா? உண்மையில் அவற்றில் பொருள் ஒன்றும் இல்லை. நாம் பொருட்படுத்த வேண்டியது, மனிதனுடைய முழுமையான

தன்னலம், தொடர்ந்து வன்முறை, வெறுப்பு, பகை இவற்றையே; நூல்களையும், கோவில்களையும், மாதா கோவில்களையும், மசூதிகளையும் அன்று.

தன்னாடைக்குள் அத்துறவி அச்சமடைந்ததை உணர முடிந்தது. அவருக்கே உரித்தான பசிகளையுடையவர். அவாவின் தூண்டலால், அவர் எரிந்து கொண்டிருந்தார். இந்த உண்மையிலிருந்து தப்பியோடவே துறவியின் ஆடை.

மனிதனுடைய இப்பொறுக்கவொணாத் துன்பத்தைக் கடக்க நாம் எந்த நூல்கள் மிகத் தூய்மையானவை என்ற சச்சரவில் பல மணி நேரங்களைச் செலவிடுகிறோம். இது மிகவும் வளர்ச்சிக் குறைவான செயல்.

''அவ்வாறானால், நீர் மரபுரிமையைக் கூட... எதிர்க்கிறீர் இல்லையா?''

இறந்த காலத்தை, நிகழ்காலத்திற்கு அழைத்து வந்து, நிகழ்காலத்தின் ஓட்டத்தை இறந்த காலச் சொற்களைக் கொண்டு மொழி பெயர்ப்பதானது நிகழ்காலத்தின் அழகைக் கெடுக்கிறது. இந்த நாடும் மற்றும் எல்லா நாடுகளுமே பெரிய மாளிகைகளிலும், ஊர்ப்புறத்தின் சிறு குடிசை களிலும் கூட மரபுரிமையைச் சுமந்து கொண்டிருக்கின்றன. மரபுரிமை எவ்வளவு தொன்மையதாயினும், புதியதாயினும் தூய்மையாகாது. நேற்றைய நினைவுகளை மூளை சுமந்து கொண்டு மரபுரிமையாக்குகிறது. அதன் பின் புதியதை நேருக்கு நேர் நோக்க இயலாமல் மரபுரிமையை விட்டு விடவும் அஞ்சுகிறது. மரபுரிமை நமது காப்புப் பொருளாகிறது. மனம் காக்கப் பெற்ற நிலை என்பது தேய்வு நிலையே. வாழ்க்கைப் பயணத்தைச் சுமையாக கருதாமல், இனிமையுடன், இயல்பாகவே ஏற்க வேண்டும். கோவிலொன்றை அடையாமலும், வீரம் அல்லது மத, சமுதாய சார்பான நினைவுக் கூடங்கள் ஒன்றிலும் நிற்காமலும், அழகுடனும், அன்புடனும் வாழ்க்கைப் பயணத்தைத் தன்னந்தனியாக மேற்கொள்ள வேண்டும்.

''எம்மைப் போன்ற துறவிகள் என்றுமே தனிமையானவர் இல்லையா? உலகைத் துறந்து ஏழ்மையையும் பிரும்மச்சர்யத்தையும் கடைப்பிடிக்கிறேன்'' என்றார்.

ஐயா! நீர் தனிமையாகவே இல்லை. ஏனெனில் எவ்வாறு மணம் செய்து கொள்கையில் மனிதன் நோற்கும் நோன்பே அவனைக் கட்டுப்படுத்துகிறதோ அவ்வாறே வேட்கை என்பது உங்களைக் கட்டுப்படுத்துகிறது. எவ்வாறு புத்த மதத்தினரும், கிறிஸ்துவர்களும், முஸ்லிம்களும் அல்லது கம்யூனிஸ்டுகளும் தனியாக இருப்பது இல்லையோ அவ்வாறே நீர் ஓர் இந்து என்பதால் தனிமையானவர் அன்று என்பதைச் சுட்டிக் காட்டுகிறோம் (நீர் அனுமதித்தால்). நீர் வாக்குறுதிகளில் சிக்குண்டவர். நீர் கட்டுப்பட்டவர். ஆகவே நீர் சிக்குண்டபோது எவ்வாறு தனிமையாய் இருத்தல் கூடும்? தனக்கே உரித்தான செயல்களை விளைவிக்கும் கருத்துக்குத் தன்னை இழந்த பிறகு தனிமை எவ்வாறு இருக்க முடியும்? 'தனிமை' என்ற சொல்லின் பொருள் இவ்வாறு வெளி நடத்தையினால் பாதிக்கப்படாதது, கள்ளமற்றது, கபடமற்றது, முழுமையானது, பிரிவுபடாதது. நீர் தனிமையாக நிற்கையில் இவ்வுலகில் வாழ முடியும். ஆனால் என்றும் வெளியாராகவேதான் இருக்க முடியும். தனிமையிலேதான் செயலின் முழுமையும், ஒத்துழைப்பும் உண்டு எனில் அன்பு என்றும் முழுமையே.



## இந்தியா - 15

**அ**ன்று காலை அந்த ஆறு மங்கிய வெள்ளியாக இருந்தது. ஏனெனில் கார்மேகம் கவிந்தும் குளிராகவும் இருந்தது. இலைகளில் தூசி படிந்திருந்தது. எங்குமே இலேசாகத் தூசி - அறைகளிலும், தாழ்வாரத்திலும், நாற்காலி மீதும் தூசி படிந்திருந்தது. குளிர் மிகையாகியது. இமயத்தில் பனி மிகுதியாக விழுந்திருக்க வேண்டும். வாடையின் கொடுமையை நன்குணர முடிந்தது. பறவைகளும் அதை உணர்ந்தன. தனக்கே உரித்தான விந்தையான ஓர் ஓட்டத்தை உடைய அந்த ஆறு அன்று காலையில், காற்றினாலும் அசைக்க இயலாததாக இருந்தது. சிறிதும் அசைவற்றுக் காணப்பட்டது. எல்லா ஆறுகளையும் போலவே அதுவும் காலமற்ற தன்மையுடையதாய் இருந்தது. எத்தகை எழில்! அதைப் புண்ணிய ஆறாக மக்கள் கொண்டாடியதில் வியப்பொன்றுமில்லை. வராந்தாவில் அமர்ந்து தியானத்துடன் அதை முடிவற்று நோக்கலாம். நாம் காண்பது பகல் கனவன்று. நம்முடைய எண்ணங்கள் நாலா பக்கமும் சிதறவில்லை. எனில், எண்ணங்கள் இருக்கவே இல்லை.

ஆற்றின் மீதுள்ள ஒளியை நாம் நோக்கிக் கொண்டிருக்கையில், எவ்வகையிலோ நாம் நம்மை இழந்தோம், கண்களை மூடினோம். அருள் நிரம்பிய வெட்டவெளியின் ஊடுருவல் அங்கேயிருந்தது... அதுவே பேரின்பம்.

அவர் அன்று காலை திரும்பவும் ஓர் இளைஞருடன் வந்தார். ஒழுக்கம், புண்ணியம், மரபுரிமையின் சான்று

காட்டும் திறன் இவற்றைப் பற்றிப் பேசிய அத்துறவிதான் அவர். கழுவிய முகம். ஆடையும் அவ்வாறே இருந்தது.

இளைஞர் சற்று நடுக்கத்தோடு இருந்தார். அவர் துறவியுடன் வந்தவர். ஒருக்கால் அத்துறவி அவருடைய குருவாக இருக்கலாம். ஆகவே, அவரே முதலில் பேச வேண்டுமெனக் காத்திருந்தார் இளைஞர். இப்பொழுது துறவி கூறினார் :

''நான் இம்முறை அன்பு, உணர்ச்சி அவற்றைப் பற்றி உரையாடத் திரும்பவும் வந்துள்ளேன். எங்களுக்கு அதாவது கற்பு (பிரம்மசரியம்) என்ற நோன்பை மேற்கொண்டவர் களுக்கு உணர்ச்சியின் சிக்கல்கள் இருக்கின்றன. கட்டுக்கடங்காத அவாக்களைத் தடுத்து நிறுத்த இந்நோன்பு ஒரு வழியே. நான் ஆண்டில் முதியவன். ஆகையால் இந்த உணர்ச்சிகள் என்னை எரிப்பதில்லை. இவ்விரதத்தை மேற்கொள்ளுமுன் நான் மணமானவன். என் மனைவி இறந்தாள். நான் வீட்டைத் துறந்தேன். பொறுக்கவொணா இயற்கைத் தேவைகளின் தூண்டுதலால் பெருந்துன்பத்துக் காளானேன். இரவும் பகலும் அவற்றுடன் போராடினேன். தனிமை நிரம்பியதாகவும் ஆற்றாமை உடையதாகவும், மூளைக் கோளாறு ஏற்படும் என்ற அச்சத்தினாலும், நரம்புத் தளர்ச்சியின் குழப்பங்களாலும் நிறைந்த அந்த நாட்கள் மிகவும் கொடுமையானவை. இப்பொழுது அதை நினைக்க அஞ்சுகிறேன். என்னுடன் வந்திருக்கும் இவ்விளைஞனும் அத்தகைய சிக்கல்களால் வருந்துகிறான் என்று எண்ணு கிறேன். என்னைப் போலவே இவனும் உலகைத் துறந்து ஏழ்மையையும், கற்பையும் விரதமாகக் கொள்ள விரும்பு கிறான். நான் பல வாரங்களாக இவனுடன் உரையாடி வருகிறேன். நாங்கள் இருவருமே இந்தச் சிக்கல்களை அதாவது, பால் உணர்ச்சி, அன்பு என்ற சிக்கல்களைப் பற்றி உம்முடன் உரையாடினால் பயனுண்டாகும் என்று இங்கு வந்துள்ளோம். நாங்கள் இவ்வாறு வெளிப்படையாகப்

பேசுவது உங்கள் விருப்பத்திற்கு மாறாக இராது என நம்புகிறேன்.

இந்தப் பொருளைப் பற்றி நாம் அக்கறை கொள்வோமானால் முதலில் இதைக் குறிப்பாகக் கூற வேண்டும். ஒரு நிலையிலிருந்து இதை ஆராய முற்படாதீர். ஒருவித மனோ நிலையிலிருந்தும் அல்லது அடிப்படைக் கொள்கையிலிருந்தும் தொடங்கினால், இது ஆராய்ச்சியைத் தடுக்கும். கருத்து எதுவாயினும் சரி, நீர் பால் உணர்ச்சிக்கு எதிராகவும் அன்றி அது வாழ்க்கைக்குத் தேவையான ஒன்று என்றும், அது வாழ்க்கையின் ஒரு பகுதியே என்றும் கருதினாலும் அன்றி முன்பே உறுதியாக்கப்பட்ட கருத்தாயினும் சரி, அது உண்மையில் காண்பதைத் தடை செய்யும். எந்த முடிவையும் ஒதுக்கி வைத்தே காணல் வேண்டும். ஆகவே, விடுதலையோடு காணுங்கள், ஆராய்ந்து பாருங்கள்.

அப்பொழுது மழையின் சிறு துளிகள் வீழ்ந்தன. பறவைகள் அமைதியடைந்தன. கனத்த மழை பெய்ய இருந்தது. அந்த இலைகளும் மறுபடியும் பசுமையாய், புதிதாய், முழு ஒளியும் வண்ணமும் கொண்டு திகழும். மழையின் மணமும், புயலுக்கு முன் மண்ணில் நிலவும் அமைதியும் அங்கிருந்தன.

ஆக, நமக்கு இரு சிக்கல்கள் – அன்பு, பாலுணர்ச்சி. ஒன்று, நுண்ணிய எண்ணம், மற்றொன்று உண்மையான அன்றாட இயற்கையின் தூண்டுதல் என்ற மறுக்க முடியாத உண்மை. முதலில் அன்பை – அதை ஒரு நுண் பொருளாக அன்றி உண்மையில் இருப்பது என்ன என்பதைக் கண்டுபிடிப்போம். அது என்ன? அது இன்பம் என்ற எண்ணம் வளர்ந்து உருவாக்கிய புலன்களின் மகிழ்ச்சியா அல்லது இன்பந்துய்த்த நிகழ்வின் நினைவினாலும், பால் தொடர்புகளினாலும் ஏற்பட்ட மகிழ்ச்சியா? கதிரவன் சாயும் வேளையின் அழகா அன்றி மெல்லியதோர் இலையை

தீண்டும் பொழுதும், பார்க்கும்பொழுதும் ஏற்படும் அழகுணர்வா அன்றிப் பூவின் நறுமணத்தை நுகர்கையில் விளையும் ஒன்றா? அன்பு - இன்பமா அன்றி வேட்கையா? இவையொன்றும் இல்லாமல் வேறொன்றா? அன்பைத் தூய்மையானது, மாசுடையது என இரு கூறாகப் பிரிக்க முடியுமா? அல்லது பிரிக்க முடியாத ஒன்றா, எண்ணத்தால் உடைப்பதற்கு இயலாத முழுமையா? பயனிலை அற்ற அதற்கு இருப்பு உண்டா? அல்லது பயனொன்று இருப்பதாலேயேதான் அன்புக்கு வாழ்வு ஏற்படுகிறதா? நீர் பெண் ஒருத்தியின் முகத்தைப் பார்க்கையில் உம்மிடம் அன்பு எழுகிறதா? அவ்வாறானால் அன்பு என்பது புலன்களின் கிளர்ச்சி, வேட்கை, இன்பம் - ஆக எண்ணத்தின் தொடர்ச்சியில் இருக்கும் ஒன்றா? அல்லது அன்பு என்பது அழகின் மறுமொழியாக மனம் இளகுகையில் உம்மிடம் ஏற்படும் ஒரு நிலையா? பொருள்களுக்கு தனிச் சிறப்பை வழங்கும் எண்ணத்தினால் வளர்க்கப்பட்டதா? அல்லது அன்பு எண்ணத்திலிருந்து முற்றிலும் வேறானதா? ஆகவே, சார்பற்றதா? விடுதலை யுடையதா? இந்தச் சொல்லையும், அதன் பொருளையும் நாம் புரிந்துகொள்ளாவிட்டால் துன்பத்துக்குள்ளாவோம். அன்றி, பாலுணர்ச்சியை விழைவதால் ஏற்படும் நரம்புத் தளர்ச்சிக்குள்ளாவோம் அல்லது அதற்கு அடிமையாவோம்.

அன்பை எண்ணத்தினால் சிறுசிறு துண்டுகளாக உடைக்கல் ஆகாது. எப்பொழுது அன்பு சிறு கூறுகளாக உடைத் தெறியப்படுமோ, அதாவது தன்னலமற்றது, தன்னுடையது, புலனறிவு, ஆன்மீகம், என் நாடு, உன் நாடு, என் தெய்வம், உன் தெய்வம் என்று உடைக்கப்படுகையில் அது அன்பாகாது. அது முற்றிலும் வேறான ஒன்றே. அதாவது அது நினைவின் விளைவு, பிரசாரத்தின் விளைவு, வசதியளிக்குமொன்று, என்று பலவகை ஆகிறது.

பாலுணர்ச்சி எண்ணத்தின் விளைவா? பாலுணர்ச்சி - இன்பம், மகிழ்ச்சி, தோழமை, அதிலுண்டாகும் மென்மை

யுறவு - இவை எண்ணத்தால் வலுவாக்கப்பட்ட நினைவுகளே அன்றோ? ஆண் - பெண் சேர்க்கையில் அச்சம், வாழ்க்கையின் கவலை, தவிப்பு இவைகளற்ற ஓர் உணர்வும், தன்னை மறத்தலும், தன்னிழப்பும் இருக்கின்றன. இந்த மென்மை நிலையையும், தன் மறத்தலையும் நினைத்து இவற்றைத் திரும்பத் திரும்ப விழைகிறோம். அதை மென்றுதின்று மறுபடியும் அத்தகைய அடுத்த நிகழ்ச்சி வரும்வரை அசைபோடுகிறோம். இது மென்மையானதா அல்லது நிகழ்ந்துபோன ஒன்றைத் திரும்பிச் சிறைப் பிடிக்க விழையும் ஒரு செய்கையா? திரும்பத் திரும்ப ஒன்றை அடைவது என்பது எத்தகைய இன்பமானதாயினும், ஒரு கேடு விளைவிக்கும் செய்கையல்லவா?

அந்த இளைஞருக்குத் திடீரென்று குரல் வந்தது. ''பாலுணர்ச்சி இயற்கையின் தூண்டுதல். நீர் கூறியது போலவே கேடு விளைவிக்கும் என்றால், உணவு அருந்துவதும் - அதுவும் இயற்கையின் தேவையானதாகையால் கேடு விளைவிக்கும் ஒன்றேயல்லவா?''

பசிக்கும் காலத்தில் உணவு அருந்துதல் என்பது ஒன்று. ஒருவர் பசியாக இருக்கையில், ''அந்த ஒரு உணவின் சுவைதான் வேண்டும் அல்லது இந்த உணவின் சுவையே வேண்டும்'' என்று கூறுவது எண்ணத்தின் விழைவே. இதுவே திரும்பத் திரும்ப ஒன்றை அடைய விழைவதினால் விளையும் கேடு.

''பால் உணர்வு என்பதைப் பற்றிக் கூறுங்கால், பசியைப் போன்று இயற்கையின் தூண்டுதல், அல்லது எது தன் மனத்தின் வேட்கை - பேராசையைப் போன்று'' என்று அந்த இளைஞர் கேட்டார்.

நீர் ஏன் மனத்தின் வேட்கை என்றும், இயற்கையின் தூண்டல் என்றும் தனித்தனியாகப் பிரிக்கிறீர்? மற்றுமொரு கேள்வி முற்றிலும் வேறான ஒன்று : ஒரு மலையின் அழகையும், பூக்களின் வனப்பையும் காணுவதிலிருந்து பால்

உணர்வை ஏன் தனியாகப் பிரிக்கிறீர்? ஒன்றுக்கு ஏன் இவ்வளவு சிறப்பைத் தந்து மற்றொன்றை அப்படியே விட்டுவிடுகிறீர்?

''பாலுணர்ச்சி என்பது அன்பிலிருந்து மிகவும் வேறானது என்று நீங்கள் கூறுவதுபோல் இருப்பதால், பாலுணர்வைப் பற்றி சொல்வதற்கு ஒரு தேவையும் இல்லையென்றாகிறது அல்லவா?'' என்று இளைஞர் கேட்டார்.

நாம் ஒருக்காலும் பாலுணர்வு அன்பும் இருவகை யானவை என்று கூறவேயில்லை. அன்பு என்பது முழுமை யானது. உடைக்கப்படாத ஒன்று. எண்ணமோ அதன் தன்மையிலேயே துண்டு துண்டாகப் பிரியும் ஒன்று. இதுவே நாம் கூறியது. எண்ணம் ஆதிக்கம் செலுத்தும் வரையில் அன்பு அங்கு இல்லையென்று தெளிவாகக் கூறலாம். பொதுவாகவே மனிதன் அறிவது பால் உணர்ச்சி ஒன்றே. இதுவே இன்பத்தை விழைந்து அசைபோடுவதும், அதைத் திரும்பத் திரும்ப விழைய வேண்டும் என்னும் நினைவும் ஆகும். ஆகவே, நாம் கேட்க வேண்டியது எண்ணம், வேட்கை இவை அற்ற ஒரு வகை பாலுணர்ச்சி உள்ளதா?

அத்துறவி அமைதியான அக்கறையுடன் இவற்றிற்கு நன்கு செவி சாய்த்தார். இப்பொழுது கூறினார், ''நான் பாலுணர்வைத் தடுத்திருக்கிறேன், அதற்கு எதிராக நோன்பும் மேற்கொண்டேன். ஏனெனில், மரபுரிமையின் பழக்கத்தாலும், அறிவைக் கொண்டு தெளிவதாலும், ஒருவருக்கு மெய்ந்நெறி வாழ்க்கையை அடைய, திறமை, சக்தி தேவை என்று அறிகிறேன். பாலுணர்வை எதிர்ப்பதிலேயே மிகுந்த வலிமையை இழந்தேன் என்பதை இச்சமயம் நன்கு காண்கிறேன். அதைத் துய்ப்பதைக் காட்டிலும், அதிக நேரத்தையும், திறனையும் அதைத் தடுப்பதிலேயே செலவழித்திருக்கிறேன். ஆகவே, நீர் கூறுவதுபோன்று எவ்விதக் குழப்பமும் வலிமையை வீணடிக்கும் என்பதைப் புரிந்து கொள்கிறேன். ஒரு பெண்ணின் முகத்தையும், பாலுணர்ச்சியைக் காட்டிலும்,

குழப்பமும் போராட்டமும் நம் உணருந்தன்மையை இழக்கச் செய்யும் என்று தெளிகிறேன்.

வேட்கையையும், இன்பத்தையும் தவிர்த்த அன்பு என்று ஒன்று உள்ளதா? வேட்கை, இன்பம் இவையற்ற பாலுணர்வு ஒன்று உள்ளதா? எண்ணத்தின் நுழைவு இன்றி முழுமையான அன்பு உள்ளதா? பாலுணர்ச்சி இறந்த காலத்தினுடையதா, அன்றி ஒவ்வொரு முறையும் புதுமையுள்ள ஒன்றா? எண்ணம் தெளிவாகப் பழமையானது. ஆகவே, நாம் எப்பொழுதும் இறந்த காலத்தையும், தற்போதுள்ள புதியதையும் ஒப்பிட்டுக் கொண்டேயிருக்கிறோம். சென்ற காலத்திலிருந்து நாம் வினவுகிறோம். அதற்குச் சென்ற காலத்திற்குரித்தான மறுமொழிகளை எதிர்பார்க்கிறோம். எண்ணத்தின் செய்கையும், நடவடிக்கையும் முழுமையாக அற்ற பாலுணர்ச்சி உள்ளதா என்று கேட்பதிலேயே நாம் பழமையைத் தாண்டி அடி வைக்கவில்லையென்று தெளிவாகிறதல்லவா? பழமையில் இவ்வாறு கட்டுண்டு இருப்பதால் புதுமையில் நுழைந்து அதன் வழியை அறிய நம்மால் இயலவில்லை. வேட்கையற்ற பாலுணர்ச்சியுள்ளது என்று எவ்வளவு உறுதியாகக் கூறினாலும் அது வீண் சொல்லே. ஆனால், எண்ணத்தின் பொருளை முற்றிலும் தொடர்ந்து புரிந்துகொண்டால், ஒருக்கால் மற்றொன்றை அடைதல் கூடும். ஆனபோதிலும், உம்முடைய இன்பத்தை எவ்வாறாவது, எந்த விலையைக் கொடுத்தாவது அடைய வேண்டும் என்று பிடிவாதமாகக் கோரினால், அப்பொழுது அன்பு அங்கு இராது.

அந்த இளைஞர் சொன்னார் : ''இயற்கையின் தூண்டுதல் என்று நீர் கூறியது இந்தக் கோரிக்கையைப் பற்றியேயாம். அந்த வேட்கையானது எண்ணத்திலிருந்து வேறானதாக இருப்பினும், எண்ணத்தை பிறக்க வைப்பதும் இதுதான்.''

''ஒருக்கால், என்னுடைய இளம் நண்பருக்கு நான் பதில் கூற முடியும்'' என்று அத்துறவி கூறி, தொடர்ந்தார் : ''நான் இதற்கு ஆளாகியிருக்கிறேன். ஒரு பெண்ணையும் பார்க்கக்

கூடாது என்று என்னைப் பழக்கிக் கொண்டிருக்கிறேன். இயற்கையின் இந்த வெறியைக் கட்டுப்படுத்தியிருக்கிறேன். இந்தத் தூண்டுதல் எண்ணத்தைப் பிறப்பிக்கவில்லை. எண்ணம் அதை உருவகப்படுத்துகிறது, காட்சிகளை உண்டாக்குகிறது, பிறகு அது எண்ணத்திற்கு அடிமை யாகிறது. எண்ணமே இந்தத் தூண்டுதலை பெரும்பாலும் பிறப்பிக்கிறது. நான் கூறியதுபோல, நாம் நம்மையே ஏமாற்றிக் கொள்ளும் தன்மையையும், வஞ்சகத்தன்மையை யும் காணத் தொடங்கியிருக்கிறேன். நமக்குள்ளேயே ஏமாற்றுந் தன்மை நிறைய இருக்கிறது. உள்ளதை உள்ள வாறே நாம் காண முடிவதில்லை. ஆகவே, அவற்றைப் பற்றி காட்சிப் பிழைகளையும், பொய்த் தோற்றங்களையும் உருவாக்குகிறோம். ஐயா! நீர் கூறுவது தெளிவுள்ள கண்களுடன் யாவற்றையும் நோக்க வேண்டும். நேற்றைய நினைவுகளற்று நோக்க வேண்டும். இதைப் பன்முறை உங்களுடைய பேச்சுக்களில் கூறியிருக்கிறீர். அப்பொழுது வாழ்க்கை ஒரு சிக்கலாகாது. என்னுடைய முதுமையில் இதைத் தெளிவாக புரிந்து கொள்ளத் தொடங்குகிறேன்.''

அவ்விளைஞர் அவ்வளவு திருப்தியடைந்ததாகத் தெரிய வில்லை. தன் சட்டத்திற்குள் தான் மிகவும் அக்கறையுடன் உருவாக்கிய திட்டத்திற்குட்பட்ட வாழ்க்கையை விரும்பி னார்.

எனவே, தன்னையறிந்து கொள்வது மிகவும் முக்கியமானது. ஒரு சட்டத்திட்டத்திற்குள்ளோ, ஒரு குருவின் வழியாகவோ அன்று. இடையறா தேர்தல் இல்லாத விழிப்புணர்வு எல்லாப் பொய்த் தோற்றங்களையும், ஏமாற்றுதல்களையும் முடிவுறச் செய்யும்.

இப்பொழுது மழை நீர்வீழ்ச்சிகளாகக் கீழிறங்கியது. காற்று அசைவற்றிருந்தது. கூரை மீதும் இலைகள் மீதும் விழும் மழையின் ஒலி மட்டுமே அங்கு நிலவியது.



## கலிஃபோர்னியா - 1

அன்றாட எண்ணத்தையும், உணர்வுகளையும் கடந்துள்ள பொருளொன்றை துய்ப்பது தியானமாகாது. அன்றி அது பலவகைத் தோற்றங்களையும், இன்பங்களையும் பின் தொடருவதும் அன்று. முதிர்ச்சியற்று அழுக்கடைந்த சிறிய மனமானது, இத்தகைய தன்னுணர்வின் விரிவில் விளையும் தோற்றங்களைக் காணவும், ஏற்படுத்தவும் இயலும். இவ்வாறான வளர்ச்சி குறைந்த மனத்தால் இவ்வுலகத்தில் வெற்றி, புகழ், இகழ் இவற்றை அடையவும் இயலும். முதிர்ச்சியற்ற மனம், தன்னைப் போன்ற தன்மையுள்ள குருமார்களையும், ஆசார்யார்களையும் பின்பற்றும். தியானம் இத்தகையோரின் உரிமையன்று. ஒன்றை விழைந்து நாடுபவருக்கு அது உரிமையாகாது. எனில், தியானம் ஒன்றை வேண்டி விழைவோனுக்கு உட்பட்டதன்று. விழைவோன் தன் வேட்கைப் பொருளை அடைந்தே தீருவான். அவ்வேட்கை தரும் இனிமை அவனுடைய அச்சத்தின் விளைவான சட்ட திட்டங்களேயாகும்.

நம்பிக்கை, பிடிவாதக் கொள்கைகள் உள்ள ஒருவன் என்ன வேண்டுமானாலும் செய்து பார்க்கட்டும். ஆனால், தியான உலகை அடைவது மட்டும் முடியாது. தியானம் செய்ய விடுதலை தேவை. முதலில் தியானம் பிறகு விடுதலை என்பது இல்லை. சமூக நெறிகளையும், அவற்றின் மதிப்புகளையும் முற்றிலும் மறுத்தலே தியானத்தின் முதல் நடை. அதுவே விடுதலை. தியானம் பலரும் சேர்ந்து வணங்கும் ஒரு பொதுச் செயலன்று.

தன்னந்தனியே நிற்பது, சமூக நெறிக்கு என்றுமே அப்பாற்பட்ட ஒன்று. ஏனெனில் எண்ணத்தினால் விளையும் பொருள் உண்மை ஆகாது. அன்றியும் அது எண்ணத்தினால் ஏற்பாடு செய்யப்பட்டு 'உண்மை' என்று அழைக்கப்படும் பொருளும் அன்று. எண்ணம் என்ற நிறுவனத்தின் அமைப்பை முழுமையாக ஒழித்தலே தியானத்தின் உறுதி நிலை.

அன்று காலை கடல் அமைதியாக இருந்தது. நல்ல நீல நிறம், ஏறக்குறைய ஏரியைப் போன்ற நிலை. களங்கமற்ற வானம். நீர்ப்பறவைகளும், நாரைகளும் நீர்க்கரையைச் சுற்றி பறந்து கொண்டிருந்தன. நாரைகள் நீரைத் தொட்டவாறே தங்களுடைய கனத்த சிறகுகளுடன் மெதுவாகப் பறந்தன. நிறைந்த நீலவானம், அதைக் கடந்து நின்ற குன்றங்கள், ஓரிரு புதர்களைத் தவிர – வெயிலில் காய்ந்தன. சிவந்த கழுகொன்று குன்றிலிருந்து வெளிப்பட்டு, சிறிய பாதைக்கு மேல் பறந்து மரங்களிடை மறைந்தது.

உலகின் இப்பகுதியில் உள்ள ஒளியின் தன்மை கண்களைக் கூச வைக்காமல் ஆழ்ந்து செல்லும் வகையிலும், அது விரியும் வகையிலும் ஒரு தனிப் பண்புள்ளது. 'சுமாக்', கிச்சிலி, யூகாலிப்டஸ் இவற்றின் மணம் எங்கும் பரந்திருந்தது. பல மாதங்களாக மாரியில்லாமல் மண் உலர்ந்து, வறண்டு விரிசல் கண்டிருந்தது. குன்றுகளில் அவ்வப்போது மான்களையும் காணலாம். ஒரு முறை குன்றின் மீது சுற்றும்பொழுது கரடியொன்று தூசி நிறைந்து சடை விழுந்த மயிருடன் தென்பட்டது. வழியோரங்களில் கிலுகிலுப்பைப் பாம்புகள் அடிக்கடி போய்க் கொண்டிருந்தன. ஓரிரு நேரம் கொம்பு மூக்கு தேரையையும் காணலாம். மலையேறு வழியில் எவரையும் காண்பதரிதாய் இருந்தது. தூசி நிறைந்ததும், கரடுமுரடாயும், அமைதியுள்ளதாயும் இருந்தது அவ்வழி.

நமக்கெதிரே காடையொன்று ஏறக்குறைய பத்து பன்னிரண்டுக்கும் மேற்பட்ட குஞ்சுகளுடன் இருந்தது. தம்

இருப்பே இல்லாததுபோல் சிறிதும் அசையாமல் காணப்பட்டது. மேலே ஏற ஏற காடு மிகையாகியது. மனிதர்களே அற்ற காடு, தண்ணீர் இல்லாத இடம், பறவைகளும் இல்லை. மரங்களோ மிக அரிது. நம்மைச் சுட்டெரிப்பது போன்று கொடுமையான வெய்யில்.

அவ்வளவு உயரத்தில் திடீரென நமக்கு மிக அருகில் ஒரு கிலுகிலுப்பை பாம்பு கலகலப்புடன் தன் வாலைத் தூக்கி எச்சரித்தது. நாம் திடுக்கிட்டுக் குதித்தோம். அந்தப் பாம்பு தன் முக்கோணத் தலையுடன், தன் கிலுகிலுப்பைகளை நன்றாகச் சுருட்டி வைத்துக் கொண்டு தலையைத் தூக்கி நம்மை நோக்கிக் குறி பார்த்தது. நாம் சற்று தொலைவில் இருந்ததால், அதனால் தீண்ட இயலவில்லை. நாம் அதை உற்று நோக்கினோம். அதுவும் நம்மைக் கண்கொட்டாமல் உற்று நோக்கியது. அதைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டே இருந்ததில் அதன் கொழுகொழுப்பான நெளிவுகளையும், அதன் அபாயத்தையும் உணர முடிந்தது. சிறிதும் அச்சமில்லை. பிறகு நோக்கும்பொழுது அது தன் சுற்றை அவிழ்த்துத் தலையையும், வாலையும் நீட்டிய வண்ணமே நம்மைப் பார்த்துப் பின்வாங்கியது. நாம் அதனருகில் செல்கையில் திரும்பவும் சுற்றி வாலை நடுவில் வைத்துக் கொண்டு தீண்ட முற்பட்டது. இவ்வாறாக சற்று நேரம் பாம்பு அசந்து போகும்வரை விளையாடினோம். பிறகு கடலை நோக்கிக் கீழிறங்கினோம்.

அது நல்லதொரு வீடு, புல்வெளியை நோக்கி திறந்த சாளரங்கள். வீட்டின் உள்புறம் வெள்ளை நிறம், நல்ல அமைப்பான வீடு. பனி மிகுதியான இரவுகளில் குளிர் காய நெருப்பு உண்டு. பல சுடர்களோடு கூடியதும், பன்னிழல் களும் கொண்டதுமான நெருப்பைக் காண்பது அழகுதான். ஓயா ஒலிக் கடலின் ஓசையைத் தவிர வேறெந்த ஒலியும் அங்கில்லை.

அவ்வறையில் இரண்டு, மூன்று பேர்களைக் கொண்ட சிறு குழு, பொதுவாக உலகியல்புகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். இக்கால இளைஞர்கள், சினிமா, இவ்வாறு பலபல. அதில் ஒருவர், ''நாங்கள் உம்மை ஒன்று வினவலாமா?'' என்றார். நீலக் கடலையும், அக்குன்றங் களையும் அக்கேள்வி தொந்தரவு செய்தது இரங்கத்தக்கதாக இருந்தது.

''உங்கள் வரையில் காலம் என்றால் என்ன எனக் கேட்க விரும்புகிறோம். விஞ்ஞானிகளும், விஞ்ஞான நாவ லாசிரியர்களும் இதைப்பற்றி என்ன கூறுகிறார்கள் என்று ஏறக்குறைய நாம் தெரிந்து கொண்டிருக்கிறோம். மனிதன் எப்பொழுதும் காலம் என்ற சிக்கலில், அதன் முடிவற்ற நென்னல்களுக்குள்ளும், நாளைகளுக்குள்ளும் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான் என்று எனக்குத் தோன்றுகிறது. தொன்மையான காலத்திலிருந்து, இன்றுவரை, காலம் மனிதனுடைய எண்ணத்தை ஆளுகிறது. மெய்ந்நூல் அறிவாளிகள் அதைப்பற்றி ஊகித்திருக்கிறார்கள். மதங் களும் அதைப் பற்றித் தமக்கேற்ப விளக்கியுள்ளன. இதைப் பற்றி நாம் பேசக் கூடுமா?''

இப்பொருளைப் பற்றி ஆழ்ந்தறிய வேண்டுமா – அன்றி மேலெழுந்தவாரியாகத் தொட்டு விட்டால் போதுமா? இதைப்பற்றி ஆழ்ந்த கருத்துடன் பேச வேண்டுமானால் நாம் மதங்கள், மெய்ந்நூல் – அறிவாளிகள் மற்றவர்களும் கூறியிருப்பதை மறக்க வேண்டும். உண்மையில் அவை யொன்றையும் நாம் நம்பலாகாது. உணர்வு மரத்துப் போயும், அக்கறையில்லாததினாலும் நம்பலாகாது எனக் கூறவில்லை. ஆனால், ஒரு பொருளின் உண்மையையறிய உரிமை காட்டும் மேற்கோள்கள் எல்லாவற்றையும் ஒதுக்கி வைக்க வேண்டும். இதற்கு ஒப்புக் கொண்டால், ஒருக்கால் நாம் இப்பொருளுக்குள் எளிதாக இறங்கலாம்.

மணி காட்டும் கடிகாரத்தைவிட்டு - காலம் என்று ஒன்றுள்ளதா? நாம் பல பொருள்களை ஒப்புக் கொள்கிறோம். கீழ்ப்படிதல் என்பது நம்முள் நன்றாகத் திணிக்கப்பட்டுள்ள ஒன்று. ஆகையால், ஒப்புக்கொள்வது இயற்கையே. ஆனால், பலப்பல நென்னல்களை விட்டுக் காலம் என்ற ஒன்று உளதா? நேற்று, இன்று, நாளை என்ற தொடர்பே காலமா, அன்றி சென்ற நாட்களை நீக்கிக் காலம் என்று ஒன்று உளதா? பல்லாயிரக்கணக்கான இறந்த நாட்களுக்குத் தொடர்ச்சியைத் தருவது எது?

ஒரு காரணத்தைக் கொண்டு பயன் ஏற்படுகிறது. அப்பயனே மறுபடியும் காரணம் ஆகிறது. அவற்றின் நடுவில் இடைவெளி கிடையாது. அது இயங்கும் வழி ஒன்றே. அந்த இயக்கத்தையே நாம் காலம் என்றழைக்கிறோம். இந்த இயக்கத்தோடு ஒன்றிழைந்த கண்களாலும், உள்ளத்தாலும் யாவற்றையும் காண்கிறோம். காலம் என்ற கண்கொண்டே எல்லாவற்றையும் பார்க்கிறோம். தவிர நிகழ்காலத்தை இறந்த காலத்தைக் கொண்டு மொழி பெயர்க்கிறோம். இம்மொழி பெயர்ப்பு எதிர்காலத்தைச் சந்திக்கிறது. இதுவே காலச் சங்கிலி.

இந்த விளைவில் சிக்கிய எண்ணமே ''காலம் என்றால் என்ன?'' என்று வினவுகிறது. இதுவே காலம் என்ற இயந்திரத்தின் கேள்வி. ஆகவே, இக்கேள்விக்குப் பொருள் கிடையாது. ஏனெனில், எண்ணம் என்பது காலம். இறந்த நாளின் விளைவே எண்ணம். இதுவே இடைவெளியை நேற்று, இன்று, நாளை எனக் கூறுபோடுகிறது. அல்லது நிகழ்வும் இறந்த காலத்தின் விளைபொருளாம் என்பதை மறந்துவிட்டு 'இருப்பது நிகழ்வு ஒன்றே' என்றும் கூறுகிறது.

நம்முடைய உள்ளுணர்வு காலச் சங்கிலியின் கோர்வையே. அதன் எல்லைக்குள்ளிருந்து நாம் கேட்கிறோம். 'காலம் என்றால் என்ன?' காலம் ஒன்று இல்லாவிடில் நேற்று என்பதற்குப் பொருள் என்ன?

இக்கேள்விகளும் காலத்தின் வரைக்குட்பட்டதே. காலத்தைப் பற்றி எண்ணம் விளைவிக்கும் இக்கேள்விக்கு மறுமொழி ஒன்றும் இல்லை. மற்றும் நாளை என்பதும், நேற்று என்பதும் இல்லாமல் இன்று என்பது மட்டுமே உள்ளதா? இக்கேள்வி எண்ணத்தினால் எழுவதில்லை. காலத்தின் தன்மையையும், ஏற்பாட்டையும் நன்கு நோக்கியதால் எழும் வினாவே இது. ஆனால், எண்ணத்தின் கண்களைக் கொண்டு வினவுவதாகும்.

நாளை என்று உண்மையில் ஒன்றுளதா? 'எனக்கு நாளை ரயிலேற வேண்டும்' என்ற போதில் – கட்டாயமாக உளது. ஆனால், உள்ளாழ் மனத்தில் இன்பம், துன்பம், நிறைவேற்றம் என்ற நாளை ஒன்று உளதா? அல்லது நேற்று என்றதுடன் தொடர்பற்ற நிகழ்காலம் ஒன்று மட்டுமே உள்ளதா? எண்ணத்தின் முடிவு காலத்தின் முடிவாகும். முடிவுறும் அக்கணமே நிகழ்வின் இருப்பு. இந்நிகழ்வு ஒரு கருத்தன்று, உண்மையில் உள்ளதொன்று. ஆனால், எண்ணத்தின் ஏற்பாடுகளனைத்தும் முழுமையாக முடிவுறும் பொழுதுதான் 'இருப்பது' நிகழ்வாகும். நிகழ்வு என்பதின் உணர்வு காலத்தின் விளைவான அந்தச் சொல்லிலிருந்து முற்றிலும் வேறானது. ஆகவே நேற்று, இன்று, நாளை என்ற சொற்களில் நாம் சிக்கிக் கொள்ளல் ஆகாது. நிகழ்வின் முழுமையான உணர்வு விடுதலையில்தான் உள்ளது. எண்ணம் வளர்க்கும் பண்பாட்டில் விடுதலை இல்லை.

அடுத்து எழும் கேள்வி, ''நிகழ்வின் செய்கை என்ன?'' நாம் செய்யும் 'செய்கை' என்பது காலம், நினைவு, நேற்றைக்கும் இன்றைக்கும் உள்ள இடைவெளி இவையே யாகும், இதையே நாம் செயல் என்றறிவோம். இடைவெளி என்ற இடத்தில்தான் எல்லாக் குழப்பங்களும், கலக்கங் களும் தொடங்குகின்றன. நாம் உண்மையில் கேட்பது என்னவென்றால், ''இடைவெளியே இல்லாதபொழுது செய்கை என்பது என்ன?'' தன்னுணர்வுள்ள மனம் இவ்வாறு சொல்லக்கூடும், 'நான் இயல்பாகவே இவ்வாறு செய்தேன்.'

ஆனால் அது அவ்வாறன்று; இயல்பு என்று ஒன்றுமில்லை. ஏனெனில், மனம் என்பதே கட்டுண்டு பயிற்றுவிக்கப்பட்ட ஒன்று - 'இருப்பு' என்பதே உண்மை; அதுவே நிகழ்வு, இதை நேருக்கு நேர் நோக்க இயலாமல், எண்ணம் அதைப் பற்றிப் பல தோற்றங்களை உருவாக்குகிறது. தோற்றத்திற்கும், இருப்பு என்பதற்கும் உள்ள இடைவெளியே எண்ணம் விளைவிக்கும் துன்பம்.

நேற்று என்ற ஒன்றில்லாமல் 'இருப்பு' என்பதைக் காண்பதே நிகழ்வு. இறந்த காலத்தின் மோனமே நிகழ்வின் இருப்பு.





## கலிஃபோர்னியா - 2

என்றும் முடிவுறா ஓட்டமே தியானம். நாம் தியானம் செய்து கொண்டிருக்கிறோம் என்பதோ அல்லது அதற்கென ஒரு காலப் பகுதியை ஒதுக்கி வைத்துக் கொள்வோம் என்று கூற இயலாது. அது உங்கள் உத்தரவுக்குக் கீழ்ப்படியும் பொருள் இல்லை. தியானத்தின் நல்லாசிகள், நீர் ஒழுங்கான வாழ்க்கையை வாழ்கிறீர் என்றோ, அல்லது ஒரு தனிப் பழக்கவழக்கத்தையும், சமூக நெறியையும் கைக்கொள்கிறீர் என்றோ, உம்மை வந்து அடைவதில்லை. உங்கள் உள்ளம் உண்மையாகத் திறக்கையில் அது உம்மை வந்தடையும். உள்ளமானது எண்ணம் என்ற திறவுகோலால் திறக்கப் படாமலும், அறிவினால் காப்பாற்றப்படாமலும் தன்னியல் பாக இருக்கையில், வேகமில்லாத தெளிந்து விரிந்த வானத்தைப் போன்று திறந்திருக்கையில் உம் அழைப்பின்றி உம்மையறியாமலேயே வந்தடையும். ஆனால், நீர் அதைக் காவல் காக்கவும், பாதுகாத்து வழிபாடு செய்யவும் இயலாது. அவ்வாறு நீர் முயன்றால் மீண்டும் அது உம்மிடம் வருவதில்லை. எவ்வளவு வேண்டுமானாலும் முயன்று பாருங்கள். உம்மை அது தவிர்த்து விலகும். தியானத்தில் 'நீர்' என்ற தனிச் சிறப்பு இல்லை. உமக்கு அதில் ஒரு பங்கும் இல்லை. நீர் அதன் அழகும் அல்ல. ஆனால், அது அழகைத் தன்னுடைத்தானது. இதை மிகையாக்கவும் முடியாது. சாளரத்தின் வழியே எட்டிப் பார்த்து எதிர்பாராதவிதமாக தன்வசமாக்கிக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையுடன் அதை எதிர்நோக்கி ஓரிருண்ட அறையில் காத்துக் கொண்டிருக்கவும் முடியாது. 'நீர்' இல்லாத

பொழுதே அது வந்தடையும். அதன் பேரின்பம் - தொடர்ச்சியற்றது.

அம்மலைகள் எல்லையற்ற பல காதங்கள் நீண்ட கடலைக் கீழ்நோக்கியிருந்தன. குன்றங்கள் தரிசானவை. வெய்யிலில் எரிந்தும், சிறு புதர்களோடும் கூடிய குன்றுகள். அவற்றின் சரிவுகளில் சில மரங்கள் வெய்யிலாலும், அனலாலும் எரிந்தவை. இருந்தபோதிலும் அவை அங்கேயிருந்து கொண்டேயிருக்கின்றன. தழைத்து அமைதியாகவும் இருந்தன. குறிப்பாக ஒரு மரம், மிகப் பெரிய 'ஓக்' ஒன்று, சுற்றிலுமுள்ள குன்றங்களை எல்லாம் ஆட்சி செய்தது. மற்றொரு குன்றின் மீது ஓர் இறந்துபோன மரம், தீயினால் எரிந்த ஒன்று. அது பட்டுப்போய்ச் சாம்பல் நிறமாகி ஓர் இலையுமில்லாமல் நின்றது. அந்த மலைகளையும் அவற்றின் அழகையும், வரைகோடுகளையும் வானத்திற்கு எதிராக நோக்குகையில் அந்த மரமொன்றே வானத்தைத் தாங்குவது போலத் தோன்றியது. அதற்குப் பல கிளைகள் - எல்லாம் இறந்தவை. இனி அதனால் இளவேனிற்காலத்தை உணரவே முடியாது. இருந்தபோதிலும், அது அழகுடனும், மேன்மையுடனும், உயிர்த் துடிப்புடனும் இருந்தது. நாமும் தன்னந்தனியாகவும், ஒருவித சார்புமில்லாமலும், காலமற்றும் அம்மரத்தின் ஒரு பகுதியாக இருந்தோம். அப்பட்டுப் போன மரமும் மலைச்சாரலிலுள்ள பெரிய ஓக் மரத்தைப் போன்றே என்றும் நிலையுள்ளதாகத் தோன்றியது. ஒன்று உயிரற்றது - மற்றொன்று உயிருள்ளது; வெய்யிலில் உலர்ந்தும், நெருப்பில் எரிந்தும், கார்கால மழைக்காக காத்திருக்கும் அக்குன்றுகளை அவ்விரண்டு மரங்கள் மட்டுமே பொருள் உள்ளதாகச் செய்தன. முழுமையான வாழ்கை, நம்முடைய சொந்த வாழ்வையுங்கூட, இவ்விரண்டு மரங்களில் கண்டோம். ஒன்று உயிருள்ளது. மற்றொன்று உயிரற்றது. இவற்றிடையே பார்க்க ஒண்ணாதவாறு, எவ்வித கோரிக்கையுமற்று அதன் நடுவே காக்கப்பெற்று அன்பு அங்கே இருந்தது.

வீட்டின் கீழ், தாயும் அதன் நான்கு சேய்களும் வாழ்ந்து வந்தன. நாம் வந்த நாளன்று அவை தாழ்வாரத்தில் இருந்தன. தாய் ராக்கூனும் அதன் நான்கு பிள்ளைகளும் உடனேயே ஈட்டுக் கொண்டவாறு கூர்ந்த கரிய கண்களுடனும், மென்மையான பாதங்களுடனும் சற்று அச்சத்துடனும் காணப்பட்டன. உணவை விரும்பிக் கேட்டபோதிலும், தாய் மட்டுமே தனித்திருந்தது. மறுநாள் மாலை மறுபடியும் அவை அங்கே வந்தன. நம்முடைய கையிலிருந்து உணவருந்தியபொழுது அவற்றின் மென்மை யான பாதங்களை உணர முடிந்தது. அவை பழக்குவதற்கும், சீராட்டுவதற்கும் ஆயத்தமாக இருந்தன. அவற்றின் அசைவுகளையும், அழகையும் கண்டு வியந்தோம். இன்னும் சில நாட்களில் நம்மீது ஏறி ஓடியாடும். அவற்றின் எல்லையற்ற உயிர்த் துடிப்பை உணர்ந்தோம்.

அன்று, இனிமையான தெளிந்த நாள். ஒவ்வொரு மரத்தையும், புதரையும், ஒளிவிடும் வெய்யிலுக்கு எதிரே நல்ல தெளிவுடன் காணலாம். சிறிய தெருவில் இருந்தது அந்த வீடு. பின்புறம் மலைத்தொடர்கள். ஒருவர் அவ்வீட்டிற்கு அடிவாரத்திலிருந்து மலையேறி வந்தார். வீட்டின் அருகில் சில பைன் மரங்களும், உயரமான மூங்கில்களும் இருந்தன.

அவர் இளைஞர், எதிர்கால நம்பிக்கையுடையவர். நாகரிகத்தின் விலங்குத்தன்மை இன்னும் அவரைத் தீண்டவில்லை. அவர் அமைதியாக அமரவும், மௌனமாக இருக்கவும் விரும்பினார். அங்குள்ள மலைகள் ஏற்படுத்திய மௌனத்தினால் மட்டுமன்று – தன்னுடைய உடனடித் தேவையினுடைய அமைதியாலும் ஏற்பட்ட மௌனத்துட னும் இருக்க விரும்பினார்.

''இவ்வுலகில் நான் ஏற்கும் பங்கு என்ன? உலகமைப்புக் கும் எனக்கும் உள்ள தொடர்பு என்ன? முடிவற்ற இந்தச் சிக்கலின் பொருள் என்ன? எனக்கு அன்புடையவள் உண்டு.

நாங்கள் உறவாடுகிறோம். இருந்தபோதிலும் அது ஒரு முடிவல்ல. இவையெல்லாம் தொலைவிலுள்ள கனவு போலத் தோன்றுகிறது. சில நொடி மறைந்தும், மறுபடி வெளிப்பட்டும்,... துடிதுடிப்புடனும் இன்னொரு நொடியில் பொருளற்றதாகவும் இருக்கிறது. என்னுடைய சில நண்பர்கள் போதைப் பொருட்கள் உட்கொள்ளுவதைப் பார்க்கிறேன். அவர்கள் புத்தி மழுங்கியவர்களாக மாறிவிட்டனர். இம்மருந்துகளின் உதவியில்லாமலேயே வாழ்க்கையின் அன்றாட அலுவல்களாலும் என்னுடைய துயர்தருந் தனிமையாலும் புத்தி மழுங்கிப் போகக்கூடும். இந்தக் கோடிக்கணக்கான மக்களிடையில், நான் ஒரு பொருட்டும் இல்லை. யாவராலும் களங்கப்படுத்தற் கரியதான இரத்தினத்தை, யாவராலும் அளவிடற்கரிய இரத்தினத்தை, என்றுமே மங்காத இரத்தினத்தை அடைய முடியாமலே மற்றவர்களைப் போலவே நானும் ஆகிவிடக் கூடும். ஆகவே, உங்களைக் கண்டு பேச இங்கு வந்துள்ளேன். உங்களுக்கு நேரமிருந்தால்... நான் என் வினாக்களுக்கு விடையளிக்க வேண்டும் என்று கேட்க வில்லை. நான் கலவரப்பட்டுள்ளேன். நான் மிக இளமையாக இருந்தபோதிலும் என்னை ஊக்கம் கெடச் செய்கின்றனர். என்னைச் சுற்றியுள்ள நம்பிக்கை துளியுமற்ற அந்தத் தலைமுறையை - முதியவர்களை, மனக் கசப்புடையவராயும், இடர் விளைவிப்பவராயும், பாசாங்கு செய்பவராயும், தமக்கு வேண்டியபோது எதையும் ஒப்புக் கொள்பவராயும், எச்சரிக்கையுள்ளவராயும் காண்கிறேன். அவர்களால் பிறருக்குத் தருவதற்கு ஒன்றுமில்லை. விந்தையாக அவர்களிடமிருந்து எனக்கு வேண்டியது ஒன்றுமில்லை. என்ன வேண்டும் என்றும் நானறியேன். ஆனால், உயர்ந்த பொருள் பொதிந்த வாழ்க்கை வாழ வேண்டும் என்று அறிவேன். ஒரு தொழிலை ஏற்றுப் படிப்படியாக அந்த உருவற்ற, பொருளற்ற வாழ்க்கையில் நானும் ஒருவனாக இருக்க விரும்பவில்லை. சிலமுறை என்

தனிமையை நோக்கியும், தொலைவிலுள்ள விண்மீன்களின் அழகை நோக்கியும் எனக்குள்ளேயே அழுகிறேன்.

நாங்கள் சற்று நேரம் அமைதியாக இருந்தோம். பைன் மரங்களும், மூங்கில்களும் காற்றின் அசைவில் கலந்தன.

வானம்பாடியும், கழுகும் தாங்கள் பறக்கும் வழியில் அடையாளம் இடுவதில்லை. சிறந்த வல்லுனர் யாவரையும் போன்றே, விஞ்ஞானிகளின் வழியில் இடுகுறியுண்டு. அவர்களை படிப்படியாகப் பின்பற்ற இயலும். அவர்கள் கண்டுபிடித்தவைகளுக்கும், சேமித்து வைத்தவைகளுக்கும் சில படிகளைச் சேர்க்கவும் இயலும்; இந்த சேமிப்புகள் எங்கு அழைத்துச் செல்லும் என்று உங்களுக்கு தெரிந்திருக்கும். ஆனால், மெய்யென்பது அவ்வாறன்று; உண்மையில் மெய் வழியற்ற ஒருவயல். அது அடுத்த வளைவிலும் இருக்கலாம் அன்றி, பல காத தொலைவிலும் இருக்கலாம். நீர் அவ்வழியில் சென்றுகொண்டே இருக்க வேண்டும். அப்பொழுது அது உங்கள் பக்கத்திலேயே இருப்பதைக் காண்பீர். ஆனால், அவ்வழியில் சிறிது நிறுத்தி மற்றொருவர் அதைப் பின்பற்ற வேண்டும் என்று அடிச்சுவடு காண்பிக்க முற்பட்டாலும், அல்லது அதை வாழ்வினுடைய வழிக்காக ஓர் உருவப்படமாக அமைத்தாலும் அது என்றுமே உம்மருகில் வராது.

''இது புலமையின் சொற்களா அல்லது உண்மையா?''

நீர் என்ன நினைக்கிறீர்? நம் வரையில் எல்லாம் சீர்திருத்தி துப்புரவாக இருக்க வேண்டும். ஏனெனில், அவற்றை நடைமுறையில் கைக்கொள்ள வேண்டும். அதைக் கொண்டு ஏதாவதொரு பயனடைய வேண்டும் அல்லது அதைப் போற்றி வணங்க வேண்டும். நீங்கள் சிறிய கொம்பொன்றை வீட்டிற்கு எடுத்துக் கொண்டு வாருங்கள். அதை ஒரு அலமாரித் தட்டில் வைத்து நாள்தோறும் அதற்கு முன்னால் பூவை வைத்து வணங்குங்கள். சில நாட்கள் கழித்து, அந்தக் கொம்பும் மிக்க பொருள் பதிந்ததாக ஆகும். எதற்கும்

பொருள் தருவது மனத்தின் இயல்பு. ஆனால், அது கொடுக்கும் பொருள் அர்த்தமற்றது. வாழ்க்கையின் பொருள் என்ன? என்று ஒருவர் வினவினால், அந்தக் குச்சியை வணங்குவதற்கு ஒப்பாகும். பயங்கர நிலைமை என்ன என்றால் மனம் எப்பொழுதும் புதிய நோக்கங்களையும், அதற்குப் புதிய பொருள்களையும், புதிய மகிழ்ச்சிகளையும் உண்டாக்கி, பிறகு அவையனைத்தையும் அழிக்கவும் செய்கிறது. அது என்றும் அமைதியற்றது. அமைதியால் செழிப்புற்ற மனம், 'உள்ளதற்கு' அப்பால் எட்டி நோக்குவதில்லை. இவையிரண்டும் என்றும் இணைய முடியாதவை என்று தெரிந்தபோதிலும், நாம், கழுகாகவும், விஞ்ஞானியாகவும் ஆக இவையிரண்டுமாகவே இருக்க வேண்டும். இதனால்... இவையிரண்டும் வெவ்வேறு என்று பொருள் கொள்ளலாகாது. அவை இரண்டுமே தேவைதான். ஆனால், விஞ்ஞானி கழுகாகவும், கழுகு விஞ்ஞானியைப் போன்று இடுகுறி இடுவதாலும் உலகில் துன்பம் உண்டாகிறது.

நீர் மிகவும் இளவயதினர். உம் கள்ளமற்ற தன்மையையும் அது அழைத்து வரும் ஊறுபடுந்தன்மையையும் இழந்து விடாதீர். அது ஒன்றே மனிதனுடைய கருவூலம். மனிதன் கட்டாயமாக அடைய வேண்டியதும் அதுவே.

''இவ்வூறுபடும் தன்மைதான் மனித வாழ்க்கையின் தொடக்கமும் இறுதியுமா? அது ஒன்றே கண்டுபிடிக்க வேண்டிய மதிப்பில்லா மாணிக்கமா?''

நீர் கள்ளமில்லாதவராயில்லாமல் ஊறுபடுந்தன்மையை யுடையவராக இருத்தல் முடியாது. ஆயிரக்கணக்கான அனுபவங்களும், புன்சிரிப்புகளும், கண்ணீர்த் துளிகளும் உள்ளவராக இருந்தபோதிலும், அவ்வனைத்துக்கும் 'நீர்' இறக்காவிட்டால் – உம் மனம் எவ்வாறு களங்கமற்றதாகும்? கள்ளமில்லா மனம் – ஆயிரக்கணக்கான அனுபவங்களைத் தானடைந்தபோதிலும் – மெய் என்ன என்பதைக் காண

வல்லது. மெய் ஒன்றே மனத்தை ஊறுபடுந்தன்மையுள்ள தாக்குகிறது. அதுவே விடுதலை.

''நீர் கள்ளமுள்ளவராயின் உண்மையைக் காண இயலாது. உண்மையைக் காணாவிட்டால் கள்ளமில்லாத் தன்மையும் இல்லை என்று கூறுகிறீர்? அவ்வாறானால் இது கொடிய தொரு சுழலன்றோ?''

நேற்றையின் இறப்பிலேயே கள்ளமில்லாத் தன்மையின் இருப்பு. ஆனால், நாம் இறந்த காலத்திற்கு என்றுமே இறப்பதில்லை. நாம் எப்பொழுதும், சென்ற காலத்தின் எஞ்சியிருக்கும் ஒரு துண்டுப் பகுதியை நம்மிடைவைத்துக் கொண்டேயிருக்கிறோம். இவ்வெச்சமே, மனதைக் 'கால'த்தில் நங்கூரம் பாய்ச்சி வைக்கிறது. ஆகவே, காலமே, கள்ளமில்லாத் தன்மையின் பகை. மனம் எவற்றை யெல்லாம் நிலைநிறுத்திப் பற்றுக்கோடாக்கிக் கொள் கிறதோ அவற்றிற்கெல்லாம் ஒவ்வொரு நாளும் இறக்க வேண்டும். இல்லாவிடில் விடுதலை என்பதில்லை. விடுதலையில் ஊறுபடுந்தன்மை இருக்கிறது. ஒன்றுக்குப் பின் ஒன்றாக அடைவது என்றில்லாமல், வருவது – போவது இவ்விரண்டும் ஒரே இயக்கமாகும். நெஞ்சத்தின் நிறைவே கள்ளமின்மை.



## கலிஃபோர்னியா - 3

அறிந்த யாவற்றையும் மனதிலிருந்து வெளியேற்றுவதே தியானம். அறிந்தது இறந்த காலத்தில். அறிவைச் சேர்ப்பது பிறகு அதை அகற்றுவது என்பதில்லாமல், ஒன்றையுமே தேக்கி வைக்காமல் இருப்பதே தியானத்தின் பொருள். நிகழ்காலத்திலேதான் இறந்த காலம் விலக்கப்படும். இது எண்ணத்தினால் அன்று. 'இருப்பு' என்பதே செயல்படுவது ஆகும். ஒரு முடிவிலிருந்து மற்றொரு முடிவுக்குச் செல்லும் ஓட்டமே இறந்தகாலம். 'இருப்பையும்' அதாவது 'நிகழ்வையும்' ஒரு முடிவிலிருந்தே இறந்தகாலம் தீர்மானம் செய்கிறது. எவ்வித முடிவும் ஒரு தீர்ப்பாகும். அந்தத் தீர்ப்பு இறந்த காலத்துடையதாயினும், நிகழ்காலத்துடைய தாயினும் சரி, அம்முடிவு அறிந்தவற்றை அகற்றுவதை இடைவிடாமல் தடை செய்கிறது. ஏனெனில் அறிந்தது என்பது எப்பொழுதும் ஒரு முடிவு. ஆகவே தீர்மானமு மாகும்.

அறிந்தது என்பது விருப்பத்தின் கட்டளையால் நிகழும் ஒன்று. விருப்பத்தின் நடைமுறையும் அறிந்தது என்பதின் தொடர்ச்சியே. ஆகவே விருப்பத்தின் கட்டளையால் மனத்தை வெளியேற்றம் செய்வது இயலாத காரியம். வெட்டவெளியான மனம், கோரிக்கை என்ற கோவிலில் வாங்கக் கூடிய பொருள் அன்று; எண்ணம் தன் நடவடிக்கை களைத் தானே விழிப்புடன் உணர்வதால் விளையும் ஒன்று. எண்ணுவோன் எண்ணங்களை உணர்வதால் எண்ணங்களற்ற நிலையை கொண்டுவர இயலாது.

நிகழ்காலத்தின் கள்ளமற்ற நிலை தியானம். ஆகவே, எக்காலத்திலும் தனிமையை உடையது. முழுமையான தனிமைபடைத்த மனம், எண்ணத்தினால் சிறிதும் தீண்டப் படாத மனம் எதையும் சேமித்துத் திரட்டாது. ஆகவே, மனத்தைக் காலி செய்வது என்பது எப்பொழுதும் நிகழ்காலத்தில்தான். தனிமையுடைய மனத்தில் எதிர்காலம் என்ற இறந்த காலத்தின் தொடர்ச்சி ஓய்வடைகிறது. தியானம் என்பது ஓர் ஓட்டம். அது முடிவன்று, அடையக்கூடிய குறிக்கோளும் அன்று.

அந்தக் காடு பெரியது. பைன் மரங்களையும், ஓக் மரங்களையும், புதர்களையும், செம்மரங்களையும் உடையதாக இருந்தது. ஓடையொன்று மலைச் சரிவில் முணுமுணுத்தவாறு கீழிறங்கியது. நீலமும் மஞ்சளுமான பட்டாம்பூச்சிகள் தங்கியிருக்க மலர்கள் கிடைக்கப் பெறாததே போன்று மலையடிவாரத்தை நோக்கிப் பறந்தன.

மிகப் பழங்காடு, அந்தச் செம்மரங்களோ இன்னும் பழமையானவை. மிகப் பெரியவை, அதிக உயரம் உள்ளவை. மனித ஆரவாரமற்ற நிலையில் துப்பாக்கிச் சத்தமும், மனித கிசுகிசுப்போ, மனித அறிவின் விளம்பரமோ இல்லாத அந்நிலையில் ஏற்படும் விந்தை யான சூழ்நிலை அங்கே இருந்தது. வழியொன்றுமில்லாத காடு. வண்டியைச் சிறிது தொலைவில் நிறுத்திவிட்டு, பைன் இலைகளால் மூடப்பெற்ற ஒற்றையடிப்பாதை மீது நடக்க வேண்டும்.

நீல 'ஜே'ப் பறவை, மனித வரவை யாவருக்கும் அறிவிக்க வேண்டி எச்சரித்தது. எச்சரிக்கை பயன் உள்ளது. எல்லா விலங்குகளின் சந்தடி சற்றே நின்றதோர் உணர்வு. ஊன்றி கவனிக்கும் உணர்வு அங்கே செறிந்தது. கதிரவன் கிரணங்கள் உள்ளே நுழைய முடியாது. அங்கு நிலவிய அமைதியைக் கையால் தீண்டலாம் – அத்தகைய அமைதி.

இரண்டு சிவப்பு அணில்கள், நீண்டு அடர்ந்த வால்களுடன் பைன் மரத்திலிருந்து கீச்சிட்டவாறும், நகங்களால் கீறி ஒலியிட்டும் கீழே இறங்கின. மரத்தைச் சுற்றிலும், மேலும் கீழும் ஏறி இறங்கியும், பொங்கும் மகிழ்ச்சியுடனும், ஒன்றையொன்று துரத்திக் கொண்டிருந்தன. இரண்டிற்குமிடையே ஒரு பிணைப்பு; விளையாட்டின் பிணைப்பு; பாலுணர்ச்சியின் பிணைப்பு; இன்பக் கிளுகிளுப்பின் வேகமும் அதில் இருந்தது. மேலே இருந்த அணில் திடீரென ஓடுவதை நிறுத்தும். கீழே ஓடிக் கொண்டிருக்கும் அணில் உற்று நோக்கும். கீழே உள்ள அணிலும் ஓடுவதை நிறுத்தும். சிறிது நேரத்திற்குப் பிறகு தம் வால்களைத் தூக்கி, மூக்கை அசைத்து ஒன்றையொன்று உற்று நோக்கிக் கொள்ளும். அவற்றின் கூரிய விழிகள் ஒன்றையொன்று விழுங்கும்போது, தம்மைச் சுற்றியுள்ள எல்லா அசைவுகளையும் நன்குணர்ந்தன. மரத்தடியில் அமர்ந்து தம்மை விழித்து நோக்குபவரை வசைமாரி பொழிந்தன. இப்பொழுது அவரை மறந்தன. ஆனால், ஒன்றையொன்று கவனத்துடனும், உணர்வுடனும் நோக்கிக் கொண்டன. தோழமையினால் அவற்றிடையே உண்டான அளவற்ற மகிழ்ச்சியை நம்மால் உணர முடிந்தது. அவற்றின் கூடு மேலே உயரத்தில் இருக்கலாம். இப்பொழுது அவை சற்று அயர்ந்தன; ஒன்று மரத்தின் மீதேறியது. மற்றொன்று மண்ணில் இறங்கி, ஒரு மரத்தின் பின் மறைந்தது.

நீல 'ஜே'ப் பறவை, உன்னிப்பாகவும், குதூகலத்துடனும் அணில்களையும், மரத்தடியில் உள்ள மனிதனையும் கவனித்த வண்ணம் உரத்துக் கூவியவாறு பறந்து போயிற்று.

மேகங்கள் திரண்டன. இன்னம் ஓரிரண்டு மணி நேரத்தில் இடியுடன் மழை பெய்யக்கூடும்.

அவள் ஆராய்ச்சி செய்பவள். அதற்காக பட்டமும் வாங்கியிருக்கிறாள். பெரிய க்ளினிக் ஒன்றில் வேலை. நல்ல இளம் வயதினள், இந்நாளைய உடை, முழங்காலுக்கு மேல்

பாவாடை. ஊன்றிய கவனமுடையவளாகத் தோன்றினாள். மிகவும் கலங்கியிருந்ததைக் காண முடிந்தது. சாப்பாடு மேஜையருகில் இருக்கும்போது தேவையற்ற அதிகப் பேச்சு, தான் மற்றவைகளைப் பற்றி என்ன நினைக்கிறாள் என்பதை, வலியுறுத்திய பேச்சு, சாளரத்தின் வெளியேயுள்ள அந்தப் பெரிய பூக்களையும் இலைகளூடு மிதந்து வரும் காற்றையும், மற்றும் உயர்ந்த யூகாலிப்டஸ் மரங்கள் ஆடி அசைவதையும் அவள் சிறிதும் எட்டிப் பார்த்ததாகத் தெரியவில்லை. சாப்பிடும் விதமும் சற்றுத் தாறுமாறானது. என்ன சாப்பிடுகிறோம் என்பதைப் பற்றியும் அக்கறை இல்லை.

பக்கத்திலுள்ள சிறிய அறையில் உட்கார்ந்தபோது அவள் கூறினாள் : ''எம்மைப் போன்ற மனோதத்துவ ஆராய்ச்சியாளர்கள், நோயாளிகளை - அவர்களைவிட அதிக நோய்வாய்ப்பட்டுள்ள சமுதாயத்தில் ஒத்துவாழ வகை செய்கிறோம். சிற்சில சமயம் மட்டுமே பயன் அளிப்பதாக இருக்கிறது. அவ்வாறு ஏதாவது வெற்றி கண்டால் அது இயற்கையின் சொந்தமான நிறைவேற்றமே. நான் பலரை ஆராய்ந்திருக்கிறேன். நான் செய்வது எனக்கே விருப்பமில்லை. ஆனால், என் வயிற்றுப் பிழைப்புக்காக அவ்வாறு செய்கிறேன். பல நோயாளிகள் இருக்கின்றனர். அவர்களுக்கு உதவ முடியும் என நான் நம்பவில்லை. ஆனாலும், பல புதிய முறைகளையும், இரசாயனங்களையும், மருந்துகளையும் கொடுக்க முயல்கிறோம். அந்நோயாளிகளைப் போலவே, ஆனால் சாதாரண, நடுத்தர ஆட்களைப் போலன்றி, நானும் வேறுவிதமாக இருக்கப் போராடுகிறேன்.''

வேறாக இருப்பதற்கான உம்முடைய போராட்டமும், மற்றவர்களின் போராட்டத்தை போன்றதன்றோ? எதற்காக இந்தப் போராட்டம்?

''நான் போராடாவிட்டால், நானும், சாதாரண, நடுத்தர குடும்பத் தலைவி போன்று இருப்பேன். நான் வேறாக

இருக்க விரும்புகிறேன். அதனாலேயே நான் மணமும் செய்துகொள்ளவில்லை. நான் உண்மையில் மிகத் தனிமையாக இருக்கிறேன். என்னுடைய தனிமையே இந்த வேலையில் என்னை நுழைத்துள்ளது.''

ஆகவே, இத்தனிமை உம்மை மெதுவாகத் தற்கொலைக்கு அழைத்துச் செல்கிறது இல்லையா?

அவள் தலையசைத்தாள். கண்களில் நீர் தளும்பியது.

நினைவுக் கூடத்தின் ஓட்டம் இவ்வாறு உம்மை தனிமை, அச்சம், மற்றும் மற்றவர் போலன்றி தான் வேறாக இருக்க வேண்டும் என்ற எண்ணம், அதற்கான இடையறா போராட்டம், இவற்றிற்கு அழைத்துச் செல்லுகிறது அன்றோ? நிறைவேற்றங்களைக் காண வேண்டும் என்ற தவிப்பு, தன்னை ஏதாவது ஒன்றோடு ஒட்டிக் கொண்டு அதனடையாளமாக விளங்க வேண்டுமென்ற அவா, அல்லது ஒரு அடையாளத்தைக் கொண்டு தானே அது என்று மெய்ப்பித்தல் என்ற இவையனைத்தும் இந்தப் போராட்டத்தின் ஒரு பகுதியே. பல ஆராய்ச்சியாளர்கள் தங்களுடைய ஆசிரியரின் கொள்கைகளுக்கிணங்க, அவ்வழியைக் கையாளும்பொழுது அதைச் சற்றுத் திருத்தியமைத்து, அவற்றுக்கு ஒரு புதுத் திருப்பம் கொடுக்கவும் செய்திருக்கிறார்கள்.

''நான் ஒரு புதிய கொள்கையைச் சேர்ந்தவள். நாங்கள் சின்னம் ஒன்றுமில்லாமல், இருப்பதை இருந்தவாறே காண்கிறோம். பண்டைய ஆசிரியர்களையும் ஒரு சின்னமாக ஒதுக்கித் தள்ளி மனிதனை அவன் இருந்தவாறே காண்கிறோம். அவை யாவும் இன்னொரு பயிற்சி வழியாகவும் ஆகி வருகிறது. நான் பலவித பயிற்சி வழிகளையும், ஆசிரியர்களையும் பற்றிப் பேச வரவில்லை. என்னைப் பற்றி பேச வந்துள்ளேன். என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை.''

நீரும், நீர் குணப்படுத்தும் நோயாளியைப் போன்றே ஒரு நோயாளியல்லவா? அந்தச் சமுதாயம், உம்மைவிட கலக்கமிகுந்ததாகவும், நோய்வாய்ப்பட்டதாகவும் இருப்பினும் நீரும் அச்சமுதாயத்தின் ஒரு பகுதியேயல்லவா? ஆகவே, இந்தச் சிக்கல் மிக அடிப்படையான ஒன்று - அப்படித்தானே?

நீரும் சமுதாயத்தினுடைய பண்பு, மதச் சார்புகள் என்ற சுமக்கவொணா பாரத்தின் விளைவே. அது உம்மை பொருளாதாரத்தின் வழியாகவும், மனத்தின் உள்ளும் - புறமுமாகவும் விரட்டுகிறது. ஒன்று சமுதாயத்தோடு ஒன்றி வாழுங்கள். அதாவது, அதனுடைய தீமைகளை ஒப்புக்கொண்டு அமைதியாக வாழுங்கள். அல்லது வேறு புதிய வழியமைத்து சமுதாயத்தின் தவறுகளை எடுத்துக் காட்டுங்கள். ஆனால், பழைய வழிகளை விட்டுவிடாமல் புதிய பாதையை அமைக்க இயலாது.

உண்மையில் நீர் விரும்புவது கவலையற்ற ஒரு பாதுகாப்பேயன்றோ? அதுவே, எண்ணம் முழுமையாகத் தேடுவதும். அப்பாதுகாப்பே உம்மை வேறாக இருக்க நினைப்பதும். அதுவே உம்மை மிகக் கெட்டிக்காரராக இருக்க வேண்டும் என்றும், கூரிய அறிவுடையவராதல் வேண்டும் என்றும், மேலும் திறமை உள்ளவராதல் வேண்டும் என்றும் விழைகிறது. இம்முறையில் நீரும் ஒருவித கவலையற்ற ஆழ்ந்த பாதுகாப்பு ஒன்றைத் தேட முயல்கிறீர் அல்லவா? ஆனால், அவ்வாறான பொருள் ஒன்றுளதா? பாதுகாப்பு என்பது ஒழுங்கின் மறுப்பாகும். உறவிலும், நம்பிக்கையிலும், செய்கையிலும், இவை யொன்றிலுமே பாதுகாப்பு இல்லை. ஆனால், ஒருவர் அதைத் தேடியலைகையில் ஒழுங்கின்மை உருவாகிறது. பாதுகாப்பு, ஒழுங்கின்மையை வளர்க்கிறது. அந்த ஒழுங்கின்மை உமக்குள்ளேயும் வளர்ந்து வருவதை நீர் நோக்கும் பொழுது அது முழுமையாக முடிவுற வேண்டும் என்று விரும்புகிறீர்.

விரிந்தும் சுருங்கியதுமான எல்லையையுடைய நினைவுக் கூடத்தின் பரப்பில், எண்ணம் ஒரு பாதுகாப்புள்ள இடத்தை தேடுகிறது. ஆக, எண்ணம் ஒழுங்கின்மையை ஏற்படுத்து கிறது. அன்பு எண்ணத்தின் வயல்வெளியில் இருப்ப தில்லை. அதுவும் அழகைப் போன்று வண்ணத்தூரிகையால் பூச முடியாத ஒன்று. நம்முள்ளே இருக்கும் ஒழுங் கின்மையை அப்பட்டமாக ஒதுக்கித் தள்ள வேண்டும்.

அவள் வாய்மூடி மௌனமானாள். கன்னத்தில் வழிந்த கண்ணீரையடக்க அவளால் இயலவில்லை.





## கலி∴போர்னியா - 4

தூக்கமும் விழிப்பைப் போன்றே மிகச் சிறப்புடையது. ஒருக்கால் விழிப்பைவிடச் சிறப்பு வாய்ந்தது என்று கூடச் சொல்லலாம். நாள்பொழுதில், விழிப்புணர்வுடனும், தன் கவனத்துடனும், உள்ளும் - புறமுமாகச் செல்லும் வாழ்க்கை யோட்டத்தை நோக்கும் மனத்திற்கு தியானம் என்பது நள்ளிரவில் நல்லாசியென வந்தடையும். மனம் விழிப்புற்று, மௌனத்தின் ஆழத்திலிருந்து வெளிப்படும் கவின்பெறு வனப்பாம் தியானத்தை - எவ்விதக் கற்பனைத் திறனாலும் அன்றி மனத்தை அள்ளும் காட்சிகளாலும் கொண்டு வர இயலாது. தியானம் என்பது மனத்தினால் அழைக்கப்படா மல் தானாக நிகழும் ஒன்று. அமைதியுள்ள உள்ளறிவில் நடைபெறும் ஒன்று. ஆனால் மனத்திற்குள்ளன்று. எண்ணத்தின் எட்டுமானத்திற்கும் அப்பாறப்பட்டது. ஆகவே, எவ்வித நினைவுமற்றது. ஏனெனில் நினைவு எப்பொழுதும் இறந்தகாலத்தைச் சேர்ந்தது, தியானமோ சென்ற காலத்தைத் திரும்பியமைப்பதன்று. தியானம் அறிவின் ஒளியாலும், அறிவின் திறனாலும் நிகழாது. உள்ள நிறைவினால் மட்டுமே நிகழும் ஒன்று. ஒவ்வோர் இரவுமே நிகழக் கூடியது. ஆனால் நீர் நல்லாசியுடையவராயின் ஒவ்வொரு முறையும் அது புதுமையாகும். பழமைக்குப் புறம்பான புதுமையன்று, பழமையின் பின்னணியற்ற புதுமையையுடையது. அதன் பன்மையிலும் மாறுதலற்ற மாறுதலையுடைய ஒரு புதுமை. ஆகவே, தூக்கம் என்பது மிகச் சிறப்பு வாய்ந்த ஒன்று, அயர்ந்து போனதால் அடையும் தூக்கமன்று, மாத்திரைகள் உண்பதால் விளைவதன்று,

புலன்கள் நிறைவு பெற்றதால் உண்டாகும் தூக்கமும் அன்று. அத்தூக்கம் நம்முடைய உடலின் நுண்மையைப் போன்றே எளிதானதும், விரைவுடையதுமான ஒன்று. உடலும் விழிப்புணர்வினால் நுண்ணறிவுடைத்தாகிறது. சிற்சில நேரங்களில் வீசும் காற்றைப் போன்று தியானமும் மென்மையானது. மற்ற நேரங்களில் அதன் ஆழமோ அளவிடற்கரியது. மனம் இவற்றுள் எதையாவது ஒன்றை அடையாளமாகப் பிடித்து வைத்துக் கொள்ளுமானால், தியானமென்னும் பேரின்பமும் அக்கணமே முடிவடையும். அதைப்பற்றிக் கொள்ளல், பற்றவேண்டும் என்ற வேட்கை இவ்விரண்டையும் தவிர்த்தல் மிக முக்கியமானது. பற்று எனுந்தன்மை தியானத்திற்குள் சிறிதும் நுழையக்கூடாது. ஏனெனில் தியானத்தைப் பற்றிக் கொள்ள அதற்கு ஒரு வேருமில்லை, பற்றுக்கோல் என்றொரு பொருளுமில்லை.

மற்றொரு நாள் இருபுறமும் தரிசான மலைகளையும் அதன் நெடிய நிழல்களையுடையதான பள்ளத்தாக்கின் சரிவுகளை ஏறும்பொழுது, அது பறவைகளையும், பூச்சிகளையும் சிறு விலங்கினத்தின் கிசுகிசுப்புக்களையும் கொண்டதாக இருந்தது. மெதுவான சரிவில் ஏறி, மிக உயர்ந்த அந்த இடத்தை அடைந்தோம். சுற்றிலுமுள்ள மாலைக் கதிர்களின் ஒளி படிந்த அக்குன்றங்களை அங்கிருந்து காண முடிந்தது. அந்த ஒளி அவற்றின் உள்ளே ஏற்றி வைத்த ஒளியாக, அணைக்க முடியாத ஓர் ஒளியாகத் தோன்றியது. அழகான மாலை, பிரபஞ்சமனைத்துமே நம் பக்கத்திலிருப்பதான ஓர் உணர்வு. விந்தையான அமைதி நம்மை எங்கிலும் சூழ்ந்தது.

நாம் உள் ஒளியற்றவர். பிறர் அறிவின் செயற்கை வெளிச்சம் பெற்றவர் நாம். அதாவது: அறிவின் ஒளி, திறனும் வலிமையுந் தரும் ஒளி, இவ்வாறான செயற்கை வெளிச்சம். இவ்வொளி தேய்ந்து போய்த் துன்பமாக மாறும். எண்ணத்தின் ஒளி எண்ணத்தின் நிழலாகும். ஆனால் மங்கா

அவ்வொளியை, ஆழ்ந்த அவ்வொளியை, கடைத்தெருவின் விற்பனைப் பொருளல்லாத அவ்வொளியை, மற்றொருவருக்குக் காண்பிக்க முடியாது. அதைத் தேடவும் இயலாது. அது பயிர் செய்யும் பொருளுமன்று; கற்பனைக்கும் எட்டாதது. அன்றி ஊகித்தறியவும் இயலாதது. ஏனெனில் மனத்திற்கு அப்பாற்பட்டது அவ்வொளி.

நல்ல சான்றுடைய ஒரு துறவி, துறவுச் சாலையிலும், வெளியிலும் தன்னந்தனியாக வாழ்ந்து ஆன்மிக வழியைத் தேடுவதிலும், அதில் ஆழ்ந்த ஈடுபாடுடையவராகவும் இருந்தார்.

''தியானத்தைப் பற்றி நீர் கூறுவதெல்லாம் உண்மையாகத் தெரிகிறது. அது எட்டாத ஒன்று. ஆகவே, அதைத் தேடிப் போகவும், வேட்கை கொள்ளவும் முடியாது. அதை எந்தச் செய்கையாலுமே அடைய முடியாததன்றோ? தவிரவும் ஒரு தனி ஆசனத்தில் அமர்வதும், அன்றி வாழ்வைப் பற்றியும் தன்னைப் பற்றியுமே ஒருவித மனப்பான்மையைக் கொண்டு இருப்பதாலும் அடைய முடியாதது அல்லவா? அதனால் நாம் செய்யக்கூடியது என்ன? சொற்களால் பயனொன்றுமில்லையே?''

மனச் சூன்யத்திலிருந்து நாம் ஏதோ ஒன்றைத் தேடுகிறோம். அதை நிரப்புவதற்கும் அன்றி அதிலிருந்து வெளியேறவும் முயல்கிறோம். உள்ளத்தின் ஏழ்மையிலிருந்து வெளியோட்டம் என்பது ஒரு கருத்து, ஒரு ஊகம், அன்றி ஒரு பிரிவுபடுத்தும் செயலாகும். இதுவே முடிவுறா முரண்பாடு. ஆகவே அதை எட்ட முயலாதீர்! நம்மை வெளியே இழுத்துச் செல்லும் சக்தி, வெளியே தேடுவதிலிருந்து உள்நோக்கி வழியும். இதுவே இப்பொழுது 'உள்ளுந்திறன்' என்ற பெயரையடைந்து, தன்னை நோக்கி இக்கேள்வியையும் கேட்கிறது. இவ்விரண்டு ஓட்டங்களும் ஒன்றேதான். இவ்விரண்டுமே முடிவுறல் வேண்டும்.

''இம் மனச் சூன்யத்தை வெறிச்சிடும் வெளியை பொறுத்துக் கொள்ளவேண்டும் என்றா கூறுகிறீர்?''

நிச்சயமாக இல்லை.

''ஆக, இந்த வெறிச்சிடும் வெளி, முடிவடையாமல், இருக்கிறது; ஒருவாறாக நம்பிக்கையிழந்த நிலைமையும் இருக்கிறது. ஆன்மிகத் தேடுதல் என்பது இல்லையாயின் இந்நம்பிக்கையற்ற நிலை இன்னமும் மிகையாகிறது இல்லையா?''

உள்ளும் – புறமுமாயுள்ள இந்த ஓட்டம் பொருளற்றது என்ற உண்மையைக் காண்பது நம்பிக்கையிழப்பாகுமா? இருப்பதை ஒப்புக்கொள்வது நிம்மதியா? வெறிச்சிடும் வெளியை ஒப்புக்கொள்வது என்பது நம்பிக்கையிழப் பாகுமா? இவையொன்றும் இல்லை. ஆக, உள்ளும் புறமுமாயுள்ள ஓட்டத்தையும், ஒப்புக்கொள்வதையுமே ஒதுக்கித் தள்ளுகிறீர். சூன்யத்தை நோக்கியிருக்கும் எல்லா மன ஓட்டங்களையுமே நீர் இதனால் மறுக்கிறீர். இந்த ஓட்டமே மனம் ஆகும். ஆக மனமே வெட்டவெளியாம். மனம் தன் ஓட்டங்களை எல்லாம் ஒழித்துள்ளது. ஆகவே, ஓட்டத்தைத் தூண்ட தூண்டுகோல் ஒன்றுமில்லை. வெட்ட வெளியும் அவ்வாறே இருக்கட்டும்! மனமும் வெளியாகவே இருக்கட்டும்! மனம் தன் கடந்த காலத்தையும், எதிர்காலத்தையும், நிகழ்வையும் அறவே, ஒழித்திருக்கிறது. மனம் – 'ஆகுதல்' என்பதையும் ஒழித்தது – ஆகுதல் என்பதே காலம். ஆகவே, காலம் ஒழிந்த நிலை அளவும் ஒழிந்த நிலை. இதுவா வெறும் வெளி?

''இந்நிலை அடிக்கடி வருவதும் போவதுமாயுள்ளது. அது வெட்டவெளியில்லை என்றாலும், நீர் கூறும் பேரின்பம் நிச்சயமாக இல்லை.''

கூறியதை மறக்கவும்! வருவது போவது என்பதையும் மறக்கவும். வருவதும் போவதும் காலத்தினுடையது!

அந்நிலையில் காண்பான் கூறுவதாவது: ''இங்கே, இது இருக்கிறது - இப்பொழுது போய்விட்டது'' என்று. இக்காண்பானே அளப்பவனும், தரம் பிரிப்பவனும், மதிப்பிடுபவனுமாகும். ஆகவே, நாம் இதுவரை உரையாடிய வெளி இதுவன்று!

''நீர் என்னை மெய்மறக்கச் செய்கிறீரா'' - என்று சிரித்தார்.

அளவும், காலமும் அற்றபோது வெட்டவெளிக்கு எல்லையும் வரையறையும் உண்டா? பிறகு அதை வெறிச்சிடும் வெளி என்றும், ஒன்றுமேயற்றது என்றும் கூறலாமா? எல்லாம் அதனிடம் இருக்கிறது - ஒன்றுமே அதில் இல்லவும் இல்லை.



## கலிஃபோர்னியா - 5

இரவில் பெருமளவில் மழை பெய்தது. இப்பொழுது விடியற்காலையில் ஸுமாக், ஸேஜ் ஈரமண் இவற்றின் மணம் மிகுந்தது. சிவந்த மண், இது பழுப்பு மண்ணைக் காட்டிலும் அதிக மணத்தைக் கொடுப்பது போலத் தோன்றியது. வியப்பிற்குரிய வகையில் செந்நிறங்கொண்டு கதிரவன் குன்றுகள் மீதேறி வருகையில் ஒவ்வொரு மரமும், ஒவ்வொரு புதரும் ஒளியிட்டன. நேற்றிரவு பெய்த மழையால் கழுவப் பெற்று பொருட்கள் யாவுமே மிகுந்த களிப்புடன் பொங்கிச் சிரித்தன. கிட்டத்தட்ட ஆறு, எட்டு மாதங்களாக மழை பெய்யாததால் மண் எவ்வாறு களியாட்டம் கொண்டது என்பதை நன்கு புரிந்து கொள்ளலாம். மண் மட்டுமன்று அதன் மீதுள்ள எல்லாப் பொருள்களுமே - பெரிய மரங்களும் உயர்ந்த யூகாலிப்டஸ்களும், 'மிளகு' மரங்களும், வலிவுள்ள 'ஓக்' மரங்களுங்கூடக் களியாட்டம் கண்டன. அன்று காலை பறவைகளும் புதியதொரு பண்ணை இசைத்தன. குன்றங்களையும், தொலைவிலுள்ள நீலமலைகளையும் பார்த்துக் கொண்டேயிருக்கையில் எவ்வாறோ நம்மை அதில் இழந்தோம். நீரும் இருக்கவில்லை, சுற்றியுள்ள யாவுமே இருக்கவில்லை. இவ்வழகு ஒன்றே, அக்காலையில் காதம் காதமாய் நீண்டு செல்லும் குன்றுகளிலிருந்து வந்த அமைதி, நம்முடைய அமைதியுடன் கலந்தது. மண்ணும் - விண்ணும் கலந்ததே போன்ற அப்பேரின்பமே நல்லாசியானது.

அதே மாலையில், கீழ்ப் பள்ளத்தாக்கிலிருந்து மலை மீது ஏறியபொழுது, காலடியில் ஈரமாயிருந்த செம்மண் மென்மையாகவும், நெகிழ்ந்தும் நம்பிக்கை தருவதாயும் இருந்தது. செங்குத்தான மலை மீது பல மைல்களைக் கடக்கையில் திடீரென்று கீழ்நோக்கியிறங்கினோம். மூலை திரும்புகையில், முழுமையான அம்மோனத்தை வந்தடைந் தோம். ஆழ்ந்த பள்ளத்தாக்குகளை அடைந்தபோது, அம்மோனம் மேலும் ஊடுருவி நெருக்கியது. வலுக் கட்டாயப்படுத்தியது. எண்ணமொன்றும் அங்கில்லை. கீழிறங்குகையில் அம்மோனம் மட்டுமே பார் முழுவதை யுமே விரித்து மூடுவதாகத் தோன்றியது. ஒவ்வொரு பறவையும் மரமும் அசைவற்றதாக இருந்தது வியத்தற்குரியது. மரங்களிடை காற்று துளியும் இல்லை. இருட்டில் அவை தம் தனிமையில் அடைக்கலம் கொண்டன. நாட்பொழுதில் நம்மை வரவேற்கும் அம்மரங்கள் இந்நேரத்தில் தம்முடைய வியக்கத்தக்க உரு வங்களினால் தொலைவனவையாயும் தனித்தும், தம்முள் ஒடுங்கியும் காணப்பட்டன. மூன்று வேடர்கள் தம்முடைய வலுவான வில், அம்புகளுடன் மின் தீவட்டிகளைத் தம் தலையில் அணிந்தவாறு அவ்வழிச் சென்றார்கள். இரவில் திரியும் பறவைகளை வேட்டையாடச் சென்ற அவர்களை, அவ்வழகும், அமைதியும் சிறிதும் ஊடுருவுவதாக இல்லை. அங்குள்ள அனைத்தும், கொல்ல விழைந்த அவர்களை நடுக் கத்துடனும் பேரிரக்கத்துடனும் நோக்கியதாகத் தோன்றியது.

அன்று காலை சுமார் முப்பது பேர்கள் கொண்ட இளைஞர்கள் கூட்டமொன்று வீட்டிற்கு வந்தது. எல்லோரும் கல்லூரி மாணவர்கள். இந்தச் சூழ்நிலையி லேயே வளர்ந்தவர்கள். நல்ல ஊட்டம் பெற்றவர்களாகவும், உயரமானவர்களாகவும், ஊக்கமுள்ளவர்களாகவும் இருந்த னர். ஓரிருவரே நாற்காலியில் அமர்ந்திருந்த போதிலும் நாம் அனைவரும் தரையில் உட்கார்ந்தோம். குட்டைப் பாவாடையணிந்த பெண்கள் சற்று இக்கட்டான வகையில்

அமர்ந்திருந்தார்கள். துடிக்கும் உதடுகளுடன் தலை குனிந்தவாறு அவர்களில் ஒரு இளைஞன் பேசினான்.

''நான் வேறு மாதிரியான வாழ்க்கை வாழ விரும்புகிறேன். லாஹிரி மருந்துகளிலும், பால் – உணர்ச்சி இவைகளிலும் பலரைப் போலச் சிக்கிக் கொள்ள விரும்பவில்லை. நான் உலகைவிட்டு வாழ விரும்பிய போதிலும், அதில் கட்டுண்டு கிடக்கிறேன். நான் புணர்ச்சியில் ஈடுபடுகிறேன். ஆனால், அதற்கடுத்த நாளே மனம் இழந்து விடுகிறேன். உள்ளத்தில் அன்புடன், அமைதியாக வாழ வேண்டும் என்று உணர்ந்தபோதிலும் என்னுடைய விருப்பங்கள் என்னைத் தூண்டுவதாலும் சமூகம் இழுப்பதாலும் திண்டாடுகிறேன். இத்தூண்டு தலுக்கு கீழ்ப்படிய இசைகிறேன். ஆனால், அதற்கெதிராகப் போராடவும் செய்கிறேன். மலையுச்சியில் வாழவும் விழைகிறேன். அதே நேரம் பள்ளத்தாக்குகளில் சரிந்தும் விழுகிறேன். ஏனெனில், என் வாழ்வு அங்கேதான் இருக்கிறது. எதிலும் ஒரு சலிப்பு, என் பெற்றோர்களாலும் எனக்கு உதவி செய்ய இயலவில்லை. தவிர, கல்லூரி ஆசிரியர்களும் அவர்கள் என்னைவிட வயது முதியவர்களானதால் – (சில நேரங்களில் அவர்களுடன் உரையாடி தெளிய விரும்பியும்) உதவுவதில்லை. அவர்களும் என்னைப் போல், சொல்லப்போனால் என்னைவிட மிகவும் குழப்பமடைந்தவர்களாயும் வருந்தியவர்களாகவும் இருக்கின்றனர்.''

ஒருவித முடிவுக்கும் வருதல் கூடாது என்பது மிக முக்கியமானது. அதாவது, பால் உணர்வின் பக்கமாகவோ அன்றி அதற்குப் புறம்பாகவோ முடிவுக்கு வருதலும் ஆகாது. கருத்துக்கிசைந்த கோட்பாடுகளில் சிக்கிக் கொள்ளுதலும் ஆகாது. நம்முடைய முழு வாழ்க்கைப் படத்தை நோக்குவோம். துறவி திருமணமில்லா வாழ்க்கையை மேற்கொள்கிறார். ஏனெனில், அவர் விரும்பும் 'வானுலகத்தை அடைய பெண்களின் தொடர்பை

அறவே ஒழித்தல் தேவை. ஆனால், தன் எஞ்சிய வாழ்நாட்கள் முழுவதுமோ தன் புலன்களின் கோரிக்கைகளை எதிர்த்து போராட்டம். விண்ணிலும் மண்ணிலுமே கூட முரண்பாடு கொண்டவர் எஞ்சிய நாட்களையும், வெளிச்சத்தையும் நோக்கி அலைந்து இருட்டிலேயே கழித்துக் கொண்டிருக்கிறார். நம்மில் ஒவ்வொருவரும் இத்துறவியைப் போன்றே வேட்கையால் எரிந்து கொண்டிருந்தபோதிலும், அதையடக்கி ஆண்டால், அது விண்ணையளிக்கும் என்ற உறுதியால் அவ்வாறு செய்ய முயல்கிறோம். நமக்கு பருப்பொருளான உடல் இருக்கிறது. அது தனக்குரிய கோரிக்கைகளை உடையது. அதாவது சமூகத்திலுள்ள விளம்பரங்களாலும் அரைகுறை ஆடையணிந்த பெண்களாலும், கேளிக்கைகளாலும், இன்பந்தரும் பொழுது போக்குகளாலும், மனமகிழ்விக்கும் செயல்களாலும், சமூக நெறிகளாலும், ஒழுங்குகளாலும் (உண்மையில் அவை ஒழுங்கின்மை; நெறியற்ற முறைகளே) அக்கோரிக்கைகள் மேலும் வலியுறுத்தப்படுகின்றன – நாம் உடலளவில் தூண்டப்படுகிறோம். மேன்மேலும் சுவையுள்ள உணவு, பானங்கள், டெலிவிஷன் என்று இவ்வாறாக தற்கால வாழ்க்கை முழுமையாக நம் கவனத்தை பால் உணர்ச்சியின் மீது திருப்புகிறது. நம் உணர்வுகள் ஒவ்வொரு வகையிலும் தூண்டப்படுகின்றன. புத்தகங்களாலும், பேச்சுகளாலும், கேட்பாரற்ற 'விடுதலையை' உடைய சமூகத்தாலும், இவை நம்மைச் சூழ்ந்திருக்கின்றன. நாம் இதைப் பார்க்க அஞ்சி, கண்களை மூடிக் கொள்வதால் பயனில்லை. வாழ்க்கையின் முழுப் போக்கையும் அதனுடைய நம்பிக்கைகள், பிரிவுகள், ஆபீஸில் அன்றி தொழிற்சாலையில் செலவழிக்கும் வாழ்நாட்கள் யாவற்றையுமே நன்றாகப் பார்க்கவேண்டும். இவற்றுக்கெல்லாம் முடிவிலே உள்ளது இறப்பு. இக்குழப்பங்களையெல்லாம் தெளிவாகக் காண வேண்டும்.

இப்பொழுது சாளரத்துக்கு வெளியே பாருங்கள். அந்த வியன்பெறு மலைகள், நேற்றிரவு பெய்த மழையால் கழுவப்பெற்றுப் புதிதாய் ஒளிர்கின்றன. கலிஃபோர்னியா வுக்கு உரித்தான சிறப்பு ஒளியை வேறு எங்குமே காண முடியாத அவ்வொளியைப் பாருங்கள். அவ்வொளியின் அழகை மலைமேல் நாம் நுகரலாம். நாம் அதை மேன்மேலும் உணர இவ்வளவிடற்கரியதும், நம்பிக்கை களுக்கு அப்பாற்பட்டதுமான இவ்வொளியும், அழகும், மேலும் உயிர் உடைத்தாயின. அவற்றில் ஆழ்ந்து இருக்கையில் - நம் உணர்வும் மிகையாகிறது. அவ்வுணர்வும், ஒரு பெண்ணைப் பார்க்கையில் உண்டாகும் உணர்வைப் போன்று ஒரு புலன் உணர்வே. மலையைப் பார்க்கும் பொழுது அதில் நம் புலன்களுடன் ஈடுபட்டு அதனுடன் இணைவதும், பிறகு ஒரு பெண்ணை நோக்குகையில் அதே புலனுணர்வைத் துண்டித்து எறிவதும், இவ்விதமாக நீர் உமது வாழ்க்கையைப் பிரிவுப்படுத்துகிறீர். இப்பிரிவினால் உண்டாவது துயரமும், கலக்கமுமேயாம். மலையுச்சியைப் பள்ளத்தாக்கிலிருந்து பிரிக்கையில் - நீர் முரண்பாட்டை உண்டுபண்ணுகிறீர். இதனால் முரண் பாட்டைத் தவிர்க்கவோ அல்லது அதிலிருந்து தப்பியோட வேண்டும் என்பதோ பொருளில்லை. அல்லது பால் உணர்வு அல்லது மற்றொரு வகைப் பசியில் - மூழ்கி இந்த முரண்பாட்டிலிருந்து விடுவித்துக் கொள்ளவேண்டும் என்பது பொருளன்று. முரண்பாட்டை நன்கு புரிந்துக் கொள்வது என்பதற்கு உண்டு உறங்கும் பசுவைப் போன்று இருப்பது என்பதும் பொருளில்லை.

இதைப் புரிந்து கொள்வது என்பது முரண்பாட்டில் சிக்கிக் கொள்வதாகாது. அல்லது அதன் மீது சார்பு கொள்வதுமாகாது. எதைப் பற்றியும் ஒரு முடிவுக்கு வருதலும் அல்லது ஏதோ ஒரு கருத்தையோ, வெறும் சொற்களால் புனைந்த ஒரு நிலையையோ, ஒருவிதக் கொள்கையையோ கொண்டு தன் வாழ்வை அவ்வாறு நடத்த

முயல்வது என்பதுமில்லை. அப்பொழுது நமக்கு முன்விரியும் படத்தின் முழு வடிவத்தைக் கண்டுணர்வதே அறிவு. இவ்வறிவே செயல்படுந்திறன். வேறுவித எந்த முடிவும் அல்லது கருத்துமிக்க கொள்கையும் செயலை விளைவிக்காது.

எவ்வாறு நம்மனமும் உள்ளமும் நம்முடைய கல்வியாலும், சமூகம் வகுத்துள்ள சட்டத்திட்டங்களின் கட்டுப்பாட்டாலும் மந்தப்படுத்தப்பட்டுள்ளனவோ அவ்வாறே நம் உடல்களும் மந்தப்படுத்தப்பட்டுள்ளன. அச்சட்ட அமைப்புகள் உள்ளத்தின் உணர்வைத் தடைப்படுத்துகின்றன. சமூக முறைகள் நம்முடைய எல்லாவித அழகையும், மென்மையையும், களிப்பையுமே அழித்து நம்மை போர் செய்யத் தூண்டுகின்றன. இதை வெற்றுச் சொற்களாலும், அறிவுத் திறன்கொண்டும் காணாமல், உண்மையாகவே நோக்குகையில் நம்முடைய மனமும் உடலும் கூர்ந்த உணர்வைப் பெறுகின்றன. அந்நிலையில் உடலானது தகுந்த உணவைப் பெறும். அந்நேரம் மனமும் சொற்களிலும், இடுகுறிகளிலும், எண்ணத்தின் பயனற்ற வெற்றுரைகளிலும் அகப்பட்டுக் கொள்வதில்லை. அப்பொழுது நமக்கு பள்ளத்தாக்கிலும் சரி, மலையுச்சியிலும் சரி, வாழும் வகை தெரியவரும். பின்னர், இவ்விரண்டிற்கும் உள்ள இருநிலை, பிரிவு, எதிரிடை என்ற யாவும் அங்கில்லை.



## ஐரோப்பா - 1

கவனம் எனும் ஒட்டமே தியானம். கவனம் என்பது ஒரு நிறைவேற்றமன்று. ஏனெனில், அது தனக்கெனச் செய்யும் செயலுமன்று. காண்பான் என்ற மையம் இருக்கையில்தான் 'தான்' எனுந்தன்மை எழுகிறது. இதிலிருந்து அவன் உள்ளாழ்ந்து பார்க்கவும் அன்றி, ஆதிக்கம் செலுத்தவும் முயல்கிறான். ஆக எல்லா நிறைவேற்றமுமே பிரிவுபடுத்தக் கூடியது. எல்லைக்குட்பட்டது. கவனமோ கரையற்றது. தாண்டுவதற்கென்று ஓர் எல்லையையுமற்றது. கவனம் என்பது தெளிவு. எண்ணங்களிலிருந்து விடுபட்டது. எண்ணம் தெளிவை உண்டாக்காது. ஏனெனில், எண்ணம் இறந்த காலத்திலே வேரூன்றியது. ஆகவே எண்ணுவது என்பது இருட்டிலே செய்யும் செயல். இதைப் பற்றிய விழிப்புணர்வே கவனமாகும். விழிப்புணர்வு என்பது கவனத்திற்கு அழைத்துச் செல்ல ஒரு வழியன்று. அத்தகைய கவனமானது எண்ணத்தின் பரப்பிலே விளைவது. ஆகவே, அதை அடக்கியாளவோ மாற்றியமைக்கவோ கூடும். இந்த கவனமற்ற நிலையை உணர்வதே கவனமாகும். தியானம் அறிவுத் திறமையால் நடைபெறுவதன்று. அவ்வாறானால், அதுவும் எண்ணத்தின் பரப்பிற்குட்பட்டதே. எண்ணத்திலிருந்து விடுதலையே தியானம். மெய்ப்பொருளின் களிப்போட்டமே அஃது.

அன்று காலை பனி பெய்து கொண்டிருந்தது. குளிர்காற்று கடுமையாய் வீசியது. மரங்கள் மீது இளவேனிலை எதிர்நோக்கிய ஏக்கத்தின் நெளிவு... அவ்வொளியில்

இலையுதிர் காலத்தில் விழுந்த இலைகளால் மூடப்பெற்ற மென்மையான மண்ணின் பசுஞ்சாம்பல் நிறத்தை 'பீச்', 'எல்ம்' இவற்றின் அடிமரத்தில் காண முடிந்தது. அம்மரங்களூடு நடந்தபோழ்து தனித்தனி உருவங்கள் என்று உணராமல், மரங்கள் என்ற தன்மையை முழுமையாக உணர முடிந்தது.

திடீரென ஞாயிறு வெளிப்பட்டது. விரிந்த நீலவானம் கிழக்கில், மேற்கில் கார்மேகங்களின் நிறைவு. சூரியனின் அவ்வொளியிலே அக்கணமே இளவேனில் பிறந்தது. அமைதியான, சலனமற்ற அவ்விளவேனில் நாளில், மண்ணின் அழகையும், மண்ணிற்கும் மண்ணின் மீதுள்ள எல்லாப் பொருட்களுக்குமிடையேயுள்ள ஒற்றுமையையும் நாம் உணர்ந்தோம். கதிரொளி பெற்று பன்னிறங்காட்டிய முட்புதர்களுக்கும், மரங்களுக்கும், உமக்கும் இடையே வேற்றுமையொன்றுமில்லை. நீர், 'காண்பான்' அற்ற நிலை. ஆக காலம், வெளி என்ற பிரிவும் முடிவடைந்தது.

ஒருவித நம்பிக்கையையும் நிறுவனத்தையும் சேர்ந்தவர் அன்று என்றும், தான் ஒரு துறவியெனவும் அவர் கூறினார். ஆனால், மெய்ந்நெறியில் ஓர் ஈடுபாடு, பல மதத்தினருடன் ஓயாமல் பேசிப்பேசி தொல்லையுற்று, அவற்றிலிருந்தெல் லாம் நம்பிக்கையிழந்து நல்ல காலமாய் வெறுப்பொன்றும் இல்லாமல் வெளியே வந்தவர். ஆயினும், தான் தேடும் சுவர்க்கத்தைப் பெறாதவர். அவர் கல்லூரி ஆசிரியர். தியானமுள்ள வாழ்க்கையை விசாரித்தும் கேட்டும், தெளிவு பெற்ற வாழ்க்கையை விழைந்தும் அவ்வேலையிலிருந்து நீங்கினார்.

''பாகுபாடுள்ள வாழ்வைப் பற்றி நான் உணருகிறேன். இது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். ஏன்? நானே அவ்வாழ்க்கையின் ஒரு துண்டுதானே! உடைந்தும் வேறுபாடும் உள்ள நான் முழுதான இவ்வண்டத்தின் முக்கிய பகுதியாக இருக்கவும் அம்முழுமையை

அடையவும் முடிவடையாப் போராட்டம் செய்து கொண்டிருக்கிறேன். நான், என்னுடையது என்று தனி அடையாளமுள்ளவனாக இருக்க முயன்றேன். இந்நாளைய சமூகமோ எல்லாவித அடையாளங்களையும் அழிப்பதாக இருக்கிறது. இந்தப் பிரிவிலிருந்து பிரிவுபடாத ஒன்று, வகுக்கப்படாத ஒன்று இவற்றிற்கு ஒரு வழியுண்டா என்று வியக்கிறேன்.''

வாழ்க்கை, குடும்பம் என்றும், அரசியல் என்றும், நாடு என்றும், செயலகம் என்றும், அரசியல் வாழ்க்கை, மெய்ந்நெறி வாழ்க்கை என்றும், அமைதி, சண்டை என்றும், ஒழுங்கு, ஒழுங்கின்மை என்றும் ஒன்றுக்கொன்று எதிரான இரட்டைகளாக நாம் கூறுபடுத்துகிறோம். இப்பாதை வழியே நடந்து மனத்திற்கும், நெஞ்சிற்கும் ஓர் ஒற்றுமையை ஏற்படுத்திக் கொண்டு, அன்பு, பொறாமை இவற்றையும் சமன் செய்து சீர்தூக்க முயல்கிறோம். இவ்வனைத்தையும் நன்கு தெரிந்து கொண்டே ஏதாவதொரு வகையான இசைவைக் காணவும் முயல்கிறோம்.

இவ்வகைப் பிரிவு எவ்வாறு ஏற்படுகிறது? கண்கூடாக, கருப்பு – வெள்ளை, ஆண் – பெண் இவ்வாறு பலபல பிரிவுகள் உள்ளன. ஆனால் இப்பிரிவுகளுக்குக் காரணம், அல்லது மூலப் பொருள் எது? இதைக் கண்டுபிடித்தா லொழிய பிரிவு என்பது தவிர்க்க முடியாததாகும். இதற்குக் காரணம் என்னவென்று நீர் நினைக்கிறீர்?

''முடிவற்றதெனத் தோன்றும் இப்பிரிவுக்கு நான் பல காரணங்களைக் காட்ட முடியும். தவிர, இந்த நேர் – எதிர் இரட்டைகளுக்குப் பாலம் அமைக்கப் பல வழிகளையும் காட்ட முடியும். ஆனால், இது எங்கும் அழைத்துச் செல்லாது. இவ்விளையாட்டைப் பலமுறை எனக்குள்ளே யும், மற்றவருடனும் நடத்தியிருக்கிறேன். தியான வழியினாலும் மனக்கட்டுப்பாட்டினாலும் பொருள் களிடையேயுள்ள ஒற்றுமையை உணரவும், எல்லாவற்றுடன்

ஒன்றுகூடி இருக்கவும் முயன்றேன். ஆனால், அது பயனற்ற ஒரு முயற்சி.''

பிரிவின் காரணத்தைக் கண்டுணர்வதால் மட்டும் பிரிவென்பது நீங்குவதில்லை. ஒருவனுக்கு அச்சத்தின் காரணம் தெரிந்த போதிலும் அச்சம் அகலுவதில்லை. மனக்கூர்மையால் கண்டறிய முயலும்போது, செயலின் உடனடித் தேவை இழந்து போகிறது. மூளையின் கூர்மை மட்டுமே அங்குச் செயல்படுகிறது. 'நான்' என்பது 'நானன்று' என்பதுடன் இணைந்து கொள்ள முயல்கிறது. 'நான்' 'நானன்று' என்ற பிரிவின் காரணம், அந்த 'நானல்ல' என்பது மனைவியாகவோ குடும்பமாகவோ சமூகமாகவோ அன்றி எண்ணத்தினால் வகை செய்யப்பட்ட 'கடவுள்' என்ற பொருளாகவோ நாம் கருதுவதனால்தான். எதுவாயினும் 'நான்' என்பது எப்பொழுதும் ஒரு அடையாளத்தைக் கொண்டு விளங்க விழைகிறது. ஆனால் 'நான்' எதனுடன் இணங்க விழைகிறதோ, அது ஒரு கருத்தாகவும் அன்றி நினைவாகவும் மற்றும் எண்ணம் விளைவிக்கும் ஒரு கட்டிடமாகவும் இருக்கிறது.

இரட்டை என்ற நிலையொன்றுள்ளதா? பொருள் வடிவில் ஒளி, நிழல் போன்றவை உள்ளன. மனோதத்துவமாக அவ்வாறேயுள்ளதா? பொருள் வடிவான இரட்டைகளை ஒப்புக்கொள்வதே போன்று மனோதத்துவ வகையிலும் அதை ஒப்புக் கொள்கிறோம். வரையறுப்பின் ஒரு பகுதியே அது. இவ்வாறு கட்டுண்டதை நாம் தட்டிக் கேட்பதில்லை. ஆனால், மனோதத்துவ வழியில் இரட்டை நிலையுள்ளதா? 'இருப்பது' என்ற ஒன்றே உள்ளது. 'இவ்வாறுதான் இருத்தல் வேண்டும்' என்பதில்லை. 'இருப்பு' என்பதைத் தவிர்க்கவும் அல்லது அதை வெற்றி கொள்ளவும், இவ்வாறு இருக்க வேண்டும், இவ்வாறு இருக்கலாகாது என்ற பிரிவினையை-எண்ணம் உண்டாக்கு கிறது. ஆகவேதான், 'இருப்பிற்கும்' 'இருக்க வேண்டும்' என்பதற்கும் உள்ள போராட்டம். 'இருக்க வேண்டும்'

என்பது மனத்தின் கற்பனை, கட்டுக்கதை அல்லது இலக்காகும். உண்மையாக 'இருப்பு' என்பதே இருக்கிற பொருளாம். மற்றவை யாவும் உண்மையன்று. உண்மை யற்றதே இப்பிரிவைக் கொண்டு வருகிறது, அன்றி இப்பிரிவு 'இருப்பினால்' உண்டாவதன்று. துன்பமே உண்மை; துன்பமற்றது என்பது இன்பம் விழையும் எண்ணம். இதுவே துன்பம்- துன்பமற்ற நிலை என்று இவற்றுக்கிடையே எண்ணம் ஏற்படுத்தும் பிரிவாகும். எண்ணம் எந்நாளும் பிரிவுத்தன்மையுடையது. அதுவே, காலம், வெளி, காண்பான், காட்சிப் பொருள் என்று இவற்றிடையே இருக்கும் பிரிவு. இருப்பு ஒன்றே உள்ளது. உள்ளதை உள்ளவாறு காண்பதே காண்பான் அற்ற நிலை. அதுவே கூறுபோடுவதின் முடிவும்.

எண்ணம் அன்பல்ல. ஆனால் எண்ணம், இன்பம் என்ற போர்வையால் அன்பைக் கூடு கட்டி, அக்கூட்டினுள் துன்பத் தைக்கொண்டு வருகிறது. 'இருப்பில்லாத'தை ஒழிப்பதே ''இருப்பு'' ஆகும். அன்பில்லாததை ஒழிக்கையில் அன்பு எட்டிப் பார்க்கும். அதிலேதான், ''நான் - நானல்ல'' என்பதின் முடிவும் உள்ளது.



## ஐரோப்பா - 2

கள்ளமில்லாத் தன்மையும், வெளியும் தியானத்தை மலர்விக்கின்றன. கள்ளமில்லாத் தன்மையன்றி வெளியில்லை. கள்ளமில்லாத் தன்மையை முதிர்ச்சியற்ற நிலையென்று கொள்ளலாகாது. நீர் வயதினால் முதிர்ந்தவராயிருக்கலாம். ஆனால் அனுபவங்களின் அடையாளங்களிலிருந்து விடுபடாத மனம், அன்பு விளைவிக்கும் வெட்ட வெளியை உணராது. அனுபவத்தின் இந்த வடுக்களே கள்ளமில்லாத் தன்மையின் எதிர்ப்பு. அனுபவத்தின் இடையறா அழுத்தத்திலிருந்து மனத்தை விடுவித்தலே தியானம்.

சூரியன் மறையும் வேளையில் ஒரு முன்பின்னறியா அமைதி. அதனுடன் உம்மைச் சுற்றியுள்ள எல்லாப் பொருள்களுமே முடிவடைந்த ஓர் உணர்வு. கார், பஸ், இவற்றின் ஒலி எழுந்து கொண்டேயிருந்த போதிலும், பேரண்டத்தையும் இத்தனிமையின் உணர்வு ஊடுருவுவதாகத் தோன்றியது. நீரும் இதை உணர்ந்திருக்கலாம். அடிக்கடி எதிர்பாராத வேளையில் இது ஏற்படும்; முன்பின்னறியா அசைவற்ற நிலை, அமைதி விண்ணிலிருந்து பெய்ததே போன்று மண்ணை அணைத்து மூடியது. இது ஒரு நல்லாசி. அது அம்மாலையின் அழகை எல்லையற்றதாக்கியது. மழை பெய்த பின், பளபளக்கும் சாலை, காத்துக் கொண்டிருக்கும் கார்கள், ஆளற்ற மைதானம் இவையெல்லாம் அதன் பகுதியே; தாண்டிச் செல்லும் அந்த ஜோடியின் சிரிப்பும் அம்மாலையின் அமைதியைக் குலைக்கவில்லை.

இலையற்ற மரங்கள், தங்கள் மென்மையான கிளைக ளுடன் இளவேனிலுக்குக் காத்துக் கொண்டிருந்தன. அந்த இளவேனிலும் மூலைத் திருப்பத்திலேயே அவைகளை எதிர்நோக்கி ஆவலுடன் இருந்தது. முன்கூட்டியே புதிய புற்கள் முளைத்திருந்தன. பழமரங்களும் மலருடைத்தாயின. நாடு பையப் பைய உயிருடைத்தானது. இந்த மலையுச்சியி லிருந்து, பலபல கோபுரங்களையுடைய பட்டணத்தை நீரும் பார்க்கலாம். அதில் ஒரு கோபுரம் மற்றவற்றைக் காட்டிலும் உயரமானது, இறுமாப்புடையது. பைன் மரங்களுடைய நுனிகள் இலையற்றிருப்பதை நீர் காணலாம், மாலையொளி மேகங்கள் மீது படிந்தன. வரிசைவரிசையாக, மேகங்கள் குன்றுகள் மீது குவிந்தன. அவற்றின் வடிவங்களோ மிக வியக்கத்தக்கவை - மனிதன் கட்ட முடியாத மனக் கோட்டைகளைப் போன்று; இம்மேகங்களால் தொடு வானம் முழுதும் நிறைந்தது. அதில் ஆழமான விரிசல்களும், ஓங்குயர் கோபுரங்களும் இருந்தன. இம்மேகங்கள் செறிந்த சிவப்பு வண்ணத்துடன் ஒளிர்ந்தன, சில தீக்கொண்டவையெனத் தென்பட்டன. சூரியனால் அல்ல, தம் உள்ளொளி கொண்டு எரிவதே போல் காணப்பட்டன.

இம்மேகங்கள் வெளியை உண்டாக்கவில்லை, வெளியில் அவை இடம் பெற்றன. இவ்வெளியோ வரம்பற்று, ஊழியிலிருந்து ஊழி வரை நீண்டிருந்ததான தோற்றம்.

அருகில் உள்ள புதரில் கருங்குருவியொன்று கூவி இசைத்தது. அதுவே என்றும் நிலையான ஆசி.

மூன்று, நான்கு பேர்கள் தத்தம் மனைவியுடன் வந்தனர். நாம் எல்லோரும் தரையில் அமர்ந்தோம். இந்த உயரத்திலிருந்து, எதிர்ப்புறத்திலுள்ள சுவரையோ அல்லது தோட்டத்தையோ பார்க்க முடியாது. அவர்கள் எல்லோரும் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள். ஒருவர் தான் விஞ்ஞானி என்றும் மற்றவர் கணித வல்லுனர் என்றும், மற்றும் ஒருவர் பொறியாளர் என்றும் கூறினார்கள். இவர்கள் எல்லோரும்

நிபுணர்கள், தங்கள் கரைக்கு மேலெழும்பி வழியாதவர்கள். மழையினால் வெள்ளமிகுந்து கரைபுரண்டோடி மண்ணைச் செழிக்கவைக்கும் ஆற்றைப் போன்றவர்களன்று.

பொறியாளர் வினவினார் : ''நீர் அடிக்கடி சுட்டிக்காட்டிய வெளியைப் பற்றி என்ன பொருள் கொண்டீர் என நாங் களனைவரும் அறிய விரும்புகிறோம். இரு கரைகளிடையே அல்லது இரண்டு குன்றுகளிடையேயுள்ள வெளியை பாலம் இணைக்கிறது. அணைக்கட்டினால் ஏற்படும் வெளியை நீர் நிரப்புகிறது. நமக்கும், விரிந்தகலும் அண்ட கோளத்திற்கும் இடையே வெளியுள்ளது. உமக்கும் எமக்குமிடையே வெளியுள்ளது. இதுவா நீர் கூறும் பொருள்?''

மற்றவர்களும் அதை ஆமோதித்தார்கள். முன்கூட்டியே அவர்கள் இதைப்பற்றிப் பேசியிருப்பார்கள் எனத் தோன்றியது. ஒருவர் ''இதை நான் வேறுவிதமாகக் கூறலாம், அதாவது விஞ்ஞான மொழியிலே, ஆனாலும் ஏறத்தாழ கேள்வி அதே தான்'' என்று சொன்னார்.

வகுத்தும், பிரித்தும் சூழல் உள்ளதுமான வெளி யொன்றும், எல்லையற்றதான வெட்டவெளியொன்றும் உள்ளன. மனிதரிடையேயுள்ள வெளி, தீமை வளர்வதான இடம், இது பிரிவின் வெளியாகும். உமக்கும் உமக்குள்ள தோற்றத்திற்குமிடையேயும் வெளியுள்ளது. உமக்கும் உம் மனைவிக்குமிடையே வெளி; நீர் 'உள்ளபடி' உள்ளதற்கும், நீர் எவ்வாறு முன் மாதிரியாக 'இருக்க வேண்டும்' என்ற கற்பனைக்குமிடையேயும் வெளியுள்ளது. குன்றுக்கும் குன்றுக்குமிடையேயும் வெளியுள்ளது. மேலும் காலம், வரைகோடு இவைகளற்ற – வெட்ட வெளியின் அழகும் உள்ளது.

எண்ணத்திற்கும் எண்ணத்திற்குமிடையே வெளியுண்டா? நினைவுகளிடையே வெளியுண்டா? செயல்களிடையே? அல்லது எண்ணத்திற்கும் எண்ணத்திற்குமிடையே வெளியே கிடையாதா? ஒரு காரணத்துக்கும் மற்றொரு காரணத்துக்

கும் இடையே? உடல் நலம் – நலமின்மை இவற்றிடையே – காரணமே செய்கையாகி பின்பு அச்செய்கையே காரணமாகும்பொழுது – வெளியுண்டா?

எண்ணத்திற்கும் – எண்ணத்திற்கும் இடையே முறிவு இருந்தால், எண்ணமானது என்றும் புதுமையாக இருக்கும், முறிவு இல்லாததால் – இடைவெளியற்றதால், எல்லா எண்ணமும் பழமையானதே. நீர் எண்ணத்தின் தொடர்ச்சியை அறியாமல் இருக்கக்கூடும். ஆனால், எண்ணம் தன் பழைய வரையறைகளுக்குள்ளேயே வேலை செய்து கொண்டிருக்கும்.

உள்ளறிவு முழுவதுமே, அதாவது நினைவு, நினைவிழந்த நிலை (நினைவிழந்த நிலை – இச்சொல்லை உபயோகிப்பதற்காக வருத்தப்படுகிறேன்) இவ்விரண்டை யுடையது. இம் முழுமையற்ற உள்ளறிவானது, குறுகிய வெளியையும், முறை, வழி, பண்பாடு பழக்க வழக்கம், நினைவு கூர்தல் இவற்றுள் அகப்பட்டுக் கொண்ட ஒரு சொல்லாகும். தொழில் நுண்ணறிவு உம்மை நிலா வெளிக்கும் அழைத்துச் செல்லக்கூடும். நீர் ஒராழ்ந்த பிளவுக்கு மேல் வளைந்ததொரு பாலத்தையும் அமைக்கக்கூடும் அல்லது எல்லைக்குட்பட்ட சமூகத்திற்குள் ஒரு ஒழுங்கு முறையையும் ஏற்படுத்தக் கூடும். ஆனால் இவை ஒழுங்கின்மையை வளர்க்கும்.

வெளி என்பது இவ்வறையின் நான்கு சுவர்களுக்கு வெளியில் மட்டும் இருப்பதன்று. இவ்வறை ஏற்படுத்தும் பரப்பும் ஒரு வெளி ஆகும். காண்பான் தானாகத் தன்னைச் சுற்றி ஒரு சூழலையும், கோளத்தையும் உருவாக்குகிறான். அதன் வழியே காட்சிப் பொருளையும் காண்கிறான் – அக்காட்சிப் பொருளும் தன்னைச் சுற்றி ஒரு சூழலை உண்டாக்கிக் கொள்கிறது.

காண்பான் மாலை விண்மீன்களை நோக்குகையில் அவனுடைய வெளி எல்லையுள்ளதே. ஒரு தொலைக் கண்ணாடி வழியே பல ஒளியாண்டுகளைப் பார்க்கக் கூடும்.

ஆனால் அவனே அவ்வெளியை உண்டாக்குவோன். ஆகவே அதுவும் முடிவுக்கு உட்பட்டதே. காண்பான், காட்சிப் பொருள் - இவற்றின் இடையே இருப்பது வெளி. அவ்விடைவெளியை நிரப்புவது காலம்.

இப்பருப்பொருளான வெளியைத் தவிர மனம் உண்டாக்கும் அளவில், நேற்று, இன்று, நாளை என்ற பிரிவில் எண்ணம் தன்னை மறைத்துக் கொள்கிறது. காண்பான் உள்ளவரை வெளி என்பது சிறைக்கு முன்னுள்ள முற்றமேயாகும் - சிறையிலோ விடுதலை கிடையாது.

''நீர் காண்பானற்ற ஒரு வெளியை எமக்குக் காண்பிக்க விரும்புகிறீரா? என்று கேட்க விரும்புகிறோம். அது முற்றிலும் நடைபெறாச் செயலாகும், அல்லது உம்முடைய கற்பனையுமாகலாம்.''

ஐயா! எவ்வளவு இன்பமானதாயினும் அலங்காரமான தாயினும், கட்டுப்பாடற்ற சுதந்திரம் சிறையில் கிடையாது. விடுதலையுடன் நாம் பேச்சு நடத்த விரும்பினால் அது நினைவு, அறிவு, துய்த்தல் இவற்றுள் அகப்படாதது. உம்மால் வரையறுக்கப்பட்ட ஒழுங்கின்மை, அடிமைத் தளை, அதன் கட்டுப்பாட்டுக்குட்பட்ட உழைப்பு இவற்றில் நீர் மகிழ்ச்சி கொண்ட போதிலும், சிறையின் சுவர்களை உடைத்தெறிவதே விடுதலையின் கோரிக்கையாகும்.

விடுதலை என்பது ஒன்றைச் சார்ந்ததன்று; ஒன்று விடுதலை; அன்றேல் அது இல்லை. இல்லையென்றால் குறுகிய வரையறை வாழ்க்கையை - அதனுடைய முரண்பாடுகளுடன், துன்பம், நோய், வலி இவற்றுடன் அங்குமிங்கும் சிற்சில மாறுதல்களைச் செய்து சரிகட்டியவாறு ஒப்புக் கொள்ளவேண்டும்.

விடுதலை அளவிடற்கரிய வெளி. வெளி குறையும் போது வன்மை உண்டாகிறது. இரை தேடும் விலங்கு, மற்றொரு பறவை தன் இடத்தையோ, தன் சூழலையோ

எடுத்துக் கொள்ளும் பொழுது அதற்காகப் போராடும். காவல், நீதி இவற்றின் கீழ் வன்மை சற்றுக் குறைவாக இருப்பினும், இதுவும் 'இரை தேடுபவனும், இரையாகும் அப்பறவையும் வரைக்குட்பட்ட இடத்தைக் கோருவது போன்றதே. இவ்விரண்டுமே அளவுக்குட்பட்டதாயினும் வன்மையே. மனிதனுக்கும் மனிதனுக்குமிடையே எல்லைக்குட்பட்ட வெளியிருக்கும் வரை வன்மையின் ஆதிக்கம் இருந்தே தீரும்.''

''ஐயா! மனிதன் தான் விளைவித்த கோளத்திற்குள் வாழும் வரை, எந்நாளும் உலகத்துடனும், தனக்குள்ளுமே வேறுபாடுடன் வாழவே செய்வான் என்றா கூறுகிறீர்?''

ஆமாம் ஐயா! ஆகவே இப்பொழுதான் நாம் விடுதலையின் மையக் கருத்தினுள் இறங்குகிறோம். சமூகத்தின் குறுகிய பண்பாட்டில் விடுதலை இல்லை. விடுதலை இல்லாதபோது ஒழுங்கின்மை நிலவுகிறது. இந்த ஒழுங்கின்மையில் வாழும் மனிதன், கொள்கைகளிலும் கோட்பாடுகளிலும் தான் கடவுள் என்றழைக்கும் சொல்லிலும் விடுதலையைத் தேடுகிறான். இந்தத் தப்பும் வழிகள் விடுதலையாகாது. இதுவும் மனிதனை மனிதனிடமிருந்து பிரிக்கும் சிறைக்கூடமேயாகும். அதற்கொரு முடிவு ஏற்படுத்திக் கொள்வும், தானே வரவழைத்துக் கொண்ட கட்டுப்பாடுகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, தான் ஏற்படுத்திய கட்டிடத்தை உடைத்தெறியவும், அதற்கு மேலும் பரந்து விரிந்தும் செல்லவும் எண்ணத்தினால் இயலுமா? முடியாததென்பது கண்கூடு. அதுவே பார்க்க வேண்டிய முதற் பொருளாகும். அறிவினால் தனக்கும் விடுதலைக்கும் பாலம் அமைக்க இயலாது. விருப்பு, வெறுப்பு, அச்சம், கவலை இவற்றோடு கூடிய காண்பானே எண்ணம் என்பதாகும். இவ்வாறாக எண்ணம் ஏற்படுத்தும் உருவமே தன் பிரிவு என்ற சூழலை உருவாக்குகிறது. ஆகவே, காண்பான் - காட்சிப் பொருள்

என்ற இடைவெளி. காண்பான் இந்த இடைவெளியைத் தன்னுடன் வைத்துக் கொண்டே, அதனுடன் தொடர்பு காணவும் முயல்கிறான். ஆகவே விளைவது கலக்கமும், வன்முறையும்.

இவை கற்பனையன்று. எத்தகைய கற்பனையும் உண்மையை அழிக்கும். விடுதலை எண்ணத்திற்கு அப்பாற்பட்டது. காண்பான் உருவாக்காத வெட்ட வெளியே விடுதலை. இவ்விடுதலையே தியானமாகும்.

மோனமற்று வெளியொன்றுமில்லை. காலம், எண்ணம் இவைகளால் விளைவிக்கப்படாத ஒன்றே மோனம். காலம் என்றும் விடுதலையைக் கொடுக்காது. நெஞ்சம், சொற்கள் என்ற திரையினால் மூடப்பெறாது இருக்கையிலேயே ஒழுக்கம் உண்டாக இயலும்.





## ஐரோப்பா - 3

**மோ**னமே தியானமுள்ள மனம். அது எண்ணத்தினால் ஏற்பாடு செய்யப்பட்ட மோனமன்று; அமைதியுள்ள மாலைப் பொழுதின் மோனமன்று; எண்ணம் தன் எல்லாத் தோற்றங்களையும் அதன் சொற்களையும், எல்லாக் காட்சிகளையும், முற்றிலும் ஒழிக்கும்பொழுது இருப்பது மோனம். தியானமுள்ள மனம் மெய்ந்நெறியுள்ள மனமாகும். கோவில், மாதாக்கோவில், ஓதுதல் இவற்றால் தீண்டப்பெறாத மெய்ந்நெறியுள்ள மனமே தியானமுள்ள மனம்.

மெய்ந்நெறியுள்ள மனம் என்பது அன்பின் மலர் வெடிப்பாகும். இத்தகைய அன்பு பிரிவு என்பதையறியாதது. அதற்குத் தொலைவும் அருகாமையே! ஒன்று, பல என்றபடியில்லாமல், எல்லாப் பிரிவுகளும் முடிவுற்ற ஓர் அன்பு நிலை. அது அழகைப் போன்றே சொற்களின் அளவிற்குட்படாதது. இம்மோனத்திலிருந்தே, தியான மனம் செயல்படும்.

முதல் நாள் மழை பெய்திருந்தது - சாயும் வானம் முகில்கள் நிறைந்ததாய் இருந்தது. தொலைவில் உள்ள குன்றுகள் பெருமகிழ்ச்சியுடைய மேகங்களால் சூழப்பட்டு, மிக்க ஒளியுடையதாய் இருந்தன. நாம் பார்த்துக் கொண்டிருக்கையில், அவை வெவ்வேறு உருவங்களை அடைந்தன.

மாலைப் பரிதியின் பொன்னொளிர் கதிர்கள் ஓரிரு மேகக் கூட்டத்தை தீண்டிய போதிலும், அம்மேக மலைகள் கருத்த

சைப்ரஸ் மரங்களைப் போன்றே ஊடுருவ முடியாததாக இருந்தன. அவற்றை நோக்குகையில் நாம் இயல்பாகவே மோனமானோம். விரிந்த வெளி, மலை மீது தன்னந்தனியாக மரமொன்று, தூரத்தே தெரியும் கோபுரம், சுற்றிலும் பேச்சுக்களின் ஒலி – இவையெல்லாம் அம்மோனத்தின் பகுதியாயின. மாலைப் பரிதியின் செவ்வானம், வரப்போகும் நாளின் அழகை முன்கூட்டியே அறிவித்தது. அழகு அங்கே இருந்தது. வானத்தில் ஒரு மேகமும் இல்லை – நல்ல நீல நிறம், மஞ்சள், வெண்ணிறப் பூக்களையுடைய மரம் – பின்புறத்தில் கருத்த சைப்ரஸ் வேலி, இளவேனிலின் மணம் மண்ணை நிரப்பியது. பனி படிந்த புல். மெள்ள மெள்ள இளவேனில் இருட்டிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தது.

நல்ல ஊதியமுள்ள தொழிலிலிருந்த தன் மகனைச் சில நாட்களுக்கு முன்பு தான் இழந்ததாகக் கூறினார் அவர். தன் மகன் பெரியதொரு கம்பெனியின் டைரக்டர் பதவியை அடைய இருந்ததாகவும் கூறினார். அந்த அதிர்ச்சி தாங்க முடியாத போதிலும், தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருப்பதாகவும் கூறினார். அவர் எளிதில் அழுபவர் அல்ல – கண்ணீர் சுலபமாக வெளிப்படாது. கடினமான உழைப்பு, உணர்வற்ற யந்திரம் போன்ற வாழ்க்கையின் மிக நுட்ப மனோதத்துவ பிரச்சனைகளும் அவரை அதிகமாகப் பாதிக்கவில்லை.

சற்று முன்னர் தன் மகனை இழந்த நிகழ்ச்சி, அவர் அறியாமலே அடைந்த அதிர்ச்சி. அவர் கூறினார், ''அது மிகத் துயரமான நிகழ்ச்சி'' என.

மனைவிக்கும் மற்ற குழந்தைகளுக்கும் இது தாங்க வொணா ஒரு துயரம், ''துயரத்திற்கு முடிவு காண்பது என்று நீர் உரைத்ததை நான் அவர்களுக்கு எவ்வாறு விவரிப்பேன்? நானோ இதைப் பற்றிப் படித்ததால் ஓரளவு புரிந்து கொள்ள முடியும். ஆனால், துயரிலேயே மூழ்கிப் போன அவர்களால் இது கூடுமா?''

ஒவ்வொரு வீட்டிலும், ஒவ்வொரு மூலையிலும் துயரம் இருக்கிறது. பல நிகழ்ச்சிகளாலும், விபத்துக்களாலும் மனிதனைத் துயரம் சூழ்ந்திருக்கிறது. துயரம் மனிதனை முடிவற்ற அலைகளைப் போன்று மேன்மேலும் வந்து மூழ்கடிக்கிறது. துயரத்தினால் மனம் வருந்தும்போது அது கசப்பையும், வாழ்க்கையையே வெறுக்குந்தன்மையையும் வளர்க்கிறது.

இத்துயரம் உம் மகனுக்காகவா அன்றி உமக்காகவா? ஏனெனில், தந்தை மகன் என்ற தொடர்ச்சி அறுந்து போனதாலா? தன்னிரங்கலினால் விளையும் துயரமா? உலக இயல்பில் ஒளி தரக் கூடிய மகனை இழந்த ஏமாற்றத்தினால் விளைந்த துயரமா?

வெளித்தோற்றத்தில் உறவு கொண்டாடியபோதிலும், இத்துயரம் தன்னிரங்கல், தன்னைப் பற்றிய கவலை, இவ்வாறகத் தன்னைத் தனிமைப்படுத்திக் கொள்ளும் செய்கையால் விளைந்ததானால் அது கட்டாயமாகத் துன்பத்தைக் கொடுக்கும். தன்னைப் பிரித்துக் கொள்ளும் இந்தத் தற்காப்பு செய்கையானது தன் முன்னேற்றத்திற்கான அவா, தன் சிறப்பை விழைதல், பிரிந்து வாழ்வது என்ற இவையாம். நாம் இவற்றைக் கவனிக்காமல் இருப்பினும், இவை தனிமையை அழைத்து வந்தே தீரும். தனிமை என்ற தவிப்பிலிருந்து கட்டாயமாகத் தப்பியோட பல வழிகளால் முயலுகிறோம். தனிமையின் துன்பமே தன்னிரங்கல். இதுவே துயரம் என்றும் கூறப்படுகிறது.

இதைத் தவிர அறிவின்மை என்னும் துயரமும் இருக்கிறது. உண்மையில் அறிவின்மை என்பது: புத்தக வழியான கல்வி கிடைக்கப்பெறாததினால் உண்டாகும் அறிவின்மையன்று; விஞ்ஞானத் தொழில், நுண்ணறிவு, புலமை இல்லாததால் உண்டாகும் அறிவின்மையுமன்று; அனுபவக் குறைவு என்ற அறிவின்மையுமன்று. உண்மையில் அறிவின்மை என்பது: 'காலம்' என்பதை

ஒப்புக்கொண்டு, அது விளைவிக்கும் படிப்படி முன்னேற்றம், 'இருப்பது' என்பதிலிருந்து 'இருக்கவேண்டும்' என்கிற அறிவின்மை; ஆதிக்கத்தையும், அதன் வன்முறைகளையும் ஒப்புக்கொள்ளும் அறிவின்மை; சமூகம் - அதன் ஏற்பாடுகளுக்கு இணைதல் என்ற ஆபத்தில் சிக்கிக் கொள்ளும் அறிவின்மை, அதன் விளைவாகத் துன்பமடையும் அறிவின்மை; நம் முழுமையான அமைப்பை நன்குணராத தால் உண்டாகும் அறிவின்மை என இவையேயாகும். இத்துயரத்தையே மனிதன் தான் இருக்குமிடமெல்லாம் பரப்புகிறான்.

ஆகவே, துயரம் என்று நாம் குறிப்பதைப் பற்றிய தெளிவு வேண்டும். ஒரு பொருளால் நமக்கு நன்மை ஏற்படும் என்ற நம்பிக்கையை இழத்தலும், காப்பாரற்ற நிலையும் - இடைவிடாது தற்காப்பைத் தேடியலைதலுமே துயரமாகும். நீர் எதில் சிக்குண்டு இருக்கிறீர்? இதைப் பற்றித் தெளிவு ஏற்படாதவரை துயரத்திற்கு முடிவு காணமுடியாது.

இத்தகைய தெளிவு, சொற்கள் தரும் விளக்கமும் அல்லது சாமர்த்யமான அறிவுத் திறமையின் ஆராய்ச்சியுமன்று. ஒரு மலரைத் தீண்டும்போது உண்டாகும் புலனுணர்வை எவ்வாறு விழிப்புடன் நோக்குகிறோமோ அவ்வாறே துயரத்தையும் தெளிவாகவும் விழிப்புணர்வுடனும் நோக்க வேண்டும்.

துயரத்தின் முழுப் பாதையை நன்கு புரிந்து கொள்ளாத வரை நீர் துயரத்திற்கு முற்றுப் புள்ளி வைக்க இயலுமா? அதற்கு மாறாக நீர் கோவில்களுக்குச் சென்றும், மதுவருந்தியும் தப்பித்துக் கொள்ளப் பார்க்கலாம். ஆனால், எல்லாத் தப்பியோடும் வழிகளும் அவை கடவுளாக இருப்பினும் சரி, அன்றி பாலுணர்வின் வழியாயினும் சரி, அவை துயரத்தை என்றும் துடைப்பதில்லை.

முதலில் துயரம் என்ற படத்தை அதன் சாலைகளுடன், திட்டவட்டமாக வரைந்து அதன் வழிகளை அமையுங்கள்.

இந்தப் படத்தைக் காலம் என்ற திரையால் மறைத்தால், அப்பொழுது காலம் துயரத்தையும், வன்முறையையும் மேலும் வலியுறுத்தும். இப்படத்தை ஒரு நொடியில் காணுங்கள். முழுமையாகவும் பிறகு நுணுக்கமாகவும் பாருங்கள். முதலில் நுணுக்கம் பிறகு முழுமை என்ற படி இல்லாமல் ஒரு நொடியில் முழுமையாகக் காணுங்கள். துயரத்தை முடிவு காணும் பொழுது காலமும் முடிவடைய வேண்டும்.

எண்ணத்தினால் துயரம் முடிவு அடையாது. காலம் நின்று போகையில் எண்ணத்தின் வழியான இத்துயரம் ஓய்ந்து போகும். எண்ணமும், காலமும் வகுக்கவும், பிரிக்கவும் செய்கின்றன. எண்ணமும் காலமும் அன்பு அன்று.

துயரத்தின் திட்டப் படத்தைக் காணுங்கள். ஆனால், எண்ணத்தின் கண்கொண்டு பார்க்காதீர். துயரத்தின் சலசலப்புகளையெல்லாம் முழுமையாகச் செவிகொடுத்துக் கேளுங்கள். துயரமும் நாமும் ஒன்று என்ற நிலையிலிருந்து நோக்குங்கள்! ஏனெனில், காண்பான், காட்சிப் பொருள் இவை இரண்டுமே நாம் என்றறிவீர்! அப்பொழுதுதான் துயரத்திற்குகோர் எல்லை காண முடியும். வேறு வழியொன்றுமில்லை.



## ஐரோப்பா - 4

தியானம் இறைஞ்சுதல் அன்று. தன்னிரங்கலிலிருந்து பிறப்பது வேண்டுதல், வணங்குதல் என்பவை. நாம் ஒரு சிக்கலில் அகப்பட்டுக் கொள்ளும் பொழுதும், துயரம் அடையும் பொழுதும் இறைஞ்சுகிறோம். ஆனால், இன்பமும் மகிழ்ச்சியும் உண்டாகும் பொழுது அத்தகைய வேண்டுதலை விழைவதில்லை. மனிதனின் உள்ளாழத்திலுள்ள இத்தன்னிரங்கலே பிரிவுக்குக் காரணமாகும். பிரிவுள்ள ஒரு பொருள் தான் பிரிந்து இருப்பதாக நினைக்கும்பொழுதும், பிரிவற்ற ஒன்றின் இணைப்பைத் தேடியலைகையிலும் மேன்மேலும் பிரிவும் துயரமும் உண்டாகின்றன. இந்தக் கலக்கத்தில் இருக்கும் பொழுது நாம் சுவர்க்கத்தை நோக்கியும் அல்லது கணவனிடமும் அன்றி மனத்திற்குகந்த ஒரு கடவுளிடமும் கதறியழுகிறோம். இந்த அழுகைக்கு மறு மொழியும் கிடைக்கலாம். ஆனால், அத்தகைய மறுமொழி, பிரிவு என்ற தன்னிரங்கலின் எதிரொலியேயாகும்.

திரும்பத் திரும்ப கூறும் சொற்களும், பிரார்த்தனைகளும் தன்மயக்கத்தையும், தன் சூழலையும், அழிவையுமே உண்டாக்கும். எண்ணத்தின் தனிப்படுத்திக் கொள்ளும் தன்மை, அறிவின் எல்லைக்குட்பட்டது. ஆகவே, வேண்டுதல் ஒன்றுக்கு கிடைக்கும் மறு மொழியும், முன்பே அறிந்ததின் பதிலேயாகும்.

தியானம் இதிலிருந்து மிகத் தொலைவில் உள்ளது. அதன் வெளியில் எண்ணம் தலை காட்டாது. அங்குப் பிரிவு

இல்லை. ஆகவே அடையாளங்கொண்டு அழைப்பதும் அங்கில்லை. தியானம் வெட்டவெளியில் உள்ளது. மறைவுக்கு அங்கு இடம் இல்லை. எல்லாப் பொருள்களும் திறந்தவெளியில்தான் தெளிவைப் பெறுகின்றன. அன்பின் அழகும் அதுவே.

இளவேனில் காலை. நீலவானில் சீவல் போன்று சிதறிய மேகங்கள் – மேற்கில் மெள்ள ஊர்ந்து கொண்டிருந்தன. சேவல் ஒன்று கூவ ஆரம்பித்தது. நெருக்கமான பட்டிணத்தில் அக்கூவல் விந்தையாக இருந்தது. அக்கூவல் சுமார் இரண்டு மணிக் கூறாக காலையின் வரவை முன்னெச்சரித்தது. மரங்கள் இலையற்று மொட்டையாகக் காணப்பட்டபோதிலும், மென்மையான துளிர் இலைகளை, காலை வானத்திற்கு எதிரே காண முடிந்தது.

மனத்தில் எண்ணம் ஒன்றும் பளிச்சிடாமல் நாம் மிக அமைதியாக இருக்கையில் மாதா கோவிலின் மணி ஓசையை அவ்வப்போது கேட்க முடிந்தது. அவ்வோசை வெகு தொலைவிலிருந்து வந்திருக்க வேண்டும். சேவலின் ஒரு கூவலுக்கும் மறு கூவலுக்குமுள்ள இடைவெளியில் உள்ள அமைதியில் மணியோசையின் அலைகள் நம்மை வந்தடைந்து அதற்கு மேலும் விரிந்து சென்றன. நாம் அதன் மீது ஏறிச் சென்று மனதிற்கெட்டா ஒரு தொலைவை யடைந்து நாமே மறைந்து போன உணர்வு. சேவலின் கூவலும் மணியின் ஓசையும் புதுமையாக இருந்தன. பட்டணத்தின் ஆரவாரம் தொடங்கவில்லை. அத்தெளிவான ஓசையைத் தடைப்படுத்த ஒன்றுமில்லை. நாம் அதைச் செவிக்கொண்டு கேட்கவில்லை. நெஞ்சத்தால் உணர்ந்தோம். மணி, சேவல் என்ற எண்ணத்தினால் கேட்கப்பட்டதன்று. தூய்மையான ஒலி மட்டுமே அது. மோனத்திலிருந்து விளைந்த அவ்வோசையை உள்ளம் தன்னுள்ளாக்கி, அதனோடு கூடவே முடிவற்றதிலிருந்து முடிவற்றதற்குச் சென்றது. இசையைப் போன்று ஏற்பாடு

செய்யப்பட்ட ஒலியன்று. இரண்டு சுரத்திற்குள்ள இடை வெளியுமன்று. பேச்சு நின்றவுடன் இருக்கும் அமைதியுமன்று. அவ்வொலிகள் மனத்தாலும் செவியாலும் கேட்கப்படுபவை. நாம் உள்ளம் கொண்டு கேட்கையில், அது உலகையே கவிழ்த்து மூடும். நம்முடைய கண்களும் தெளிவுறக் காணும்.

அவள் இளம்பெண்மணி, நேர்த்தியான தோற்றம், குட்டையான முடி, திறமைசாலி, ஆற்றல் மிகுந்தவள். அவள் கூறியதிலிருந்து தன்னை நன்கு அறிந்தவளாகக் காணப்பட்டாள். அவள் குழந்தைகள் உள்ளவள். சற்று ஆழ்ந்த கருத்துள்ளவளாயும், கற்பனை மிகுந்தவளாயும், ஆனால் கிழக்கத்திய ஆன்மீக வழிகளில் நம்பிக்கையிழந்தவளாகவும் இருந்தாள். (அதுவும் ஒரு நன்மையே!) தயக்கமின்றி எளிய பேச்சு.

''பல நாட்கள் முன்பு என் வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியால் நான் தற்கொலை செய்து கொண்டதாக எண்ணுகிறேன். அந்நிகழ்ச்சியால் என் வாழ்வு முடிவடைந்தது. வெளி உலகிற்காகவும், குழந்தைகளுக்காகவும் நான் வாழ்வது போலிருந்தாலும், உண்மையில் நான் வாழவில்லை.

தெரிந்தோ தெரியாமலோ மக்கள் எப்பொழுதம் தற்கொலை செய்து கொண்டுதானே இருக்கிறார்கள்? தற்கொலையின் தீவிரம் மிகையாகும் பொழுது மாடியின் சாளரத்திலிருந்து கீழே குதிப்பது போன்ற செயல்கள் நடைபெறுகின்றன. முதன் முதலில் நாம் ஒன்றைத் தவிர்க்கும் பொழுதும், அதன் விளைவாக மனக்கசப்பு அடையும் பொழுதும் தற்கொலையின் எண்ணம் தொடங்குகிறது. நமக்குக் கணவன், மனைவி, குழந்தைகள் இருந்தபொழுதிலும் நம்மைச் சுற்றி ஒரு சுவரை எழுப்பி அதன் பின்னால் நம்முடைய தனி வாழ்க்கையை வாழ்கிறோம். இப்பிரிவு படுத்தும் வாழ்க்கையே

தற்கொலை. இதுவே சமூகமும் மதமும் ஒப்புக்கொள்ளும் நெறி. அப்பிரிவின் நடைமுறைகள் போருக்கும் தன்னழிவிற்கும் அழைத்துச் செல்லும் ஒரு தொடர் சங்கிலி, பிரிவே தற்கொலை. அது சமூகத்துடையதாயினும், நாட்டினுடையதாயினும் - பிரிவு என்பது தற்கொலையே. தன் - மையம் கொண்ட வாழ்க்கையும், தன்னடையாளம் கொண்டதும், இணக்கம் ஏற்படுத்தும் தன்சூழல் என்ற துயரங் கொண்ட வாழ்க்கையுமே ஒவ்வொருவரும் வாழ விழைகின்றனர். நம்பிக்கைகளும் பிடிவாதக் கொள்கைகளும் உம்முடன் கை கோர்த்துக் கொண்டு செல்கையில் நிகழ்வது தற்கொலை. நீர் கூறிய நிகழ்ச்சிக்கு முன்னால் உம்முடைய வாழ்க்கையையும் அதன் ஓட்டத்தையும் பலவற்றிற்கும் எதிராக ஒரே பொருளில் ஈடுபடுத்தினீர்; அந்த ஒன்று முடிவடையும் பொழுதும், நீர் ஏற்படுத்திய கடவுள் என்ற பொருள் அழியும்பொழுதும் உம்முடைய வாழ்க்கையும் அதனுடன் அழிந்து போகிறது. வாழ்வதற்கென்று உம்மிடம் ஒன்றுமேயில்லை. நீர் ஸாமர்த்யமுள்ளவராயின் இல்வாழ்க்கைக்கு ஒரு பொருள் தருதல் கூடும். (திறமையுள்ளவர்களோ ஏற்கெனவே அவ்வாறு செய்திருக்கின்றனர்). அப்பொருளுக்கு நீரும் கட்டுப்படுகிறீர். அதுவே தற்கொலை. அவ்வாறு வாழ்க்கைக்குப் பொருள் கொடுத்து, அப்பொருள் கடவுளாயினும், பொதுவுடைமை என்ற பெயருடையதாயினும், அன்றி வேறு பெயர் கொண்டதாயினும், அதுவே தன்னழிவாகும்.

அம்மணீ! இதை இரக்கமற்றுக் கூறுவதாக நினைக்க வேண்டாம். நீர் உமக்கு வேண்டிய ஒன்று கிடைக்காமல் போனதாலும், அத்தகைய பொருள் உம்மிடமிருந்து பறிக்கப்பட்டதாலும் மற்றும் அடைக்கப்பட்ட கதவின் வழியே நுழைய விழைவதாலும், நீர், உம்மை இழந்துவிட்டீர். துயரமும், இன்பமும் நம்மைத் தம் எல்லைக்குள் கட்டுப்படுத்துகின்றன. ஆகவே ஒப்புக்

கொள்ளுதலும் ஒன்றை வற்புறுத்தி விழைதலும், பிரிவு என்ற இருட்டை உண்டாக்குகின்றன. நாம் வாழ்வதே இல்லை – ஆனால் எப்பொழுதும் தற்கொலை செய்து கொண்டிருக்கிறோம். தற்கொலையின் முடிவே வாழ்வின் தொடக்கம்.

''நீர் கூறுவதைப் புரிந்து கொள்கிறேன். நான் செய்தவற்றை நன்கு காண்கிறேன். ஆனால், இப்பொழுது செய்ய வேண்டியது என்ன? நெடுநாளைய இறப்பிலிருந்து மீண்டு வருவது எவ்வாறு?''

நீர் மீளவே முடியாது. அவ்வாறு மீண்டு வந்தாலும் நீர் நடப்பது பழைய பாதையில் தான். மேகங்களை காற்று உந்துவது போல துயரமும் உம்மைத் துரத்தும். உம்மைப் பிரித்துக் கொண்டு இன்பத்தை விழைந்து ரகசிய வாழ்க்கையை நாடுவது இறப்பு என்ற பிரிவை வரவேற்பதாகும். நீர் செய்ய வேண்டியது இதை நன்கு நோக்குவதே. பிரிவில் அன்பு இல்லை. அன்பு, அடையாளமிட்டு ஒன்றுடன் இணைவதில்லை. இன்பமும் அதை விழைவதும் பிரிவின் சுவர்களை ஏற்பாடு செய்வதாகும். எல்லா வாக்குறுதிகளும் ஓயும்பொழுது இறப்பு அங்கில்லை. தன்னையறிதல் என்பதே திறந்த வாயில்.



## ஐரோப்பா - 5

தியானம் என்பது சொல்லின் முற்றுப் புள்ளி. சொல் மோனத்தை உண்டாக்காது எனில் சொல் என்பது எண்ணமாகும். மோனத்திலிருந்து உண்டாகும் செயலானது சொல்லிலிருந்து வரும் செயலிலிருந்து முற்றிலும் வேறானது; மனத்தைச் சின்னங்களிலிருந்தும், உருவங்களிலிருந்தும் விடுவிப்பதே தியானம்.

அக்காலையில், உயரமான பாப்ளர் மரங்கள், புதிய துளிர் இலைகளோடு காற்றுடன் விளையாடின. இளவேனில் காலத்தினுடைய காலைப் பொழுது. பாதாம், செர்ரி, ஆப்பிள்களுடைய மலர்களினால் போர்வையிடப்பட்ட குன்றுகள். பார் முழுவதும் உயிர்த்துடிப்பு. சைப்ரஸ் மரங்கள் தமக்குரிய கம்பீரத்துடன் சற்று ஒதுங்கியவாறு நின்றன. ஆனால் மலர் நிறைந்த மரங்களின் கிளைகள் ஒன்றை ஒன்று தீண்டியவாறு இருந்தன. பாப்ளர்கள் அசைந்தாடும் நிழல்களை எங்கும் அவிழ்த்தன. சாலையின் ஓரத்தில் ஓடும் தண்ணீர், அது சிறிது நாளில் பழைய ஓடையாக மாறும்.

காற்றில் மணம் மிதந்தது. ஒவ்வொரு குன்றமும் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்டு ஒளிர்ந்தது. சில குன்றுகள் ஆலிவ், சைப்ரஸ் மரங்கள் சூழ்ந்த வீடுகளைக் கொண்டதாய் இருந்தன. இந்த மென்மையான குன்றுகளில் அந்தப் பாதை வளைந்து சென்றது.

பளிச்சென்ற அக்காலை, ஆழ்ந்த அழகுடையதாய் இருந்தது. வலிவுள்ள மோட்டார் காரும், இடத்திற்குப்

பொருந்தாமல் நெருடவில்லை. எங்கும் ஒழுக்கம் நிறைந்ததே போலத் தோன்றியது. ஆனால், அவ்வீடுகளுக்குள்ளோ ஒழுங்கீனம் - மனிதன் மனிதனை நோகச் செய்கிறான். குழந்தைகளின் அழுகை, சிரிப்பு, கும்மாளம்; கண்ணுக்குத் தெரியாவகையில் துன்பச் சங்கிலியின் பிணைப்பு வீட்டுக்கு வீடு இருந்தது. இளவேனில், இலையுதிர் காலம், பனி இவையாவும் இந்தச் சங்கிலியை அறுப்பதே இல்லை.

ஆனால், அக்காலையில் ஒரு புதிய பிறப்பு - அத்துளிர் இலைகள் பனியையும், வரப்போகும் இலையுதிர்வையும் அறியாதவை. ஆகவே, ஊறுபடுந்தன்மையுடையவை. எனவே கள்ளமற்றவை.

சாளரத்திலிருந்து பழைய கோபுரத்தையும், பன்னிற மணிகாட்டி மண்டபத்தையும் பார்க்கலாம். அதற்குள்ளே நம்பிக்கை, துயரம் இவற்றின் இருண்ட சின்னங்கள். அழகான அக்காலைப் பொழுது பறவைகள் குறைந்ததாய் இருந்தது. இங்குப் பறவைகளை வேட்டையாடுவார்கள். ஆகவே அப்பறவைகளின் பாட்டு, அமுங்கி அசையா நிலையை உடையதாய் இருந்தது.

அவர் ஒரு கலை ஓவியர். சில பொறியாளருக்குப் பாலம் அமைக்கும் திறமை இருப்பதைப் போல் தனக்கு ஓவியம் தீட்டுவதில் திறமை இருக்கிறது என்றார். நீண்ட தலை முடி, மென்மையான விரல்கள் - அவை கற்பனைத் திறனின் கனவுகளைத் தன்னுடைத்தாய் இருந்தன. அவர் கனவுகளிலிருந்து விடுபட்டு சிறிது பேசுவது, விவரிப்பது, பிறகு தான் வரைந்த கோட்டத்திற்குள் அடைந்து கொள்ளுவது - இவ்வாறான செய்கையுடையவர். அவருடைய ஓவியங்கள் நன்றாக விலை போவதாயும், பல 'தனி ஆள்' காட்சிகளை நிகழ்த்தியுள்ளதாகவும் கூறினார். அவருடைய குரலில் பெருமிதம் தொனித்தது.

பெரும்படைகள், தந்நலம் கொண்ட சுவர்களுக்குள்ளே - எஃகினாலும் கண்ணாடியாலும் செய்யப்பட்ட

அறைகளுக்குள் தொழிலதிபர்கள், கணவன் குழந்தை இவர்களின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் மனைவி, இத்தகையவர் உலகில் இருக்கின்றனர். பொருட்காட்சி சாலையின் பாதுகாப்பாளர், ஆர்க்கெஸ்ட்ரா நடத்துபவர் இவ்வாறு ஒவ்வொருவருமே துண்டு துண்டான வாழ்க்கையை வாழ்கின்றனர். இந்த ஒவ்வொரு துண்டும், தனிச் சிறந்ததாகவும், ஒன்றுக்கொன்று தொடர்பற்றதாகவும் மற்றவைகளிலிருந்து முரண்பட்டதாகவும், தமக்கென்ற தனித்தனி மேன்மைகளையுடையதாகவும், தனிப்பட்ட சமூகக் கண்ணியங்களையுடையதாகவும், தமக்கே உரிய மதக்குருக்களையுடையதாகவும் இருக்கிறது. மதச் சார்புள்ள குழுவுக்கும், தொழிற்சாலைக்கும் தொடர்பு ஒன்றும் இல்லை. அதே போன்று தொழிற்சாலைக்கும் ஓவியருக்கும் தொடர்பு இல்லை. தளபதிக்கும் படைவீரருக்கும் தொடர்பு இல்லை. அவ்வாறே படித்தவர்க்கும் பாமரருக்கும். சமூகம் இவ்வித துண்டுகளால் ஆக்கப்பெற்றது. பிறருக்கு நன்மை செய்வோரும், சீர்திருத்தவாதியும் உடைந்த இத்துண்டுகளை ஒன்றிணைக்க முயல்கின்றனர். இந்தப் பிரிவுள்ள உடைந்த, தனி சிறப்புப்படுத்தப்பட்ட துண்டுகளோடும் மனிதன் தன்னுடைய கவலைகளோடும், குற்றமுள்ள நெஞ்சுடனும், அச்சத்துடனும் வாழ்கிறான். இதில் நாம் அனைவரும் உறவினர். தனித் திறமை என்ற சிறப்புப் பிரிவுகளில் உறவு இல்லை.

யாவருக்குமுள்ள பேராசை, வெறுப்பு, ஆதிக்கம் இவற்றில் நாம் உறவு கொண்டவர். இந்த வன்முறையை நாம் வாழும் சமூகம், நம்முடைய பண்பாடு இவற்றை ஏற்படுத்துகிறது. மனமும் உள்ளமும், கடவுள் - வெறுப்பு, அன்பு - வன்முறை என்ற பிரிவுகளை ஏற்படுத்துகின்றன. இந்த இரட்டைகளில், மனிதனின் முழுமையான பண்பாடு சுருங்குகிறது, விரிகிறது.

மனிதனின் ஒற்றுமை, மனம் ஏற்படுத்திய நிறுவனக் கூடங்களில் இல்லை. ஒத்துழைப்பு அறிவின் தன்மையன்று.

அன்புக்கும் வெறுப்புக்கும் ஒற்றுமை இருக்க முடியாது. ஆனால், மனமோ இத்தகைய ஒற்றுமையைக் கண்டுபிடித்து அதை நிலை நாட்ட முயல்கிறது. மனத்தின் வயல் பரப்பிற்கு வெளியேதான் ஒருமைப்பாடு இருக்கிறது. எண்ணம் அதை அடைய முடியாது.

எண்ணமே வன்முறை, போட்டி, போர் என்ற பண்பாட்டை ஏற்பாடு செய்திருந்த போதிலும் அவ்வெண்ணமே அமைதியையும் ஒழுங்கையும் வேண்டி விழைகிறது. எண்ணம் எவ்வளவு முயன்றாலும் அமைதி, ஒழுங்கு இவற்றைக் காண முடியாது. அன்பு நிலவ எண்ணம் முடிவடைதல் வேண்டும்.





## ஐரோப்பா - 6

அறிந்தவற்றிலிருந்து மனம் தன்னை விடுவித்துக் கொள்வதே தியானம். இறைஞ்சுதல் என்பது அறிந்ததிலிருந்து அறிந்தவற்றிற்கே தாவும். அது பயன்களைத் தரவும் கூடும். இருப்பினும், அது அறிவின் பரப்பிலேயே உள்ளது. அறிந்தது என்பது கலக்கம், துன்பம், முரண்பாடு இவையாகும். மனம் சேர்த்து வைத்த எல்லாவற்றையும் முழுமையாக ஒழித்தலே தியானம். 'அறிந்தது' என்பது காண்பானாகும். காண்பானின் காட்சியும் அவற்றின் வழியே! தோற்றம் என்பது இறந்த காலத்தினுடையது. இறந்த காலத்தின் முடிவே தியானம்.

அப்பெரிய அறை தோட்டத்தை நோக்கி இருந்தது. பக்கத்தில் ஸைப்ரஸ் வேலி; அதற்குமப்பால் சிவந்த கூரையுள்ள மடம் ஒன்று. வைகறையில், சூரியன் உதயமாவதற்கு முன்பே, விளக்கொளியில் அங்குமிங்கும் போய் வரும் துறவிகளைக் காணலாம், மிகக் குளிர்ந்த காலை. எல்லா வீடுகளையும் மற்றுமுள்ள மரங்களையெல்லாம் காட்டிலும் உயரமான அந்த யூகாலிப்டஸ் மரம் வீசும் வாடைக் காற்றில் தன் விருப்பத்திற்கு எதிராக அசைந்தது. கடலிலிருந்து வீசும் காற்று கடுமையானதன்று – அதுவே அம்மரத்திற்கு உகந்தது; அப்பொழுது அம்மரம் அழகின் மென்மையான அசைவுகளில் இன்பம் கொண்டது. விடியற்காலையில் அம்மரம் அங்கே இருந்தது. அந்திமயங்கும் நேரத்தில் மாலையின் ஒளியைத் தன்னிடம் கொண்டு அங்கே

இருந்தது. ஆக எவ்வாறோ இயற்கையின் ஐயமற்றத் தன்மையைத் தெரிவித்தது. சிறிய செடிகள், புதர்கள் சுற்றிலுமுள்ள மரங்களுக்கெல்லாம் அது ஓர் உறுதி மொழியாக நின்றது. அது மிகப் பழமையான மரமாக இருக்க வேண்டும். ஆனால், மனிதன் அதை நோக்குவது இல்லை. ஏனெனில் மனிதன் தன் தேவைக்கேற்ப அதை வெட்டி வீழ்த்தி வீடு கட்டுகிறான். அதன் இழப்பைப் பற்றி ஓர் உணர்வும் அவனிடம் இல்லை. இந்நாட்டில் மரங்களுக்கு சிறப்பு கிடையாது. இயற்கைக்கும் வாழ்க்கையில் இடம் இல்லை - அது ஒரு சிறிய அலங்காரமாக கருதப்படுகிறது. பூங்காக்களைக் கொண்ட வியக்கத்தக்க அப்பங்களாக்களின் கட்டிட வளைவுகளை அழகுபடுத்தும் வகையில் மரங்கள் நடப்பற்றிருந்தன. ஆனால், இந்த யூகாலிப்டஸ் மரம் எந்த வீட்டின் அலங்காரத்திற்கும் உதவுவதாக இல்லை. அம்மரம் மெச்சத் தகுந்த விதத்தில் அமைதியாகவும், மௌனம் நிறைந்த ஓட்டத்தின் பிரதிநிதியாகவும் தன்னந்தனியாக நின்றிருந்தது; தோட்டத்தோடு கூடிய அந்த மடமும், பசுமை நிறைந்த முற்றத்தையுடைய அவ்வறையும் யூகாலிப்டஸ் மரத்தின் நிழலடியில் இருந்தன. பல ஆண்டுகளாக தன் கண்ணியம் தவறாமல் அம்மரம் அங்கே இருந்தது.

அவ்வறையில் பல மனிதர்கள் இருந்தனர். சில நாள் முன்பாக தொடங்கிய பேச்சுவார்த்தையைப் பற்றி மீண்டும் பேச அங்கே கூடினர். பலர் இளைஞர்கள். நீண்ட முடியுடையவர்கள், தாடி வைத்திருப்பவர்கள், இறுக்கமான கால் சட்டை, குட்டைப் பாவாடை, வண்ணம் பூசிய உதடுகள், வாரிக்குவித்த தலையலங்காரம் என்று பல மாதிரியாக.

பேச்சு எளிதாக ஆரம்பித்தது; இப்பேச்சு எங்கே போய் முடியும் என்று தெரியாததால் சற்றுத் தயக்கத்துடன் இருந்தனர். ''எம்மால் சமூகம் அமைத்த நிறுவன

கட்டுப்பாட்டின் வழியைப் பின்பற்ற இயலாது.'' இன்னொருவர் கூறினார்: ''ஆனால் நாம் அதில் சிக்குண்டு இருக்கிறோம். எமக்கும் அந்த பண்டைய தலைமுறைக்கும், அவர்களுடைய செயல்களுக்கும் உள்ள உறவு என்ன?''

எதிர்ப்பு என்பது மறுமொழியாகாது இல்லையா? எதிர்ப்பு என்பது ஒருவித கலகம் போன்றது, வரையறுபாடு என்ற மறுமொழியை அது கூவியழைக்கும். ஒவ்வொரு தலை முறையும், அதற்கு முன்னுள்ள தலைமுறையின் வரைக் கோட்டுக்குள் கட்டுண்டு கிடக்கிறது, அதை எதிர்ப்பதால் மாத்திரம் மனதை விடுவிக்க முடியாது. எவ்வித கீழ்ப்படிதலும் ஒருவித எதிர்ப்பை உள்ளடக்கியது. ஆகவே வன்முறையை உண்டாக்கும் மாணாக்கரிடையே உள்ள வன்முறை அல்லது பட்டணத்தில் ஏற்படும் கலவரம், போர், அவை நம்மிலிருந்து எவ்வளவுத் தொலைவில் இருந்தாலும் அன்றி நமக்குள்ளேயே இருந்தாலும் - வன்முறை எவ்வழியிலும் தெளிவைத் தராது.

''ஆனால், நாம் வாழும் சமூகத்தில் செய்ய வேண்டியது என்ன?''

நீர் சீர்திருத்தவாதியாக இருந்தால், என்றும் இழிவை நோக்கி ஓடும் சமூகத்தை ஒட்டு போட்டு சேர்ப்பவராக இருப்பீர். போரையும், பிரிவையும், பகுதிகளையும் விளைவிக்கும் சமூகத்தை காப்பாற்ற முற்படுவீர். ம்னிதனின் அடிப்படையான மாற்றத்திற்கு சீர்திருத்தவாதி ஒரு தடங்கலாகும். எல்லா இனத்திற்கும், எல்லா மதங்களுக்கும், சமூக நெறிகளுக்குமே நாம் அந்நியராய் இருத்தல் வேண்டும். இல்லாவிடில், நீர் அந்த பண்டை கோலத்திலேயே, அதைச் சிறிது மாற்றியமைத்து, பிறகு அதில் அகப்பட்டுக் கொள்வீர்.

நீர் பொறாமை, திறன், வலிமையை உந்தும் எண்ணங்கள் இவற்றைப் போற்றி வணங்குதல், இவற்றிலிருந்தெல்லாம் விலகினால் ஒழிய அந்நியராய் இருத்தல் முடியாது.

முதலில், மனோதத்துவ முறையில் அந்நியராய் இருப்பதற்கு, நம்மை நன்கு அறிந்து கொள்ள வேண்டும். அதாவது, நாம் நம் சூழ்நிலையின் ஒரு பகுதியே என்றும் நம்மால் ஏற்பாடு செய்யப்பட்ட சமூகம் என்ற கட்டிடத்தின் ஒரு பகுதியே நாம் என்றும் அறிய வேண்டும். உண்மையில், பல்லாயிரம் ஆண்டுகளாலும், பற்பல தலைமுறைகளாலும் வளர்க்கப்பட்டதே இன்றைய 'நாம்' என்ற நிலை என்பதையும் முழுமையாக அறிந்தால்தான் மனோதத்துவ முறையிலும் அந்நியராக இருத்தல் கூடும். உம்மை நீர் அறிவதாலேயே உம்முடைய பண்டைத் தலைமுறை களுடன் உறவு கொண்டாடுவீர்.

''கத்தோலிக்க மதத்தினன் என்ற இப்பாரமான வரையறு பாட்டில் கட்டுண்ட என்னை, எவ்வாறு விடுவித்துக் கொள்ள முடியும்? எனக்குள் இது நன்றாக திணிக்கப்பட்டுள்ளது. என் நினைவுக் கூடம் முழுவதும் இது ஆழமாகப் பதிக்கப் பெற்றுள்ளதே?''

நூறு, இருநூறு அன்றி ஐயாயிரம் ஆண்டுகளாக வெறும் சொற்களால் உருவாக்கிய கத்தோலிக்கர், ஹிந்து, முஸ்லிம் என்ற பிரசாரம் உள்ளாழ் எண்ணக் கூடத்தின் ஒரு பகுதியேயாகும். நாம் உட்கொள்ளும் உணவினாலும், பொருளாதார அழுத்தங்களினாலும், பண்பாடு, நாம் வாழும் சமூகம் இவற்றாலும் நாம் வரையறுக்கப்படுகிறோம். நாமே அந்தப் பண்பாடு; நாமே அந்த சமூகம். அதை எதிர்த்து வெறுப்படைவது நம்மையே எதிர்த்துக் கொள்வதாகும். நாம் யார் என்று தெரிந்து கொள்ளாமல், நம்மையே எதிர்த்துப் போராடுவது முற்றிலும் வீண் செயலே! நிந்தனையொன்றும் செய்யாமல் நீர் யார் என்ற விழிப்புணர்வுடன் உம்மை நோக்குகையில், அவ்விழிப் புணர்வே செயல்படத் தொடங்கும். அச்செய்கையானது சீர்திருத்தவாதியின் செயலிலிருந்தும், புரட்சியாளரின் செயலிலிருந்தும் முற்றிலும் வேறானது.

''ஐயா! ஆனால், நம் உள்ளாழ் நினைவுக் கூடமானது இனம், பரம்பரைகளின் சேர்க்கை என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுவதை நன்கு புரிந்து கொள்ள வேண்டும்.''

உள்ளாழ் நினைவுக்கூடத்திற்கு ஏன் ஒரு முக்கியத்துவம் கொடுக்கிறீர் என்பது எனக்குப் புரியவில்லை. உள்ளாழ் நினைவுக்கூடமும், வெளி நினைவுக்கூடத்தைப் போன்றே அற்பமானது; போலியானது. அதற்கு முக்கியத்துவம் தருவது அதை மேலும் வலுவடையச் செய்யும். உண்மை மதிப்பை காணும்பொழுது, இலையுதிர்க் காலத்தின் பழுத்த இலை போன்று, எளிதாக நழுவி விழும். சில பொருள் களுக்கு சிறப்பையளித்து, அதை நிறுத்தி வைத்தும், மற்ற வற்றைத் தேவையற்றதாக ஒதுக்கித் தள்ளவும் செய்கிறோம். போர் என்பது வெளியளவில் சில மேம்பாடுகளை செய்யக்கூடும். ஆனால், போர் தன் வரையில் மனிதனுக்கு பெருங்கேட்டையே விளைவிக்கும். அறிவு நம் மானிடச் சிக்கல் களைத் தீர்க்காது. எண்ணம் பலவகை வழிகளால் நம் துன்பத்தையும், கவலைகளையும் தீர்த்து அதற்கு மேலும் முடிவு காண முயன்றிருக்கிறது. எண்ணம் மாதாக் கோவில்களையும், மீட்பவர்களையும், குருமார்களையும் உண்டாக்கி இருக்கிறது. எண்ணம் நாட்டுரிமைகளை ஏற்படுத்தியிருக்கிறது. நாட்டில் பல இனத்தாரை ஏற்பாடு செய்து, வகுப்புணர்ச்சியை உண்டாக்கி, ஒருவருடன் ஒருவர் சண்டையிடவும் செய்கிறது. மனிதனை மனிதனின்று பிரித்து, அராஜகத்தையும் பெருந்துயரையும் உண்டாக்கி, பிறகு மக்களை ஒன்றிணைக்க ஒரு அமைப்பையும் கண்டுபிடிக்க விழைகிறது. எண்ணம் செய்யும் எக்காரியமுமே தடுக்க முடியாவகையில் ஆபத்தையும் கவலையையும் உண்டாக்கும். ஒருவனை இத்தாலியன், இந்தியன் அல்லது அமெரிக்கன் என்றழைப்பதே அறிவிழந்த செய்கையாம். இதுவும் எண்ணத்தின் செயலே!

''ஆனால், அன்பு இவற்றிற்கெல்லாம் மறுமொழி தானே?''

மறுபடியும் நீர் வழி தப்புகிறீர்! பொறாமை, முன்னேற்றத்திற்கான அவா, இவற்றிலிருந்து விடபட்டவரா நீர்? அல்லது எண்ணம் 'அன்பு' என்ற சொல்லுக்கு வழங்கியுள்ள பொருளைக் கொண்டு வினவும் வெறும் கேள்வியா? எண்ணம் கொடுத்த பொருளானால், அது அன்பு அல்ல. அன்பு என்ற சொல் அன்பு அல்ல. நீர் அதற்கு எவ்வகையில் பொருள் கொடுப்பினும் சரி! எண்ணம் இறந்த காலத்தில் இருப்பது. நினைவும், அனுபவமும், அறிவு என்ற தேக்கமும், எவ்வித சூளுரைக்கு மறுமொழி தருவதும் எண்ணம் ஆகும். ஆக இந்த மறுமொழி பற்றாக்குறை யுடையது. எனவே முரண்பாடுடையது. எண்ணம் இறந்த காலமே! எந்நாளும் புதியதன்று. தற்காலத்திய கலையும் எண்ணத்தின் மறுமொழியே - புத்திக் கூர்மையின் மறுமொழியே, புதியது எனப் பாசாங்கு செய்த போதிலும் - இந்தக் குன்றுகளைப் போன்று தொன்மையானது. ஆனால் அவற்றின் அழகையுடையதன்று. புதுமை பிறக்க வேண்டுமானால், எண்ணத்தின் முழு ஏற்பாடுகளை அதாவது அன்பு, கடவுள், பொதுவுடைமைக் கொள்கை என்ற இவை யாவற்றையுமே புறக்கணிக்க வேண்டும். புதியது பழைய கோலத்துடன் இணையாது. நீர் இப்பழைய கோலத்தை முழுமையாக மறுக்க அஞ்சுகிறீர்.

''ஆமாம் ஐயா, அஞ்சுகிறோம். இதை மறுப்பதால் மீதம் உள்ளது என்ன? அவ்வெற்றிடத்தை எதை வைத்து நிரப்புவோம்?''

இக்கேள்வியே எண்ணத்தின் விளைவு. எண்ணம் இந்த அபாயத்தைக் கண்டு அஞ்சுகிறது. எனவே இவ்வெற்றி டத்தை நிரப்பியே ஆக வேண்டும், என்ற உறுதிமொழியை வேண்டுகிறது. ஆகவே மறுபடியும் எண்ணத்தின் வலையில் அகப்பட்டுக் கொண்டீர். உண்மையாகவே, சொற்களாலும், அறிவுக் கூர்மையாலும் இல்லாமல், எண்ணத்தின் முழுமையான கட்டிடத்தை உடைத்தால், ஒருக்கால் நீர் புதியதை - புதிய வாழ்க்கை, புதிய நோக்கு, புதிய செய்கை

இவற்றைக் காண்பீர். மறுப்பது என்பது மிக உறுதியான செய்கை. உண்மை என்ன என்பதை அறியாதபோதும் பொய்யை மறுக்க வேண்டும். பொருளின் மீது மேலெழுந்தவாரியாக உண்மை போல் தெரிவதை மறுத்தலும், பொய்யைப் பொய்யென்று தெளிந்து அதை மறுப்பதும் எண்ணத்திலிருந்து விடுபட்ட மனிதனின் உடனடிச் செய்கையாகும். இம்மலரை, எண்ணம் ஏற்படுத்திய 'மலர்' என்ற உருவத்தைக் கொண்டு பார்ப்பதும், உருவமின்றி அதைப் பார்ப்பதும் வெவ்வேறானது. காண்பானுக்கும் மலருக்கும் உள்ள உறவு என்பது: காண்பானுக்கு காட்சிப் பொருள் மீது முன்கூட்டியே உள்ள தோற்றமே ஆகும். ஆகவே, இவற்றினிடையே உள்ள தொலைவும் மிகையாகிறது.

தோற்றம் இல்லையெனில் காலத்தின் இடைவெளிக்கு ஓய்வு.



## ஐரோப்பா - 7

தியானம் என்றும் புதுமையானது. சென்ற காலத்தின் தீண்டுதல் இல்லாதது. ஆகவே தொடர்ச்சியுமற்றது. புதுமை என்ற சொல் முன்பின் காணாத ஒரு புத்துணர்வின் தன்மையை நமக்கு அளிப்பதில்லை. மெழுகுவத்தியின் சுடரை அணைத்து பிறகு அதை ஏற்றுவது போன்றது. அதே மெழுகுவத்தியானாலும் மெழுகுவத்தியின் புதிய சுடர் முன்பு எரிந்து போன சுடரன்று. எண்ணம் தியானத்திற்கு வண்ணமளித்து உருவங்களையமைத்து அதற்கொரு பயனும் உண்டாக்கி, தொடர்ச்சியைத் தருகிறது. எண்ணம் அளிக்கும் பொருளும் பயனும், தியானத்தைக் காலம் பிணைக்கும் பிடிப்புக்குள்ளாக்குகிறது. எண்ணம் தீண்டாத தியானம் தன்னுடையதான ஓட்டத்தையுடையது, காலத்தினால் ஏற்பட்ட ஓட்டமன்று. காலம் புதுமை, பழைமை இவ்விரண்டையுமே நென்னெல் என்ற வேர்களிலிருந்து நாளை என்பதற்கு ஓர் ஓடையாக மாற்றி புதிய பொருளைத் தருகிறது. தியானம் என்பது முற்றிலும் வேறான மலர்ச்சி. நேற்றைய அனுபவத்தின் விளைவு அன்று. ஆகவே காலத்தில் வேரூன்றாதது. அதன் தொடர்ச்சி காலமற்றது. தியானத்தைப் பற்றிப் பேசுகையில் தொடர்ச்சி என்ற சொல்லைக் கையாளுவது தவறு. ஏனெனில், நேற்று என்பது இன்றைய நடப்பில் இல்லை. இன்றைய தியானம், புதுமையான ஒரு விழிப்புணர்வு, நன்மை எனும் அழகின் மலர்ச்சியே அது.

நகரின் பஸ், லாரி, கார் – போக்குவரத்து நெரிசல்களிலும், குறுகிய தெருக்களின் சந்தடிகளூடும் அந்தக்கார் மெள்ளச் சென்றது. எண்ணற்ற குடும்பங்கள் நிறைந்த பல அடுக்கு

மாடிகள், கணக்கில்லாக் கடைக் கண்ணிகள் என்று அந்நகரம் நாட்டுப் புறங்களையெல்லாம் ஆக்ரமித்து எல்லாத் திசைகளிலும் பரவியது. ஒருவாறாக நாட்டுப் புறத்தையும் அதன் பரந்த கோதுமை வயல்களையும் கடுகுப் பூவின் மஞ்சள் பூசிய பாத்திகளையும் அடைந்தோம். அந்த கரிய பச்சைக்கும் பசு மஞ்சளுக்குமுள்ள வேற்றுமை, நகர்ப்புறத்தின் சந்தடிக்கும், நாட்டுப் புறத்தின் அமைதிக்குமுள்ள வேற்றுமைக்கு ஒப்பாக இருந்தது. வடக்கு நோக்கிச் செல்லும் தார்ச் சாலையில் சென்றோம். அப்பாதை மேலும் கீழுமாகச் சென்றது. சுற்றிலும் மரங்கள், ஓடைகள், அழகிய நீல வானம்.

இளவேனிற்காலை. சிறிய காவுகளில் நீலமணிப்பூக் குவியல்கள்; அதனருகில் தொடுவானம் வரை கடுகின் மஞ்சள் நிறப் பூக்கள், கண்ணுக்கெட்டியவரை பசுமையான கோதுமைப் பயிர்கள். அச்சாலை நாடு நகரங்களைக் கடந்து சென்றது. பக்கத்திலிருந்த தெரு ஒன்று அழகான சிறிய காட்டிற்கு அழைத்துச் சென்றது. புதிய துளிர் இலைகளால் நிறைந்த காடு, ஈர மண்ணின் மணம் எங்கும் நிறைந்திருந்தது. இளவேனிலின் சிறப்புத் தன்மையும், வாழ்வின் புத்துயிர்த் தன்மையும் அங்கே இருந்தன. மண்ணின் இப்பகுதியைப் பார்க்கையில், மரங்களையும் பசுந்துளிர் இலைகளையும் நோக்குகையில், நாம் இயற்கையோடு ஒன்றி இருந்தோம். மிகையானதும், கற்பனைத் திறனுடையதும் அன்று அவ்வுணர்வு. நீல வானம் – பரந்து விரிந்த மண். ஆனால், நாம் இவையாவுமாகவே இருந்தோம்.

துளிர் இலைகளையுடைய 'பீச்' மரங்களை இருமருங்கிலும் கொண்ட சாலையுடைய பழைய வீடு. அம்மரங்களின் வழியாக நீல வானை நோக்கினோம். அழகிய காலை, தாமிர 'பீச்' மரம் இளமையானதாயினும் நெடிதுயர்ந்திருந்தது.

பருமனான உடம்பு, பெரிய சரீரம், பெரிய கைகள் நாற்காலியை நிறைத்து அமர்ந்திருந்தார். கருணையோடும் சிரிப்புடனும் கூடிய முகம். நாம் சிரிப்பது என்பது எத்தனை அரிது! மாறுதலற்ற அன்றாட வாழ்க்கையின் வேலை முறைகளினாலும், கவலை கூடிய வாழ்க்கையாலும், நம்முடைய உள்ளம் கொடுமைப்படுத்தப்பட்டு மழுங்கிப் போகிறது. கேலி அல்லது ஹாஸ்ய துணுக்குகளும் சிரிப்பை மூட்டக் கூடிய சொற்களுமே நம்மைச் சிரிக்க வைக்கின்றன. ஆனால், இயற்கையாய் நம்மிடம் சிரிப்பு இல்லை. பொதுவாக மனக் கசப்பே மனிதனுக்குக் கிடைக்கும் பழுத்த பழம். ஓடும் நீருடன் ஒன்றி நாம் என்றும் சிரிப்பதில்லை; நம்முடைய கண்களின் ஒளி நாளுக்குநாள் மங்கிக் கொண்டே வருகிறது. நம் வாழ்க்கையோ எண்ணம் பயிர் செய்யும் நம்பிக்கை, இன்பம், இவை தரும் உறுதிமொழி இவற்றுடன் வேதனையையும் நம்பிக்கையின்மையையும் கொண்டு வண்ணம் அடைகிறது.

மௌனம் எவ்வகையில் பிறந்தது, அதை ஒப்புக் கொள்ளல் என்ற ஒரு விசித்திரமான வாழ்க்கைத் தத்துவத்தில் அவர் அக்கறை உள்ளவர். அம்மோனத்தை அவர் என்றும் அடைந்ததில்லை. மோனத்தை, வெண்ணெய் நெய் வாங்குவதைப் போன்று வாங்க முடியாது. அழகான செடியைப் போன்று பயிர் செய்யவும் முடியாது. அதை உள்ளம், மனம் இவற்றின் செயல்களால் வரவழைக்கவும் இயலாது. இசை விளைவிக்கும் மௌனம், இசையாலேயே தூண்டப்பட்டு அதன் பயனாக விளைந்த ஒன்று. மௌனம் துய்க்கப்படும் பொருளன்று; முடிவடைந்த பின்னரே அதை அறிய முடியும்.

சிலசமயம் ஆற்றங்கரை மீது அமர்ந்து தண்ணீரை நோக்குங்கள். அந்நீரையும் அதன் மீது படிந்த ஒளியையும், தெளிவையும், ஓடையின் ஆழத்தையும் கண்டும் மயங்கிவிடாதீர். எண்ணத்தின் ஓட்டமற்று அதை

நோக்குங்கள். உம்மைச் சுற்றியும், உம்முள்ளும், ஆடாமல் அசையாமல் இருக்கும் மரங்களிலும், மௌனம் சூழ்ந்திருக்கும். அதை நீர் வீட்டிற்கு அழைத்துச் செல்லவும் முடியாது. உம்முடைய மனதிலும் அல்லது உள்ளங் கையிலும் பிடித்து வைத்து ஏதோ பெரிய பதவியொன்றை அடைந்ததாக எண்ணவும் முடியாது. அவ்வாறு உம்மிடம் இருக்குமானால் – அப்பொழுது அது மௌனமன்று; வெறும் நினைவாகவும், கற்பனையாகவும், அன்றாட வாழ்க்கை யிலிருந்து தப்பிக்க மனவெழுச்சியுடன் கூடிய வழியாகவுந்தான் இருக்க முடியும்.

அனைத்தின் இருப்பும் மோனத்தில்தான். காலையில் நீங்கள் கேட்ட இசை மோனத்திலிருந்தே உம்மை வந்தடைந்தது. நீர் மோனமாக இருந்ததினாலேயே அதைக் கேட்கவும் செய்தீர். அந்த இசையும் உம்மைத் தாவி மௌனத்தையடைந்தது.

நாம் மௌனத்திற்கு செவி சாய்ப்பதில்லை. ஏனெனில், நம் செவிகள் மனத்தின் வளவளப் பேச்சுகளால் நிரம்பியுள்ளன. மோனமில்லாது நீர் அன்புடன் நேசிக்கை யில், எண்ணம் அதை சமூகத்தின் ஒரு விளையாட்டுப் பொருளாக்குகிறது. பண்பாடு, பொறாமை இவையே சமூகத்தின் கடவுள்கள். இவை மனத்தினாலும் கைகளாலும் ஆக்கப்பட்டவை. நீர் இருக்குமிடத்திலே மௌனம் இருக்கிறது, உம்முள்ளும் உமது பக்கத்திலுமே இருக்கிறது.



## ஐரோப்பா - 8

அனைத்துச் சக்திகளும் ஒருமிக்கக் கூடுவதே தியானம். அதைச் சிறுகச் சிறுகச் சேமிப்பதும், ஒன்றை மறுத்து, மற்றொன்றைத் துறப்பது என்பதும், ஒன்றைப் பிடித்து வைத்துக் கொள்ளுவது, மற்றொன்றைத் தழுவிக் கொள்ளுவது என்ற இத்தகைய செய்கைகளால் தியானத்தைத் திரட்ட முடியாது. தேர்தல் ஒன்றுமில்லாமல் எல்லா வீண் சக்திகளை முற்றிலும் மறுப்பதே தியானம். கலக்கத்திலிருந்து விளைவது தேர்தல்; திறன் வீணாகையில் விளைவது கலக்கமும், முரண்பாடும். எக்காலத்திலும் தெளிவாக நோக்குவதற்கு, எல்லாத் திறமைகளோடு கூடிய கவனம் தேவை - இதில் முரண்பாடும் இரட்டை நிலையும் இல்லை. போதை, இன்பம் இவற்றைத் தரும் பொருள்களை விலக்கல், கற்பு நெறியைக் கடைப்பிடித்தல், ஏழ்மையை மேற்கொள்ளல் இவற்றால் இம்முழுமையான சக்தி நம்மையடைவதில்லை. தன் விருப்பத்தின் கட்டளையால் ஏற்பட்ட தீர்மானமும், செயல் திறனை வீணாக்குகின்றன. ஏனெனில், இவற்றில் எண்ணம் சிக்குண்டுள்ளது. எண்ணமோ திறனின் வீண் செலவு - உண்மையில் காண்பது என்பது இவ்வாறானதன்று. 'காண்பது' ஒரு தீர்மானம் அல்ல. 'நான் பார்த்தே தீருவேன்' என்பது இல்லை. காண்பது மட்டுமே உள்ளது. காண்பது என்பது காண்பான் ஒழிந்த நிலை - இதில் சக்தியின் வீண் செலவு இல்லை. எண்ணுவோன் காண வேண்டும் என்று முயல் கையில் தன் திறனை வீணாக்குகிறான். அன்பு வீண் சக்தியல்ல - எண்ணம் அதை இன்பமாக மாற்றுகையில் உண்டாகும்

துன்பம், இச்சக்தியை வீணடிக்கிறது. திறன் அனைத்தும் ஒருமித்துக்கூடிய தியானம் எப்பொழுதும் விரிந்த தன்மையது. அன்றாட வாழ்க்கையின் செயல்களும் அதன் பகுதியே.

அக்காலையின் மேடைக் காற்றில் பாப்ளர் மரங்கள் அசைந்தன. ஒவ்வொரு இலையும் காற்றுக்கு ஒரு செய்தியை அறிவித்தது; இளவேனிலின் களியாட்டத்தால் கொண்ட சலசலப்பு, வைகறைப் பொழுது; கருங்குருவியொன்று கூரையின் மேல் பண்ணிசைத்தது. ஒவ்வொரு காலையும் மாலையும் அது அங்கே அமர்ந்து, அமைதியாகத் தன்னைச் சுற்றும் முற்றும் பார்த்தவாறு, சிற்சில பொழுதில் கூவி, மறுமொழிக்குக் காத்திருக்கும். சிறிது நேரத்திற்குப் பிறகு பறந்து சென்றுவிடும். பின்மாலையின் ஒளியில் அதன் மஞ்சள் அலகின் வண்ணத்தைப் பார்க்கலாம். அது பறந்து போயிற்று. மேகக் கூட்டங்கள் கூரை மீது இழிந்தன. அவைத் தொடு வானத்தை நிறைத்தன. ஒன்றின்பின் ஒன்றாய் கவனத்தோடு யாரோ ஒருவர் ஒழுங்கு செய்ததான தோற்றம். அவை நகரும்போது மண்ணை முழுமையாகவே தம்முடன் எடுத்துப் போவது போலும், புகைப் போக்கிகளையும், டெலிவிஷன் ஆன்டெனாக்களையும் அவ்வுயர்ந்த அடுக்கு மாளிகைகளையுமே தம்முடன் எடுத்துச் செல்வது போலும் தோன்றியது. இளவேனில் மட்டுமே தரக்கூடிய புத்தொளியுடன் தெளிந்த நீலவானத்தின் மீது அவை நகர்ந்தன. நடைபாதைகளில் காலடி ஓசை. தொலைவில் லாரி ஒன்று சென்றது. பகல் விரைவிலேயே தொடங்கும். சாளரத்தின் வெளியே பாப்ளர் மரங்களை நோக்குகையில் அண்ட கோளம் முழுவதையும், அதன் அழகையும் பார்த்தோம்.

அவர் கேட்டார் : ''புத்திக் கூர்மை என்றால் என்ன? நீர் இதைப் பற்றி நிறைய பேசுகிறீர். உமது கருத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்.''

அபிப்ராயமும் அதன் விவரங்களும் உண்மையாகாது. முடிவில்லாமல் சிலவித கருத்துக்களை அவை சரியா, தவறா என்று விவாதித்துக் கொண்டே போகலாம். எவ்வளவு நன்மையுடையதாயினும், ஒப்புக் கொள்ளத் தகுந்ததாயினும் 'கருத்து' என்பது உண்மையாகாது. கருத்து எப்பொழுதும் பண்பாட்டினாலும், கல்வியினாலும் நமக்குள்ள அறிவினாலும் ஒருதலைச் சார்பாகத் திரித்து பேசப்படுகிறது. ஒரு மனிதரை, புத்தகத்தை அன்றி ஒரு கருத்தைப் பற்றி மற்றொருவர் என்ன நினைக்கிறார் என்று கருத்துக்களால் மனதை ஏன் சுமைப்படுத்துகிறீர்? மனது ஏன் காலியாக இருக்கக் கூடாது? அந்நிலையில்தான் எதையும் தெளிவாகப் பார்க்க முடியும்.

''ஆனால் நாம் கருத்துக்களால் நிரம்பியவர்கள். தற்கால அரசியல்வாதியைப் பற்றி அவரது பேச்சினாலும், செய்கை களினாலும் அவரைப் பற்றிய கருத்தொன்று நமக்கு ஏற்படுகிறது. அக்கருத்து இல்லாவிடில் தேர்தலில் அவருக்கு வாக்களிப்பது எவ்வாறு? செயல் வேண்டினால் அபிப்ராயம் தேவைதானே?''

கருத்துக்களை வளர்க்கவும் கூர்மையாக்கவும் உறுதியாக்கவும் முடியும். பல செய்கைகளும் விருப்பு வெறுப்பு என்ற கொள்கையின் அடிப்படையிலேயே உண்டாக்குகின்றன. அனுபவத்தின் உறுதியும் அறிவும் செயல் மூலமாகத் தம்மை வெளிப்படுத்துகின்றன. ஆனால், அந்தச் செய்கை மனிதனை மனிதனிடமிருந்து பிரித்து கூறு போடுகிறது. அபிப்ராயமும் நம்பிக்கையும் உண்மையில் 'காண்பதை'த் தடை செய்கிறது. நீர் குறிப்பிட்ட புத்திக் கூர்மையின் ஒரு பகுதியே 'உள்ளதைக்' காண்பது என்பது. உடலையும், மனத்தையும் பற்றிய மென்னுணர்வும், தெளிவாகக் காண்பது என்ற மென்னுணர்வும் உணர்ச்சியைப் பற்றிய மென்னுணர்வும் இல்லாவிடில் புத்திக் கூர்மை இல்லை. உணர்ச்சி வசமாவதும், நினைவுப் படிவங்களும்

உணர்வின் மென்மையைக் குறைக்கின்றன. ஒரு இடத்தில் மென்னுணர்வு மற்றோர் இடத்தில் மழுங்கிப் போன உணர்வு என்று இருக்குமானால் அவை, முரண்பாட்டுக்கும், கலக்கத்திற்குமே அழைத்துச் செல்லும். இவை அறிவை எதிர்க்கின்றன. உடைந்துபோன துண்டுகளை ஒன்று சேர்த்து வைப்பது புத்திக் கூர்மையை உண்டாக்காது. மென்னுணர்வு என்பது கவனம். அதுவே மதியின் கூர்மை. அறிவுக்கும் அறிந்தவற்றிற்கும் ஒருவித தொடர்பும் இல்லை. அறிந்தது என்பது சென்ற காலத்தில்; இதை நிகழ்காலத்தில் நினைவு கூர்ந்து வரவழைக்க முடியும் - ஆனால் அது நிகழ்காலத்தை, குறுகிய எல்லைக்குள் கட்டுப்படுத்தும். அறிவுத் திறன் எந்நாளும் நிகழ்வில் இருப்பது - அதன் இருப்பு 'காலத்தில்' இல்லை.



## ஐரோப்பா - 9

மனத்தை நேர்மையற்ற செய்கைகள் யாவற்றிலிருந்தும் விடுவிப்பதே தியானம். எண்ணம் நேர்மையின்மையை வளர்க்கும். நேர்மையாக இருக்க வேண்டும் என்று முயலும் பொழுதே எண்ணம் தரம் பிரித்து எடை போடும் நிலையை அடைகிறது. அதுவே நேர்மையற்ற நிலை. எல்லா எடை போடும் செயல்களும் தப்பித்துக் கொள்ள ஒரு வழியேயாகும். ஆகவே நேர்மையற்ற நிலையை வளர்க்கிறது. நேர்மை என்பது நேர்மையற்றதின் எதிர் நிலையன்று. நேர்மை என்பது ஒரு கொள்கையுமல்ல. ஒருவித ஏற்பாட்டை ஒப்புக் கொள்வதும் அன்று. 'இருப்பதை' முழுமையாகக் காண்பதே ஆகும். மோனத்தில் உள்ள நேர்மையின் ஓட்டமே தியானம்.

காலை மந்தாரமாகவும் மேகமுடையதாகவும் இருந்தது. இலையுதிர்ந்த மரங்கள் மௌனமாயிருந்தன. அக்காட்டின் உள்ளே நீல அல்லி மலர்களையும், டாப்படில்லையும், பளிச்சிடும் மஞ்சள் பார்ஸைதியாவையும் பார்க்கலாம். தூரத்திலிருந்து எல்லாவற்றையும் நோக்கும்பொழுது, அவை புல்வெளிக்கு எதிராக மஞ்சள் துண்டொன்று விரித்தாற்போல் தென்பட்டது. அதற்கருகில் நாம் வந்தபோது – அம்மஞ்சள் வண்ணம் கண்ணைப் பறித்தது – அதுவே கடவுள். நாம் அவ்வண்ணத்தில் ஒன்றிப் போனதாலும் உலகம் முழுவதையும் தன் விரிப்பில் மூடும் அம்மஞ்சள் வண்ணமே நாம் என்ற உணர்வினாலும் அல்ல – காணும் நீ என்ற பொருளும் அங்கில்லை. அது மட்டுமே இருந்தது. வேறொன்றுமில்லை, சுற்றிலும் ஒலியொன்று

மில்லை. காலையில் கருங்குருவியின் இன்னிசையுமில்லை. வந்து போய் கொண்டிருக்கும் மனிதரின் ஆரவாரமும் இல்லை. நம்மை உரசிக் கொண்டு போகும் காரின் ஓசையுமில்லை. அது மட்டுமே இருந்தது – வேறொன்று மில்லை. அழகும் அன்பும் அந்த 'இருப்பிலே' இருந்தன.

நாம் மறுபடியும் அம்மரச் செறிவையடைந்தோம். சில மழைத்துளிகள்; அக்காவு சந்தடியற்று இருந்தது. சில நாட்களுக்கு முன்புதான் இளவேனிலின் தொடக்கம், இந்த வடக்குப் பகுதியில் மரங்கள் இன்னும் துளிரிடவில்லை. அவை பனிக்காலத்தினால் அலுப்புற்று வெய்யிலின் ஒளியையும், மிதமான வெப்பத்தை நோக்கி ஏங்கியிருந்தன. குதிரை மீது சவாரி செய்து கொண்டிருந்த மனிதனும், அக்குதிரையும், வியர்வையால் விறுவிறுத்தனர். மெரு கேற்றப்பட்ட காலுறைகளுடனும் சவாரியுடுப்புடனும் தொப்பியுடன் கூடிய அம்மனிதனைக் காட்டிலும், நேர்மையான அக்குதிரை மேம்பாடுடையது. நன்கு பயிற்றுவிக்கப்பட்ட குதிரை, தலை நிமிர்ந்து நடந்தது. குதிரை மீது சென்ற போதிலும், அம்மனிதன் இயற்கைக்குப் புறம்பாகவே இருந்தான். ஆனால், அக்குதிரையோ மனிதன் மெல்ல மெல்ல அழித்துக் கொண்டிருக்கும் இயற்கையோடு ஒன்றியதாய் இருந்தது.

ஓக், எல்ம், பீச் மரங்கள் – மிகப்பெரியவை. அமைதியாய் நின்றன. உதிர் இலைகளால் மூடப்பெற்ற அம்மண் மென்மையானது. அந்த மண் மிகப் பழைமையாய்க் காணப்பட்டது. சில பறவைகளே இருந்தன. கருங்குருவி யொன்று கூவியழைத்தது, வானம் வெளிவாங்கத் தொடங்கியது.

மறுபடியும் மாலையில் வானம் தெளிவாக இருந்தது. மரங்கள் மீதுள்ள ஒளி விந்தையானது. முழுமையான மௌனத்தின் ஓட்டத்தையுடையதாய் இருந்தது.

ஒளி ஒரு அசாதாரணமான பொருள்; நோக்க நோக்க அது அழகாகவும் பரந்தும் செல்லக் கூடியது. அதனுடைய ஓட்டத்தில் அம்மரங்கள் அமிழ்ந்தன. திடுக்கிட்டோம்; ஓவியனின் எந்தத் திரையும் அந்த ஒளியின் அழகைச் சிறைப்பிடிக்க இயலாது. சாயும் பரிதியின் ஒளியைக் காட்டிலும் வெளிச்சமுள்ளது. கண் பரப்பிற்கு அப்பாற் பட்டது. மண் மீது அன்பு விரிந்ததே போன்ற உணர்வு. திரும்பவும் மஞ்சள் பார்ஸைதியா கண்ணில் தென்பட்டது, மண் களி கொண்டது.

அந்த இளம் பெண் தன் இரு பெண் குழந்தைகளுடன் வந்தாள். குழந்தைகள் வெளியே விளையாடின. சீரான உடை, கண்ணுக்கு இனிமை, சற்றுப் பொறுமையற்றவள். ஆனால் திறமைசாலி. கணவனுக்கு ஒரு அலுவலகத்தில் வேலை, வாழ்க்கை சென்று கொண்டேயிருந்தது. ஏதோ ஒரு வித துயரம். அதை மறைக்க ஒரு புன்னகை. ''உறவு என்றால் என்ன? நாங்கள் மணந்து சில ஆண்டுகள் ஆகின்றன. ஒருவரையொருவர் நேசிப்பதாக நினைக்கிறோம். ஆனால், ஏதோ குறையொன்றிருப்பதாகத் தோன்றுகிறது'' என்று கூறினாள்.

நீர் அதை ஆழ்ந்தறிய விரும்புகிறீரா?

''ஆம், அதைப் பற்றி உம்முடன் பேசவே வெகு தொலைவிலிருந்து வந்துள்ளேன்.''

உமது கணவருக்கு அலுவலகத்தில் வேலை. உமக்கோ வீட்டு வேலை. ஆனால் முன்னேற்றத்திற்கான அவா, அது கிட்டாததினால் சலிப்பு, வேதனை, அச்சம் இவற்றோடு நீர் இருவருமே வேலை செய்கிறீர். அவருக்கு மேலதிகாரியாக வேண்டும் என்ற அவா - மற்றவர்கள் தனக்கு முன் அப்பதவியை அடையக்கூடும் என்ற அச்சம். நீர் இருவரும் இவற்றில் சிக்குண்டு இருக்கிறீர். அவர் மனதில் அச்சத்துடனும், வேலைக் களைப்புடனும், எரிச்சலுடனும்

வீடு திரும்புகிறார். நீரும் உம்முடைய குழந்தைகளாலும், வேலைக் களைப்பினாலும் அலுப்புற்று இருக்கிறீர். இளைப்பாற வேண்டி நீர் இருவரும் சிறிது மது அருந்துகிறீர். இது செயற்கையான பேச்சுவார்த்தைகளை உண்டாக்குகிறது. பிறகு உணவு, பேச்சு, படுக்கையறை என்று பழகிப்போன செயல்கள். இதுவே 'உறவு' என்று அழைக்கப்படுகிறது. தனித்தனியான, தன்மையங்கொண்ட வாழ்க்கையும் படுக்கையில் சந்திப்பதும் - இதுவே அன்பு என அழைக்கப்படுகிறது. சிறிதளவு மென்மை, சிறிதளவு அக்கறை, குழந்தைகளை ஓரிருமுறை கொஞ்சலாக அணைத்தல் - இவைகள் இருக்கின்றன என்ற போதிலும் இதைத் தொடர்ந்து முதுமையும், மரணமும் இருக்கிறது. இதுவே 'வாழ்க்கை' எனக் கூறுகிறோம். இதை ஒப்புக் கொள்ளவும் செய்கிறோம்.

''வேறு என்ன செய்ய முடியும்? இவ்வாறாகவே வளர்க்கப்பட்டோம், கல்வி புகட்டப்பட்டோம். எமக்குத் தேவை பாதுகாப்பு, நல்ல பொருள்களோடு கூடிய வாழ்க்கை - இவையே வேறு என்ன செய்ய முடியும்?''

நம்மைப் பிணைப்பது பாதுகாப்பு என்ற விழைவா? அன்றி பழக்கவழக்கம், சமூக நெறியை ஒப்புக் கொள்ளல், கணவன், மனைவி, குடும்பம் என்ற கருத்தா? இவற்றால் குன்றந்த அளவிலேயே மகிழ்ச்சி ஏற்படும் இல்லையா?

''மகிழ்ச்சியும் கொஞ்சம் இருக்கவே செய்கிறது. ஆனால் நிறைய செய்வதற்கும், மேற்பார்வை பார்ப்பதற்கும், விஷயங்களை அறிய படிப்பதற்கும் நேரம் செலவிடுவதால் மகிழ்ச்சியைப் பற்றி சிந்திக்க அவசியம் இல்லை. மகிழ்ச்சியாக இல்லையென்பது உண்மையானாலும் மனிதன் வாழ்க்கையுடன் ஓடிக் கொண்டே இருக்கிறான்.''

இதுவே 'உறவுடன் வாழ்வது' என்றழைக்கப்படுவது. உண்மையில் உறவு இல்லை. நீர் உடலளவில் சிறிது காலம்

ஒன்றாக இருப்பினும் ஒவ்வொருவரும் தன்னை தனிப்படுத்திக் கொண்டு ஒரு மாய உலகில் வாழ்வது, தன்னுடைய துன்பத்தை மேலும் வளர்க்கிறது. ஆகவே ஒன்று கூடுவது என்பது உண்மையில் உடலளவில் மட்டுமல்ல, உள்ளாழ் மனத்திலும் இல்லை. நாம் வளர்ந்த பண்பாடு, அதிலேயே நாம் எளிதாகச் சிக்கிக் கொள்ளுகிறோம். பண்பாடு, சமூகம் இவைகளினால் விளைந்த குற்றமேயன்றோ இந்நிலை? உளுத்தும் அழுகியும், நிலை கெட்டும், திரிந்தும் போன சமூகத்தையே மக்கள் ஏற்படுத்தியுள்ளனர். இதை மாற்றியமைத்தல் அவசியம் – ஆனால், இச்சமூகத்தை ஏற்படுத்திய மனிதன் மாறினால் ஒழிய – அதை மாற்ற முடியாது.

''ஒருக்கால் நான் இதைப் புரிந்துக் கொள்ளக்கூடும், அதனால் மாறவும் கூடும். ஆனால் அவரைப் பற்றி? உழைத்து, முன்னேற்றங்கொண்டு ஒரு குறிக்கோளையடைதல், அவருக்கு இன்பத்தைத் தருகிறது. அவர் மாறப் போவதில்லை. ஆக நாம் மறுபடியும் தொடக்கத்திற்கே திரும்பி வருவோம். – நான் மெல்ல மெல்ல என் சிறைக் கதவுகளைத் தகர்க்க முயலக்கூடும் – அவர் மேன்மேலும் தன்னுடைய சிறைச் சுவர்களை உறுதிப்படுத்திக் கொள்ளலாம். இதில், பொருள் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை.''

இத்தகைய வாழ்விற்குப் பொருள் ஒன்றும் இல்லை. ஏதாவது ஒருசில நேரம் மகிழ்ச்சியின் மின்னல். ஆனால், விலங்கு போன்ற அன்றாட வாழ்க்கையும், அதன் அழகற்ற நிலையுமே நாம் ஏற்படுத்திய இச்சமூகம். ஆகவே இவையனைத்திற்கும் நாம் இறத்தல் வேண்டும். அம்மணீ! நாளை என்று ஒன்றுமில்லை என்பது நீர் அறிந்ததே! தன் அவாக்களையும் நிறைவேற்றங்களையும் அடைவதற்கு எண்ணம் செய்யும் ஏற்பாடே நாளை என்பது. எண்ணம் பற்பல நாளைகளை உண்டாக்கிய போதிலும் நாளை

என்பது ஒன்றும் இல்லை. 'நாளைக்கு இறப்பதே இன்றைய முழுமையான வாழ்வு. இதை நீர் செய்தால் உம்முடைய வாழ்க்கை மாற்றமடையும். எனில், அன்பு என்பது நாளை அன்று, அது எண்ணம் விளைவிக்கும் பொருளுமன்று. அன்பின் அகராதியில் நேற்று, நாளை என்றச் சொற்கள் இல்லை. 'இன்று' என்பதை முழுமையாக வாழும்பொழுது அதாவது ஆசைகளால் தீண்டப்படாததும், பொறாமையின் வாடையற்றதும், காலத்தின் வரையறைக் குட்படாததுமான 'இன்று' என்பதை முழுமையோடு வாழ்கையில், மனிதனுடன் மட்டுமன்றி, இயற்கையுடனும் மலர்களுட னும் ஏன், மற்றும் மண்ணுடனும் விண்ணுடனுமே உறவு உண்டாகுகிறது; அத்தகைய உறவில் கள்ளமிலாத் தன்மையின் ஆழ்ந்த உணர்வு இருக்கிறது. அப்பொழுது 'வாழ்வு' என்பதின் பொருளே வேறு.



## ஐரோப்பா - 10

தியானம் செய்ய வேண்டும் என்று முன் ஏற்பாடு ஒன்றும் செய்ய முடியாது. அது நாம் தேடாமலே நிகழ வேண்டிய ஒன்று. அதைத் தேடிப் போனாலும், தியானம் செய்ய முறை ஏதாவது உண்டா என்று தெரிந்து கொள்ள விழைந்தாலும், அம்முறை உங்களை மேலும் கட்டுப்படுத்தும். அல்லது இப்பொழுதுள்ள உம்முடைய கட்டுப்பாடுகளின் வலிமையை மிகையாக்கும். எண்ணம் நிர்மாணித்த கூடத்தை அடியோடு மறுப்பதே உண்மையில் தியானமாம். எண்ணத்தின் தன்மையானது கட்டிடம் கட்டுதல், காரணமுடையது, காரண மற்றது, குறிக்கோளையுடையது அல்லது நலங்கெட்டது என பலவிதம். எண்ணம் காரணத்தோடும், முரண்பாடுடைய நிலையிலிருந்தும், அன்றி நரம்பு தளர்ந்த நிலையிலிருந்தும் தியானத்தை அடைய முயலுகிறது. அவ்வாறு செய்யும் போது தான் இருக்கும் நிலைகளையே இருப்பதாகக் காட்டும். அவ்விதக் கட்டிடத்தையே ஆழ்ந்த உண்மையென ஏற்றுக் கொள்ளும். இது நம்பிக்கையுள்ள ஒருவன் தன் நம்பிக்கை மீதே தியானம் செய்வது போன்றது; தன் அச்சத்தின் பயனாக உண்டாக்கிய அந்நம்பிக்கைகளை மேலும் தூய்மையாக்குகிறான், அதை வலிமையுறவும் செய்கிறான். அவன் படமாக்குவதும் உருவம் கொடுத்து வணங்குவதும் அந்நம்பிக்கையின் வழிவந்த சொல்லையே!

ஒலி தன்னுடைய சிறைக் கூண்டைத் தானே ஏற்படுத்திக் கொள்கிறது. பிறகு எண்ணத்தின் ஒலியே அதன் சிறைக் கூண்டாகிறது. சொல்லும் அதன் ஒலியும் காண்பானையும்

காட்சிப் பொருளையும் பிரிக்கிறது. சொல் என்பது ஒரு மொழியின் சிறுபகுதி, ஒரு சிறிய ஒலி மட்டுமன்று ஒரு சின்னமும் ஆகும். அன்றி ஒரு நிகழ்ச்சியின் நினைவால் தேங்கி நிற்கும் நினைவின் ஓட்டத்தைத் திறக்கும் மதகாகவும் அமைய தூண்டும். இச்சொல் முழுமையாக ஒழிந்த நிலையே தியானம். அச்சத்தின் ஆணிவேரே சொல்லை இயக்கும் இயந்திரம்.

இளவேனிலின் தொடக்கம். புஆ என்ற இந்த ஊர் தனக்குரித்தான மென்மையையுடையது. சில மரங்களில் புதிய துளிர்கள். வானம் இளவேனிலின் முழுமையான நீல நிறத்தை வெளிக்காட்டவில்லை. செஸ்ட்நட் மரங்கள் இன்னும் துளிரிடவில்லை, இளவேனிலின் மணம் காற்றை நிரப்பியது. புஆவின் இப்பகுதியில் ஜனநடமாட்டமில்லை. தூரத்தே செல்லும் கார்களின் ஒலியைக் கேட்க முடிந்தது. வைகறை வேளையில் நடக்கும் பொழுது இளவேனிலின் கூர்மையை உணர முடிந்தது. அவர், தான் என்ன செய்ய வேண்டும் என்று விவரித்தார், வினவினார், கேள்விகளை எழுப்பினார்.

''மாறுதலற்ற இந்த ஆராய்ச்சி, உள்ளாழ்ந்து பரிசோதித்தல், இந்தக் கண்காணிப்பு எல்லாம் முடிவற்றதாகத் தோன்றுகிறது. நான் பல வழிகளைக் கையாண்டுள்ளேன். முண்டனம் செய்த குருமார்களையும், தாடி வைத்த சாமியார்களையும், தவிர பல தியான வழிகளையும், இவ்வித செப்படி வித்தைகளையெல்லாம் பார்த்திருக்கிறேன் - இவை தொண்டை வறண்ட நிலையிலேயே நம்மைத் தவிக்க வைக்கும் செயல்கள்.''

நீர் ஏன் மறுகரையிலிருந்து தொடங்கக் கூடாது? அதாவது நீர் அறியாத கோடியிலிருந்து - அதாவது உம் கண்ணுக் கெட்டாத அக்கரையிலிருந்து? அறியாததிலிருந்து தொடங் குங்கள் - ஏனெனில், மாறுதலற்று, திரும்பத்திரும்ப செய் யும் ஆராய்ச்சிகளும், பரிசோதனைகளும் அறிந்தவற்றை மேலும் வலுப்படுத்தும், வரைகோட்டுக்குள் அடக்கும்.

''ஆனால், நான் எவ்வாறு அக்கரையிலிருந்து தொடங்குவது? அது எனக்குத் தெரியாதது - அதைப் பார்க்கவும் முடியாது.''

''நான் எவ்வாறு அக்கரையிலிருந்து தொடங்குவேன்'' என்று நீர் வினவுகையில், இக்கரையிலிருந்தே இக்கேள்வி யைக் கேட்கிறீர். ஆகவே கேள்வி ஒன்றுமில்லாமல் அதைப்பற்றி ஒன்றுமறியாத அம்மறுகரையிலிருந்தே தொடங்குங்கள். அப்பரப்பு வஞ்சகமுள்ள எண்ணத்தினால் தீண்ட முடியாதது.

அவர் சிறிது நேரம் மௌனமானார். ஆண் கௌதாரியொன்று பறந்து சென்றது. வெய்யிலின் எதிரில் பளிச்சிடும் அழகு - புதர்களில் மறைந்தது. அது மறுபடியும் வெளிவந்தபோது, உலர்ந்த இலையின் நிறத்துடன் கூடிய நாலைந்து பெண் கௌதாரிகளின் நடுவில் மாட்சிமை பெற்று அந்த ஆண் கௌதாரி காட்சியளித்தது.

அவர் தன் நினைவில் ஆழ்ந்து போய் இவற்றைக் கவனிக்கவில்லை. அதை நாம் சுட்டிக் காண்பித்த போது ''எவ்வளவு அழகு'' என்ற சொற்கள் வெளிவந்தன. வெறும் சொற்களே, ஏனெனில் அவருடைய மனமோ, தான் அறியாத இடத்திலிருந்து எப்படித் தொடங்குவது என்ற சிக்கலின் மீது இருந்தது. நீண்ட பச்சை நிறப் பல்லியொன்று பாறாங்கல்லின் மேல் குளிர் காய்ந்து கொண்டிருந்தது.

''நான் அக்கரையிலிருந்து எவ்வாறு நோக்குவேன் என்பதறியேன். இவ்வாறு பொருளற்றுக் கூறவதை உண்மையில் புரிந்து கொள்ள முடியவில்லை. தெரிந்த ஒன்றையே நான் அடையக் கூடும்.''

ஆனால் நீர் அறிந்ததென்ன? முடிவடைந்த ஒன்றையே. ஏற்கெனவே சென்று போன ஒன்று. நீர் அறிந்தது நேற்று என்பதையே. அறியாத இடத்திலிருந்தே நீர் தொடங்குங்கள். அதிலிருந்தே வாழுங்கள். ''நான் எவ்வாறு அங்கிருந்து வாழ்வேன்'' என்று கூறும்பொழுதே நீர் நேற்று என்ற

மாதிரிப்படத்தை வரவழைக்கிறீர். ஆனால் அறியாத ஒன்றுடன் வாழும் பொழுதே நீர் விடுதலையோடு வாழ்கிறீர். விடுதலையிலிருந்து செயல்படுகிறீர் – அதுதான் அன்பு. 'அன்பு என்பதை அறிவேன்' என்று கூறுகையில் அது உமக்கு தெரியாதது என்பது தெளிவாகிறது. நிச்சயமாக அது இன்பத்தை நினைவு கூர்வதல்ல. ஆகவே நீர் அறியாததுடனே வாழுங்கள்.

''உண்மையில் நீர் கூறுவது விளங்கவில்லை. சிக்கலை மேலும் வலுப்படுத்துகிறீர்.''

நான் சொல்லுவது மிக எளிதே. நீர் மேலும் மேலும் தோண்டும் பொழுது அதன் ஆழம் மிகையாகும். தோண்டுவது என்பதே வரையறை. ஒவ்வொரு மண்வெட்டி யளவு மண்ணும் போகா வழிக்கு ஒரு படியை அமைக்கிறது. உமக்கென்று புதிய படியமைத்து தர வேண்டுகிறீர். அல்லது வேறான பரப்பொன்றுக்கு அழைத்துச் செல்லக் கூடியதான உம்முடைய படிகளை நீராகவே அமைக்க விரும்புகிறீர். உண்மையிலேயே அந்தப் புதிய பரப்பு என்ன என்று தெரியாவிட்டால் சரி. அன்றி ஊகத்தினால் அந்தப் பரப்பை அறிந்து கொள்ள முற்பட்டால் அந்தப் படிகள் நீர் முன்பு அறிந்தவற்றிற்கே அழைத்துச் செல்லும். ஆகவே இவற்றையெல்லாம் அடியோடு விட்டு விடுங்கள். அக்கரையிலிருந்தே தொடங்குங்கள். மௌனமாயிருங்கள், அப்பொழுது நீர் அதைக் கண்டுபிடிப்பீர்.

''ஆனால், எவ்வாறு மௌனமாயிருப்பது என்று எனக்குத் தெரியாது.''

பார்த்தீரா? திரும்பவும் 'எவ்வாறு' என்று தொடங்குகிறீர். 'எவ்வாறு' என்பது முடிவற்றது. அறிந்தவை யாவும் தவறானது. 'தெரிந்தது' என்று கூறுகையிலேயே நீர் உம்முடைய புதை குழியைத் தோண்டிக் கொள்கிறீர். 'இருப்பது' என்பது அறிந்ததில் இல்லை.



## ஐரோப்பா - 11

மௌனம் என்ற வெளிச்சத்திலே எல்லாச் சிக்கல்களும் முடிவடைகின்றன. இவ்வொளியானது எண்ணத்தின் பண்டைய ஓட்டம் அன்று. தன்னை வெளிப்படுத்தும் அறிவிலிருந்து பிறந்ததன்று. காலத்தினாலும், தன் விருப்பின் கட்டளையினாலும் ஏற்பட்ட ஒளியுமன்று. இது தியானத்தில் நடைபெறுவது. தியானம் ஒரு தனிச்செயலன்று; தன் இன்பத்தைத் தேடும் செயலுமன்று, இன்பம் எந்நாளும் பிரிவையும், பகுதியையும் விளைவிக்கும். தியானத்தில் நீர், நான் என்ற பிரிவின் வரைகோடு அழிந்து போகிறது. தியானத்தின் மௌன ஒளி 'நான்' என்ற அறிவை முற்றிலும் அழிக்கிறது. 'நான்' என்பதை அளவில்லாமல் ஆராய்ச்சி செய்து கொண்டே போகலாம். ஏனெனில், அது நாளுக்கு நாள் மாறுபடும் ஒன்று. தான் மிகப் பரந்தது என்று அது நினைத்த போதிலும் அதனுடைய பரப்பு அளவுக்குட்பட்டது. மௌனமே விடுதலை. முழுமையான ஒழுக்கத்தின் தீர்மானத்திலே விளைவது விடுதலை.

கடலைச் சார்ந்த சிறிய காடு. ஓயாக் காற்று பைன் மரங்களைக் கோணல்மாணலாகவும், குட்டையாகவும், கிளைகளை ஊசியிலைகள் அற்றதாயும் செய்தது. இளவேனிற் காலம். ஆனால், இம்மரங்களை அக்காலம் தீண்டாது. இளவேனில் இங்கிருந்தது. ஆனால் அம்மரங் களிலிருந்தும், ஓயா உப்புக் காற்றிலிருந்தும் வெகு தொலைவில் இருந்தது. ஒவ்வொரு இலையும் கூவி ஒலி செய்தது. ஒவ்வொரு செஸ்ட்நட் மரத்தின் மலர்க்கதிர்களும்

சூரிய வெளிச்சத்தால் ஒளியுற்றன. இளவேனில் அங்கே மலர்ந்து கொண்டிருந்தது. குஞ்சுகளும், வாத்தும், ட்யூலிப் மலர்களும், நார்ஸிஸஸ் பூக்களும் அங்கிருந்தன. ஆனால், இங்கே மரங்கள் இலையற்று மொட்டையாகவும், நிழலற்றும், துன்பத்துடனும், நெளிந்தும் வளைந்து மிருந்தன. அவை கடலுக்கு மிக்க அருகில் இருந்தன. இந்த இடம் தனக்குரியதான அழகையுடையது. ஆனால் தொலைவிலுள்ள வனத்தை மௌனமான ஏக்கத்தோடு நோக்கியது. அந்நாளில் கடுங்குளிர் காற்று வீசியது. பெரிய அலைகள், வேகமான காற்று இளவேனிலை நாட்டின் புறமாக மேலும் உந்தியது. கடல் மீது மூடுபனி. மேகங்களின் ஓட்டம் மண்ணை மூடியது. அவை தம்முடன் வாய்க்கால், வனம், சமவெளி எல்லாவற்றையுமே அழைத்துச் சென்றன. மண்ணை ஒட்டி வளர்த்த ட்யூலிப் மலர்களும் அசைந்தாடின. அவற்றின் கண்கவர் வண்ணம், வயல் மீது பாயும் ஒளியாக படிந்தது. வனத்திலோ பறவைகள். ஆனால் பைன் மரங்கள் மீது அவையில்லை. ஓரிரண்டு கருங்குருவி, மஞ்சள் அலகுடன் தவிர ஓரிரண்டு புறாக்கள். நீர் மீது படிந்த ஒளி பார்க்க விந்தையாக இருந்தது.

அவர் உருவம் பெரிது; கனமான சரீரம், பெரிய கைகள். பணக்காரராக இருக்க வேண்டும். தற்காலத்திய ஓவியப் படங்களைச் சேகரிப்பவர். அதைப் பற்றிய செருக்குமுள்ளவர். அவருடைய படங்களைப் பற்றி விமர்சகர்களிடை மதிப்பும் உண்டு. இதைப் பற்றி அவர் கூறுகையில், செருக்கு அவர் கண்களில் ஒளியிட்டது. பெரிய நாய் வைத்திருந்தார். சுறு சுறுப்பாகவும் விளையாட்டுப் போக்காகவும் இருந்த அந்நாய் தன் எஜமானரை விட சுறுசுறுப்புள்ளது. வெளியில் காற்றோட்டமாய் மணற்குன்றுகளில் விளையாட அதற்கு ஆசை. ஆனால், எஜமானுக்கு கீழ்படிந்து, அவர் கூறிய இடத்திலேயே உட்கார்ந்திருந்தது. சிறிது நேரம் பொழுது போகாததினால் தூங்கிவிட்டது.

பொருள்களை நாம் தன்வயப்படுத்திக் கொள்வதைக் காட்டிலும், சொத்து சேகரங்கள் நம்மைத் தன்வயப்படுத்து கின்றன. கோட்டை, வீடு, படங்கள், புத்தகங்கள், அறிவு இவை மனிதனைக் காட்டிலும் மிக வலிவுள்ளதாகவும், முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் ஆகின்றன.

அவர் நிறையப் படித்தவர் எனக் கூறினார். அவருடைய புத்தகச்சாலையில் எல்லா நவீன ஆசிரியர்களுடைய புத்தகங்களையும் காண முடிந்தது. ஆன்மீக மறைகளைப் பற்றியும், உலகில் லாஹிரி பொருள்கள் பெருகிக் கொண்டு போவதையும் பற்றிப் பேசினார். அவர் பணக்காரர், வருவாயில் வெற்றி கண்டவர். அவருக்கு பின்னாலோ வெறிச்சிட்ட வெளி, அந்த ஆழமற்ற நிலையைப் புத்தகங்களாலும், ஓவியங்களாலும் வணிக அறிவாலும் என்றுமே நிரப்ப இயலாது.

இந்தப் பாலைவெளியை மனிதன் பலவித யுக்திகளால் நிரப்ப நினைக்கிறான். இதுவே வாழ்க்கையின் துரயம். ஆனால், அப்பாலை என்றுமே வெளியாகத்தான் இருக்கும். அதை நிரப்பிப் பிடித்துக் கொள்ளும் வீண் முயற்சியே துயரம். இம்முயற்சியின் விளைவு, 'தான்' என்ற ஆட்சி, அதிகாரம், இவற்றுடன் கூடிய வீண் சொற்கள். சென்று போனதைப் பற்றி பொருள் செறிந்த நினைவுடன் கூடிய 'நான்' என்ற திமிர். பிரிவுத் தன்மையுள்ள எண்ணம், இக்காலியிடத்தையும் தனிமையையும் தான் ஏற்படுத்திய அறிவினால் வளர்த்து வனமாக்குகிறது.

இவ்வீண் முயற்சியின் துயரம் மனிதனை நாசமாக்கு கிறது. அவனுடைய எண்ணம் கம்ப்யூட்டரைப் போன்று சிறந்ததுமன்று; எண்ணம் என்ற ஆயுதத்தை மட்டும் கைக் கொண்டு அவன் வாழ்க்கையின் சிக்கல்களை நோக்கு கிறான். அதுவே அவனை நாசமும் செய்கிறது. இவ்வீண் வாழ்க்கை எனும் துயரத்தை ஒருக்கால் இறக்குந் தறுவாயில் அவன் உணரக் கூடும். ஆனால், அது காலங்கடந்த செயலாகும்.

ஆக சேமிப்புப் பொருளும், நன்னடத்தை, நிறைவேற்றங்கள், குடும்பத்தோடு ஒட்டிய மனைவி, இவை மிகவும் சிறப்புடையவையாக ஆகின்றன. இத்துயரம் அன்பை விரட்டி வெளியேற்றும். இவையிரண்டில் ஒன்றைத்தான் பெற முடியும். அன்பு அல்லது பொருட்கள் இவை இரண்டையும் ஒன்று சேரப் பெற முடியாது. குற்றங்குறை கூறுந்தன்மையையும், கசப்பும் மனித வாழ்க்கையின் பயன்; ஒன்று இவற்றை வளர்க்கும். மற்றொன்று காடுகளையும், குன்றங்களையும் எல்லாம் கடந்து நிற்பது.



## ஐரோப்பா - 12

எண்ணத்திற்கும், கற்பனைக்கும் தியானத்தில் இடமில்லை. அவை அடிமைத்தனத்திற்கே அழைத்துச் செல்லும்; தியானம் கொண்டு வருவது விடுதலை. நன்மை, இன்பம் இவ்விரண்டும் வெவ்வேறு சொற்கள். ஒன்று விடுதலையைக் கொடுக்கும், மற்றொன்று காலத்தின் அடிமைத்தளைக்கு அழைத்துச் செல்லும். தியானம் காலத்திலிருந்து விடுபட்டது. காலமே காண்போன், துய்ப்போன், எண்ணுவோன், எண்ணம் இவையாவும். காலத்தின் செய்கைகளுக்கு அப்பாலும் அதற்கு மேலும் செல்லுவது தியானம்.

கற்பனை காலத்தின் வயலிலே விளைவது. எவ்வாறு ஒளிந்துகொண்டிருப்பினும், மறைவாக அது வேலை செய்தே தீரும். எண்ணத்தின் இச்செய்கையானது கட்டாயமாகக் காலத்தினுடைய முரண்பாட்டுக்கும் அடிமைத்தனத்திற்கும் அழைத்தே செல்லும். தியானம் காலத்தின் கள்ளத்தை அறியாதது.

அந்த ஏரியைப் பல மைல் தொலைவிலிருந்தே பார்க்கலாம். பயிர் வயல்களூடும், பைன் காடுகளுக்குள்ளு மாக வளைந்து செல்லும் பாதை வழியாக அதை அடைந்தோம். அது சீரான நாடு. சாலைகள், வயல்கள், கால்வாய்கள், குதிரைகள், கோழிக் குஞ்சுகள், பன்றிகள் இவையாவுமே சீராகவும் நல்ல ஒழுங்குடனும் இருந்தன. மேலும் கீழுமான குன்றுகள் வழியாக ஏரியை அடைந்தோம். எல்லாத் திசைகளிலும் மலைகள் பனியால்

மூடப்பெற்றிருந்தன. எல்லாம் தெளிவாக இருந்தது. இளங் காலையில் பனி பளபளத்தது.

அந்நாடு பல நூற்றாண்டுகளாக போரில் ஈடுபட்ட தில்லை. அதன் பெரிய காப்புத்தன்மையையும் தொந்தரவு அற்ற அன்றாட வாழ்க்கையையும், அது அழைத்து வரும் அலட்சியம் கூடிய மந்தமான நிலைமையையும், நல்லதொரு அரசாங்கத்தினால் ஏற்பாடு செய்யப்பட்ட சமூகத்தையும் அங்கு நன்கு உணர முடிந்தது.

மழுமழுப்பான, சீரான அகன்ற சாலை, கார்கள் எளிதில் எதிரும் புதிருமாகப் போய்வரக்கூடும். குன்றின் மேல் ஏறி வருகையில் நாம் அத்தோப்பை அடைந்தோம். சற்று தொலைவில் புகையிலை பாத்தி ஒன்று. அதனருகில் வரும்பொழுது புகையிலைப் பூக்களின் நெடியை நுகர முடிந்தது.

உயரத்திலிருந்து கீழே இறங்கும் போது காலையின் வெப்பம் மிகையாகியது. காற்றும் சற்றே கனத்தது. மண்ணின் அமைதி நம் உள்ளத்தில் பாய்ந்தது. நாம் மண்ணுடன் ஒன்றாயினோம்.

இளவேனில் நாள்; காற்று குளுமையாக வீசியது. சூரியனின் கதிர்கள் கூரிய நிழலை உண்டாக்கின. பெரிய நெடிதுயர்ந்த யூகாலிப்டஸ் மரம் வீட்டின் எதிரே ஆடி அசைந்தது. தனி கருங்குருவி ஒன்று பண் இசைத்தது. நாம் இருந்த இடத்திலிருந்து அதை பார்க்க முடிந்தது. அக்காலையில் சில பறவைகளே இருந்தன. அக்குருவி சற்று தனிமையாக இருந்ததாகத் தோன்றியது. தோட்டத்தின் சுவர்கள் மீது குருவிகள் வரிசையாக உட்கார்ந்து இருந்தன. தோட்டம் துப்புரவாக இல்லை. புல் தரை செதுக்கப்படவில்லை. குழந்தைகள் பிற்பகலில் அங்கு வந்து விளையாடும் போது அவர்களின் சிரிப்பொலியையும், கூச்சலையும் கேட்க முடியும். ஒருவரையொருவர் மரத்தினி

டையில் துரத்துவதும், கண்ணாமூச்சி விளையாடுவதும், உயர்ந்த குரலில் சிரிப்பதும் காற்றை நிரப்பும்.

பெரிய உணவின் மேசையைச் சுற்றி ஏழெட்டு பேர். அதில் ஒருவர் சினிமா டைரக்டர், மற்றொருவர் பியானோ வாசிப்பவர். பல்கலைக் கழகத்தில் படிக்கும் இளம் மாணவர் ஒருவர். அவர்கள் அரசியலைப் பற்றியும், அமெரிக்காவில் நடக்கும் கலவரங்களைப் பற்றியும், முடிவற்று நிகழ்ந்து கொண்டிருக்கும் போர்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தனர். ஒன்றுமில்லாதவற்றைப் பற்றிய எளிதான பேச்சோட்டம். டைரக்டர் திடீரென்று பேசத் தொடங்கினார்: ''பண்டைய தலைமுறையான எமக்கு, வருங்காலத்தில் ஒரு இடமும் கிடையாது. அன்றொரு நாள் பல்கலைக்கழகத்தில் பிரபல எழுத்தாளர் ஒருவர் பேசினார். மாணவர்கள் அவரைச் சின்னாபின்னமாக சிதறடித்தனர். மாணவர்களின் விருப்பத்திற்கும், எண்ணத்திற்கும், கோரிக்கைகளுக்கும் அவருடைய பேச்சுக்கும் ஒருவித தொடர்புமில்லை. அவர் தன்னுடைய கருத்துக்களையும், தன் சிறப்பையும், தன் வாழ்க்கையைப் பற்றியும் ஆணித்தரமாக பேசினார். ஆனால், மாணவர்கள் அதைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளவில்லை. அவரை நன்கு தெரிந்த என்னால் அவர் எண்ணத்தை உணர முடிந்தது. தோற்றுப் போன போதிலும் அதை அவர் ஒப்புக் கொள்ளவில்லை. இளந் தலைமுறையால் ஒப்புக் கொள்ள வேண்டும் என்று அவர் விரும்பிய போதிலும், அவருடைய மரியாதையை யும், மரபுரிமையைக் கொண்ட வாழ்க்கையையும் அவர்கள் ஏற்கவில்லை.'' டைரக்டர் மேலும் கூறினார்: ''அவர் தன் புத்தகங்களில் பல மாற்றங்களை காண்பித்த போதிலும்... என் வரையில் இளம் தலைமுறையினர் எவரிடமும் எனக்கு ஒருவித தொடர்பும் கிடையாது. நாம் அனைவரும் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுபவரே''

இதைக் கூறியவர், பல புதிய அலைப் படங்களை தயாரித்து பெயர் வாங்கியவர். இதை கசப்பினால் அவர்

கூறவில்லை. புன்சிரிப்புடன் தோள்களைக் குலுக்கியவாறு பொதுவாகக் கூறினார். எளிமையுடன் கூடிய வெளிப்படையான பேச்சு கேட்க இனிதாக இருந்தது.

பியானோ வாசிப்பவர் இளைஞர். நிர்வாகிகள், கச்சேரிகள், அதற்கான விலையுயர்ந்த விளம்பரங்கள், பணத்தின் தொடர்பு இவற்றைக் கொண்ட இச்சிறிய உலகம், இவையாவும் லாபத்தையே குறிக்கோளாகக் கொண்ட ஒரு கௌரவமான குழுதான் என்பதால் நல்ல எதிர்காலம் கொண்ட அந்த வாய்ப்பைத் தான் விட்டு விட்டதாகக் கூறினார். தன்வரையில் வேறு விதமான வாழ்க்கை ஒன்றை அதாவது மெய்ந்நெறி வாழ்க்கையை வாழ விரும்பினார்.

அந்த இளைஞர் கூறினார்; ''உலகம் முழுவதும் இதே விதம். நான் இப்பொழுதுதான் இந்தியாவிலிருந்து திரும்பி யுள்ளேன். அங்கு இளந்தலைமுறைக்கும் பழைய தலை முறைக்கும் உள்ள இடைவெளி அதிகம். அங்கு மரபுரிமையும் பழைமையும் மிகவும் வலுவுள்ளன. ஒருக்கால் இளந்தலைமுறைகளும் அதில் அகப்பட்டுக் கொள்ளக் கூடும். ஒரு சிலராவது அதை எதிர்த்து போராடி ஒரு புதிய இயக்கத்தைத் தொடங்குவாரென்று நம்புகிறேன்.''

''நான் பல நாடுகளில் பயணம் செய்துள்ளேன் – நான் பார்த்தவரையில், இளைஞர்கள் (அவர்களைக் காட்டிலும் நான் அதிக வயதுள்ளவன் என்று சொல்லலாம்) சமூகம் என்ற நிறுவனத்திலிருந்து பிரிந்து செல்கிறார்கள். சில சமயங்களில் லாஹிரி உலகத்திலும் கீழை நாட்டு மறை பொருள்களிலும் தங்களை இழந்து போகிறார்கள். ஆனால் ஒரு புதிய வலிவும், ஒருவித வாக்குறுதியும் அவர்களிடம் இருக்கின்றன. மாதாக் கோவிலையும் கொழுத்த பாதிரியை யும், மடாதிபதிகளின் படிப்படியான ஏற்றமுள்ள நிலை களையும் அவர்கள் புறக்கணிக்கின்றனர். அரசியலிலும், போரிலும் சிறிதும் பங்கு கொள்வதில்லை. ஒரு சமயம்

அவரிடமிருந்து ஒரு புதிய இரத்தினம், நிதி நமக்குக் கிடைக்கலாம்.''

இவ்வளவு நேரமும் பல்கலைக்கழக மாணவர், மௌனமாக உட்கார்ந்து ஸ்பாக்கெட்டி சாப்பிட்ட வண்ணம் சாளரத்தின் வெளியே பார்த்துக் கொண்டிருந்தார். மற்றவரைப் போலவே அந்தப் பேச்சுக்களைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். அவர் சற்று நாணம் உடையவர். அவர் கற்க விருப்பம் இல்லாதிருந்தாலும் கல்லூரியில், ஆசிரியர்களின் உரைகளை (அவர்கள் சரியானபடி கற்று தரவில்லையெனினும்) நன்கு கேட்பார். அவர் நிறைய படிப்பவர்; தன் நாட்டினுடையவும், ஆங்கில இலக்கியங்களிலும் விருப்பமுடையவர். இதைப்பற்றி வேறு சமயங்களில் பேசியுள்ளார்.

அவர் கூறினார் : ''பதினைந்து வயதுடையவர்களைக் காட்டிலும் இருபது வயதான நான் பெரியவனே. அவர்களுடைய மூளையின் வேகம் அதிகம். கூர்மையாகவும், பொருள்களை தெளிவாகவும் எனக்கு முன்னரே குறிப்பாகவும் நோக்குபவர்கள். அவர்கள் நிறைய அறிந்துள்ளவராக காண்கின்றனர். அவர்களுடன் ஒப்பிடுகையில் நான் வயதில் முதியவனாகக் காண்கிறேன். நீர் அனைவரும் உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுபவராக நினைக்கிறேன். இதை அரசியல்வாதியிடமும், மத குருமார்களிடமும் இருப்பதைப் புரிந்து கொள்ளலாம். ஆனால் மற்றவர்கள் அனைவரும் ஏன் இந்தப் பாசாங்கில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள் என்பது எனக்குப் புதிராக இருக்கிறது. உம்முடைய சமூக நெறிகள் திரிந்து நலங்கெட்டவை. நீர் விரும்புவது போர் முறையே.''

''எங்கள் வரையில் கருப்பு அல்லது பழுப்பு அல்லது மற்றெந்த நிறமான மனிதரானாலும், அவர்களை நாங்கள் வெறுப்பதில்லை. அவர்களுடன் ஒரே வீட்டை சேர்ந்தவரைப் போல் பழகுகிறோம். இதை அவர்களுடன் நன்கு பழகியதால் தெரிந்து வைத்துள்ளேன்.''

''ஆனால் உம்மைப் போன்ற முதிய தலைமுறையினர், இன, நிற பிரிவுள்ள உலகத்தையும், போர்களையும் உண்டாக்கியிருக்கிறீர். நாங்கள் அதை சிறிதும் விரும்பவில்லை. ஆகவே அதை எதிர்த்து புரட்சி செய்கிறோம். ஆனால், அதுவே மறுபடியும் அரசியல் வாதிகளால் உபயோகிக்கப்பட்டு, நாகரிமாக்கப்படுகிறது. அதனால் அவ்வருவருப்பிலிருந்தும் விடுபடுகிறோம். ஒருக்கால் நாங்களும் மரியாதைக்குரியவராகவும், சமூக நெறிகளுக்கு கட்டுப்பட்டவராகவும் ஆகக் கூடும். ஆனால், தற்போது உங்கள் சமூக நெறிகளை வெறுக்கிறோம். இப்பொழுது அந்நெறிகளுக்கு உட்படுவதும் இல்லை.''

ஓரிரண்டு நிமிடங்கள் அமைதி நிலவியது; அந்த யூகாலிப்டஸ் மரமும் அசைவற்று மேசையைச் சுற்றி நடந்த பேச்சுவார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தது போல் தோன்றியது. கருங்குருவி பறந்துவிட்டது - மற்ற குருவி களும் பறந்துவிட்டன.

நாம் கூறினோம் : சபாஷ்! நீர் கூறியது மிகச் சரியே. எல்லா சமூக நெறிகளை மறுப்பதே நெறியுடன் வாழ்வது. ஏனெனில், சமூகம் ஒப்புக் கொள்ளும் நெறிகள் மரியாதைக்கான நெறிகள். நாம் எல்லோரும் மரியாதையை விழைகிறோம். அதாவது சீர்குலைந்த இச்சமூகத்தில், நல்ல மனிதன் என்று அடையாளம் கொண்டு வாழ விரும்புகிறோம். இதைக்கண்டு அச்சமடைகிறேன். மரியாதைக்குரியது என்பது லாபகரமானது. அது நல்ல ஊதியமுள்ள வேலையை நிச்சயமாகக் கொடுக்கும். பேராசை, பொறாமை, வெறுப்பு என்றவைகளே சமூக நிறுவனத்தினால் ஒப்புக் கொள்ளப்பட்டவை.

நீர் இதை உதட்டளவில் இல்லாமல் உம் உள்ளத்தால் முழுமையாக மறுக்கும் பொழுது, நீர் உண்மையில் நெறியுடையவர். ஏனெனில் இத்தகைய நெறி, அன்பில் விளைந்தது - லாபம் என்ற குறிக்கோளை நோக்கியும்,

உயர்பதவி வரிசைகளை நோக்கியும் உண்டானது அல்ல. நீர் பதவி, புகழ், அடையாளமிட்ட மனிதராக வாழ்தல் இவற்றையுடைய சமூகத்தை சேர்ந்தவராக இருந்தால், அன்பு அங்கு இராது. அன்பில்லாததால் இத்தகைய சமூக நெறிகள் உண்மையில் நெறியற்றவையே. இவை யாவற்றையும் உள்ளாழ் உள்ளத்தினால் மறுக்கும் பொழுது, அன்புச் சூழலை உடைய நல் ஒழுக்கம் அங்கே நிலைபெறும்.





# ஐரோப்பா - 13

காலத்தைக் கடந்து செல்வது தியானம். எண்ணம் பயணம் செய்யும் தொலைவே காலமாகும். இப்பயணம் எக்காலத்தும் பழைய பாதையிலேதான் – ஆனால், புதிதாக மெருகேற்றப்பட்ட பாதை. புதிய தோற்றம். ஆனால், எங்குமே அழைத்துச் செல்லாத பாதை – அது அழைத்து வருவதோ துன்பமும் துயரமும்.

மனம் காலத்தைக் கடக்கும் போது உண்மை என்பது நுண்பொருளாவதில்லை. அப்பொழுது பேரின்பம் என்பது இன்பத்தில் விளைந்த கருத்தாகாது. உண்மையிருப்பையுடையது. ஆனால் சொற்களால் வர்ணிக்கப்படாதது.

மனத்தை காலத்திலிருந்து காலி செய்வதே உண்மை எனும் மௌனம். இதை காண்பதே செயல். ஆகவே காண்பது, செயல்படுவது என்ற பிரிவு இல்லை. காண்பதற்கும், செய்கைக்கும் உள்ள இடைவெளியில் விளைவது முரண்பாடு, சிக்கல், குழப்பம். காலமற்ற ஒன்றே என்றுமிருப்பது.

ஒவ்வொரு மேசை மீதும் டாஃபடில் மலர்கள். இளமையானவை, புத்தம் புதியவை, அன்றே தோட்டத்திலிருந்து பறிக்கப்பட்டவை. அவை இளவேனிலின் மலர்ச்சியைத் தம்மிடத்தே கொண்டு காட்சியளித்தன. பக்கத்திலிருந்த மேசையில் நீல அல்லி மலர்கள், பாலாடையும், வெள்ளையும் கலந்த நிறம், மஞ்சள் உள்ளங்களோடு காணப்பட்டன. இந்த வெண்மையையும்,

பளிச்சென்ற மஞ்சள் நிறத்தையும் அம்மலர்களிடையில் பார்க்கும் போது, எல்லையற்று விரிந்து மௌனமாக இருக்கும் நீலவானின் உணர்வு ஏற்பட்டது.

எல்லா மேசைகளிலும் உரத்த குரலுடன் பெரிதான சிரிப்புடனும் கூடிய மனிதர்கள். ஒரு மேசையில் இருந்த பெண்மணி யாரும் காணாதபடி தான் சாப்பிட முடியாத மாமிசத் துண்டத்தை தன் நாய்க்கு ஊட்டிக் கொண்டிருந்தாள். எல்லோரும் அதிக அளவில் உணவு கொண்டனர். மனிதர்கள் சாப்பிடுவதைப் பார்ப்பது இனிமையான காட்சியன்று. பொதுவிடத்தில் சாப்பிடுவதே காட்டுமிராண்டித்தனமாக தோன்றியது. அறைக்கெதிரில் இருந்த மனிதன் தன் மேசையை உணவினாலும், மதுவினாலும் நிரப்பி வைத்துக் கொண்டிருந்தான். சுருட்டொன்றை பற்றவைத்த பொழுது ஒரு பெரிய அழகை கண்டது போன்ற சாயல் முகத்தில் ஏற்பட்டது. அவனைப் போன்றே பருமனான அவன் மனைவியும் ஒரு சிகரெட்டை பற்ற வைத்தாள். இருவரும் உலகத்திலிருந்து விடுபட்டு வேறெங்கோ இருந்ததான தோற்றம்.

ஒருவராலும் கவனிக்கப்படாது அம்மஞ்சள் டாஃபடில் மலர்கள் அங்கே இருந்து கொண்டிருந்தன. அவை அலங்காரத்திற்காக வைக்கப்பட்டிருந்தன. அது பொருத்த மற்றதாக தோன்றியது. ஆனால், அவற்றை நோக்கிக் கொண்டேயிருக்கையில் கூச்சல் நிறைந்த அந்த அறை முழுவதையுமே அவை நிறைத்தன. கண்ணின் மீது வண்ணம் விளைவிக்கும் செயல் விந்தையானது. கண் அவ்வண்ணத்தைத் தன் உள்ளாக்கிக் கொள்வதில்லை. அவ்வண்ணமே நம்மிருப்பை ஊடுருவி நிறைந்தது. வண்ணமே நாம்; நாம் அவ்வண்ணமாக ஆகவில்லை. நாம் அடையாளமும் பெயருமற்று அதனுடையதாகவே இருந்தோம். அதுவே பெயரும் உருவமுமற்றபொழுதுள்ள கள்ளமில்லாத் தன்மை. அடையாளமற்ற நிலை

எங்கில்லையோ அங்குதான் எல்லாவித உருவங்களும் கொண்ட வன்முறை ஆட்சி செய்யும்.

நாம் உலகம், புகை சூழ்ந்த அவ்வறை, மனிதன் இழைக்கும் கொடுமை, இரத்தம் தோய்ந்த சிவப்பு மாமிசம் இவற்றையெல்லாம் ஒருங்கே மறந்தோம். வடிவழகிய டாஃபடில் மலர்கள் நம்மை காலங்கடந்த ஓரிடத்திற்கு அழைத்துச் சென்றதே போல் தோன்றியது.

அன்பும் அவ்விதமே. அதில் நேரம், இடம், இடுகுறி இவை இல்லை. இடுகுறி துன்பத்தையும் இன்பத்தையும் வளர்க்கும்; இடுகுறியே வெறுப்பையும், போரையும் வரவழைக்கும். மனிதரிடையும், ஒவ்வொரு குடும்பத்திடையும், ஒவ்வொருவரையும், ஒவ்வொரு சமூகத்தையும் சுற்றி சுவரை எழுப்பும். மனிதன் அச்சுவரைத் தாண்டி மற்றொருவனை சந்திக்கிறான். ஆனால், அவனும் சுவர் என்ற சூழலில் உள்ளவனே; இவையிரண்டையும் இணைக்கும் பாலம் சமூக நெறி. ஆகவே அது பயனற்றதாகவும் அருவருப்புள்ளதாகவும் ஆகிறது.

அன்பு அவ்வாறில்லை. எதிரில் இருக்கும் வனத்தைப் போன்றது. எப்பொழுதும் புத்துயிருடையது. ஏனெனில், எப்பொழுதும் இறந்து கொண்டே இருப்பது. அதில் எண்ணம் தேடும் நிலையான இருப்பு என்பதில்லை. எண்ணத்தினால் புரிந்து கொள்ளவும், தீண்டவும், உணரவும் முடியாத ஓர் ஓட்டம் அது. எண்ணத்தினுடைய உணர்வும் அன்பின் உணர்வும் வெவ்வேறானது; ஒன்று அடிமைத் தனத்திற்கு அழைத்துச் செல்லும், மற்றொன்று நன்மையின் மலர்ச்சிக்கு அழைத்துச் செல்லும். இம்மலர்ச்சி எவ்வித சமூகத்தினுடையதும் எவ்வித மெய்ந்நெறியுடையதுவும் பண்பாட்டினுடையதுமான பரப்பிற்கு உட்பட்டதன்று. அடிமைத் தளையோ எல்லாச் சமூகத்திற்கும், மதச்சார்பான நம்பிக்கைகளுக்கும், ஒரு மனிதரிடத்தில் வைக்கும் நம்பிக்கைகளுக்கும் சொந்தமானது. அன்பு பெயர், உரு

அற்றது. ஆகவே வன்முறையற்றது. இன்பம் வன்முறை உடையது. ஏனெனில், அவாக்களும், தன் விருப்பின் நிறைவேற்றங்களுமே இன்பத்தில் திளைப்பவை. அன்பை எண்ணத்தினாலும், நன்மை தரும் தொழில்களாலும் அடைய முடியாது. எண்ணத்தின் நடைமுறையை முற்றிலும் மறுப்பது செயலின் அழகாகும். அதுவே அன்பு. இதைத் தவிர மெய்ப்பொருளின் நல்லாசி என்பது வேறொன்றும் இல்லை.

அதோ அங்கே மேசை மீது டாஃபடில் மலர்கள்!





# ஐரோப்பா - 14

நல்லாசியின் பள்ளியெழுச்சியே தியானம். புலன்களுக்கு உரித்தானது. ஆனால், அதை கடந்து செல்லக்கூடியது. அதற்குத் தொடர்ச்சி இல்லை. ஏனெனில் அது காலத்தினுடையதன்று. ஓர் உறவில் ஏற்படும் மகிழ்ச்சியும், களியாட்டமும், மண்ணை பெயர்த்தெடுத்துக் கொண்டு போவது போன்ற மேகமும், இளவேனிலின் ஒளியுண்ட புதிய துளிர்களும், கண்ணிற்கும் மனத்திற்கும் பெரு மகிழ்ச்சியை ஊட்டுவன. இம்மகிழ்ச்சியை எண்ணம் பயிரென வளர்த்து தன் நினைவில் அதற்கு இடம் வகுத்துக் கொடுக்கவும் இயலும். ஆனால் இவை ஆழ்ந்த புலனுணர்வுகளை தன்னுள் கொண்டதான தியானத்தின் நல்லாசிகளாக மாட்டாது. எண்ணத்தினால் திரித்து மாற்றப்படாமலும், சமூக நெறிகளுக்கும், சமூகத்திற்கும் இணங்கி கீழ்படிதலுமில்லாமல் புலனுணர்வுகள் கூர்மையாக இருத்தல் வேண்டும். புலனுணர்வின் விடுதலை என்பது அவைகளுக்குச் சலுகை காட்டி இடங்கொடுப்ப தாகாது. அவ்வாறு சலுகை வழங்கினால் அது எண்ணத்தின் இன்பமாகும். எண்ணம் நெருப்பை சூழ்ந்துள்ள புகையைப் போன்றது. கண்ணீரை வரவழைக்கும் புகையற்ற நெருப்பே நல்லாசி. இன்பம் வேறு, நல்லாசி வேறு. இன்பம் எண்ணத்தின் அடிமைத்தளை; நல்லாசியோ எண்ணத்திற்கு மேலும், அதற்கப்பாலும் கடந்து செல்லும் ஒன்று. எண்ணத்தையும் அதன் இன்பத்தையும், அவை வகுக்கும் சமூக நெறிகளையும், கீழ்ப்படிதலால் விளையும் சுகத்தையும் நன்கு புரிந்து கொள்வதே தியானத்தின்

அடிப்படை. காலமும் அதன் நீடிப்பும் தியானத்தின் நல்லாசியன்று. தியானம் இவையிரண்டையும் கடந்தது. ஆகவே அளவிட முடியாதது. காட்சியைத் தேக்கி வைக்கும் கண்களில் தியானத்தின் களியாட்டம் இல்லை, அது எண்ணுவோன் துய்க்கும் பொருளுமன்று.

எண்ணத்தின் சொற்களும், சின்னங்களும் அவை விளைவிக்கும் குழப்பங்களும் அதைத் தீண்ட முடியாது. எண்ணத்தில் வேரூன்றிக் கொண்டு எண்ணத்தினாலேயே உருவமடையும் சொல்லுமன்று, முழுமையான மோனத்திலிருந்து வருவதே இந்நல்லாசி!

அழகான காலை, வேகமாக ஓடும் மேகங்கள், தெளிவான நீல வானம், மழை பெய்ததால் காற்று தூய்மையாய் இருந்தது. ஒவ்வொரு இலையும் புதியதாகத் தோன்றியது. அக்கொடுமையான பனிக்காலம் முடிவுற்றது; சென்றாண்டு இளவேனிலின் இலைகளுடன் ஒருவிதத் தொடர்பும் இல்லை என்பதை ஒளியிடும் வெய்யிலில் மிளிர்ந்த அப்புதிய இலைகள் நன்கு அறியும். வனத்தினுள் சென்று பெரிய ராஜபாட்டையை அடைந்த அந்த ஈரப் பாதை மீது, புதிய துளிர் இலைகளில் ஊடுருவிய சூரிய ஒளி, மென்மையான பச்சை நிழலை ஏற்படுத்தியது.

அங்கே குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தனர் - ஆனால், அழகிய இளவேனில் நாளை அவர்கள் நோக்கவில்லை. அதைப் பார்க்கவும் தேவையில்லை - அக்குழந்தைகளே இளவேனில் தானே! அவர்களுடைய சிரிப்பும், விளையாட்டும் அங்குள்ள மரத்தின் இலைகளின், பூக்களின் ஒரு பகுதியாயின. இதை உணர்ந்தோம் - கற்பனையன்று. அவ்விலைகளும், பூக்களும், அச்சிரிப்பிலும், கும்மாளத்திலும், பறந்து சென்ற பலூன்களிலும் பங்கு கொண்டன. புற்கள், மஞ்சள் டாண்டிலியான், ஊறுபடுந் தன்மையுள்ள மெல்லிய இலை, இவை யாவுமே

குழந்தைகளின் ஒரு பகுதியாயின. குழந்தைகளோ உலகின் ஒரு பகுதியாயினர். மனிதனையும் இயற்கையையும் பிரிக்கும் கோடு மறைந்து போனது; குதிரைப் பந்தயத்திலிருந்து திரும்பும் மனிதனும், கடை கண்ணியிலிருந்து திரும்பும் அப்பெண்மணியும் இதைச் சிறிதும் உணரவில்லை. அவர்கள் அந்த வானத்தையும், நடுங்கிக் கொண்டிருக்கும் அந்த இலையையும் வெண்ணிற லைலக் மலர்களையும் கவனிக்கவில்லை. அவர்கள் தங்கள் சிக்கல்களையெல்லாம் உள்ளத்தில் தாங்கிக் கொண்டிருந்தனர். அந்த உள்ளமோ அங்குள்ள குழந்தைகளையும் அந்த ஒளியுடன் கூடிய இளவேனில் நாளையும் சிறிதும் பார்க்கவில்லை. இவர்களால் வளர்க்கப்பட்ட குழந்தைகள்-அவர்களும் வெகு சீக்கிரமே பெரியவர்களாகி, அந்தக் குதிரைப் பந்தய மனிதனையும் கடை கண்ணிக்குச் செல்லும் இந்த அம்மணியையும் போல் ஆகிவிடுவர். இது மிக இரங்கத்தக்கது. உலகமும் இருண்டதாக ஆகும். முடிவடையாத துயரம் இதில் தான் இருக்கிறது. அந்த இலையில் படிந்திருக்கும் அன்பு, இலையுதிர்காலம் வரும்போது பறக்கடிக்கப்படும்.

அவர் இளைஞர்.மனைவியும் குழந்தையும் உண்டு. அவர் உயர்ந்த கல்வியுள்ளவர், புத்திசாலி, சொற்களைக் கையாளுவதில் திறமையுடையவர். ஒல்லியான ஒடிந்த தேகம், கால்களைச் சரிவர மடக்கியும், கைகளைக் கட்டி மடி மீது வைத்தும், சூரிய ஒளியில் பளபளத்த மூக்கு கண்ணாடியுடன் நாற்காலியில் நன்றாக அமர்ந்திருந்தார். அவர் எப்பொழுதும் ஆன்மீக வழியில் உள்ள உண்மைகளைத் தவிர, சொற்களையும், அதன் கட்டமைப்புகளையும் கடந்து நிற்கும் உண்மைகளையும் நாடி உணர விழைத்தார்.

நீர், மனக்குறை உண்டானதால் இவ்வாறு நாடி விழைகிறீரா?

''இல்லை, நான் மனக்குறையுடையவன் இல்லை. எல்லா மனிதரையும் போல நானும் சற்று அதிருப்தியுள்ள

வனே. ஆனால் தேடியலைவது அதனால் அல்ல. இது பூதக் கண்ணாடி வழியாகவும் தொலை பார்க்கும் கண்ணாடி வழியாகவும் தேடும் ஆராய்ச்சியன்று; மற்றும் பாதிரி தனக்குகந்த கடவுளைக்காணும் பொருட்டுத் தேடும் அலைச்சலும் அல்ல. நான் எதைத் தேடுகிறேன் என்று கூற வும் முடியாது; அதைச் சுட்டிக் காட்டவும் இயலாது. இது என்னுடனேயே பிறந்த ஒன்று என எண்ணுகிறேன். என் மண வாழ்க்கை மகிழ்வுடையது என்றாலும் இந்த வேட்கை நடந்து கொண்டே இருக்கிறது. இது ஒரு தப்பும் வழியன்று. என்ன தேடுகிறேன் என்பதே எனக்குத் தெரியாது. சாமர்த்யமுள்ள ஆன்மீகவாதிகளிடமும், தத்துவவாதிகளிட மும், மெய்ந் நெறியில் ஈடுபட்ட கிழக்கத்திய மிஷனரிகளிட மும் இதைப் பற்றி நிறையப் பேசியிருக்கிறேன். அவர்களனைவரும் இந்த ஆராய்ச்சியையும், தேடுவதையும் தொடர்ந்து நடத்தும்படி கூறியுள்ளார்கள். இவ்வளவு ஆண்டு களுக்குப் பிறகு அது சற்று தொல்லையாக இருக்கிறது.''

ஒருவர் தேட வேண்டுமா? தேடப்படுவது எப்பொழுதும் மறுகரையிலுள்ளது - காலத்தின் நெடிய அடிக்கோல் கொண்டு அடையும் அத்தொலைவில் உள்ளது. தேடுவதும், கண்டுபிடிப்பதும் வருங்காலத்தில் - அதோ அந்தக் குன்றங்களுக்கு அப்பால். இதுவே தேடுவது என்பதின் உள் பொருள். நிகழ்வு இப்பொழுதே - கண்டுபிடிக்க வேண்டிய பொருளோ எதிர்காலத்தில். நிகழ்வு சரியாக இல்லாததால், உயிருடையதாக இல்லாததால், தூரத்தில் குன்றுகளுக்கு அப்பால் உள்ளவை வசீகரமாகவும், அடையப்பட வேண்டியதாகவும் ஆகின்றன. விஞ்ஞானி, தன் பூதக் கண்ணாடிக்குள் மூழ்கிப் போகையில் சுவரிலுள்ள எட்டுக்கால் பூச்சியை அவன் பார்ப்பதில்லை. அவன் வாழ்வின் வலை அப்பூதக் கண்ணாடிக்குள் தெரியாததாயி னும் அவன் தன் இன்றைய வாழ்க்கையைப் பார்ப்பதில்லை.

''ஐயா! தேடுவதில் பயனொன்றுமில்லை என்றா கூறுகிறீர்? எதிர் காலத்தில் நம்பிக்கை என்பது இல்லையா?

எல்லாக் காலமும் நிகழ்வில்தான் உள்ளது என்றா சொல்கிறீர்?''

எல்லா வாழ்வும் இப்பொழுதான், நேற்றைய நிழல்களிலும், நாளை வரப்போகும் ஒளிபெற்ற நம்பிக்கையிலும் இல்லை. நிகழ்வில் வாழ்வதற்கு சென்ற காலம், எதிர்காலம், இவையிரண்டிலிருந்துமே விடுதலை தேவை. நாளை என்பது ஒன்றுமில்லை, அதுவும் இன்றேதான். நேற்று என்பதும் ஒரு நினைவே. தேடுவதும் ஆராய்வதும் எவ்வளவு இனிமையாகவும், ஆறுதலளிப்பதாகவும் இருந்தாலும் கண்டுபிடிக்க வேண்டிய பொருளுக்கும், 'இருப்ப'தற்கும் உள்ள இடைவெளியானது தேடுவதால் மிகுதியாகிக் கொண்டே போகும்.

இடைவிடாது வாழ்க்கைக்குப் பொருளொன்றைத் தேடுவது மனிதன் தப்பி ஓடும் பழமையான ஒருவழி. அவன் தேடுவது கிடைக்குமானால் அதன் மதிப்பு கூழாங் கல்லுக்கும் சமமாக இருக்காது. நிகழ்வில் வாழ்வதற்கு, நேற்றைய நினைவு, நாளைய ஒளியுள்ள எதிர்காலம் என்ற நம்பிக்கை என்று பிரித்தலாகாது. நிகழ்வொன்றே! நாளை, நேற்று என்பதொன்றுமே கிடையாது. இது புலமையின் சொற்கள் அன்று; முற்றிலும் உண்மை. கற்பனைக்கும், செய்யுள் புனைவதற்கும் - நிகழ்வின் நடப்பில் இடம் இல்லை. இதனால் அழகு என்பதை நாம் மறுக்கவில்லை.- ஆனால், அன்பு எனும் அழகு நிகழ்விலேயே உள்ளது - இது தேடுவதில் இல்லை.

''தேடுவதில் பல்லாண்டுகள் வீண் செய்ததையும், என்னையும் மற்றவரையும் பல கேள்விகள் கேட்டுக் கொண்டதையும், அந்த வீண் மறுமொழிகளையும், இப்பொழுதுதான் காணத்தொடங்குகிறேன்.''

முடிவுதான் தொடக்கம். தொடங்குவதே முதல் அடி. அந்த முதல் அடியே எடுத்து வைக்க வேண்டிய ஒரே அடி.



## ஐரோப்பா - 15

அவர் வெளிப்படையான பேச்சுள்ளவர், உற்சாகமும் துடிப்பும் உள்ளவர். நிறைய படித்தவர், பல மொழிகளைப் பேசுந்திறனுண்டு. கீழ்நாடுகளுக்குச் சென்றுள்ளார். இந்திய தத்துவங்களையும் சற்று அறிந்தவர். தூய நூல்களைப் படித்தும் சில குருக்களையும் பின்பற்றி உள்ளார். காலை ஒளியில் சிரித்துக் கொண்டிருக்கும் அப்பசும் பள்ளத்தாக்கு களை நோக்கிய இந்தச் சிறிய அறையில் அவர் அமர்ந்திருந் தார். பனிச் சிகரங்கள் பளபளத்துக் கொண்டிருந்தன. பெரிய மேகங்கள் மலைக்கு மேல் வந்து கொண்டிருந்தன. நாள் நன்றாக இருக்கும் எனத் தோன்றியது. அந்த உயரத்தில் காற்று தூய்மையாய் இருந்தது. ஒளி ஊடுருவியது. வேனிற்காலத்தின் தொடக்கம். காற்றில் சற்றே இளவேனிலின் குளிர். சிறப்பாக இந்த காலத்திற்குரித்தான அமைதி, மாட்டின் மணியோசை, பைன் மரங்களின் நறுமணம், புதிதாக வெட்டிய புற்களின் மணம் கொண்ட அமைதியான பள்ளத்தாக்கு. குழந்தைகள் கூச்சலிட்டு விளையாடிக் கொண்டிருந்தனர். அதிகாலையில் காற்றிலே பெருமகிழ்ச்சி, மண்ணின் அழகு புலன்கள் மீது படிந்தது. நீல வானையும் பசுந்தரையையும் கண் நோக்கியது. அங்கே கொண்டாட்டம்.

''நடத்தை என்பதே நன்னடத்தை என்று நீங்கள் முன்பு கூறியிருக்கிறீர். பல நாடுகளிலும் உம்முடைய பேச்சுக்களை நான் கேட்டுள்ளேன். உம்முடைய போதனையையும் புரிந்து கொண்டிருக்கிறேன். அதை வாழ்க்கையில் கடைப்பிடிக்க

முயலவில்லை. ஏனெனில், அவ்வாறு செய்வது மற்றொரு விதமாக 'ஆகுவதும்' ஒன்றைப் பின்தொடருவதும், புதிய தான ஒரு கொள்கையைப் மேற்கொள்வதும் ஆகும். இதனால் ஏற்படும் அபாயத்தை உணர்கிறேன். நீர் கூறியதைப் பெரும்பாலும் எடுத்துக் கொண்டுள்ளேன். அது என்னுடைய ஒரு பகுதியாகவே இருக்கிறது. விடுதலை யோடு செயல்புரிவதை இது தடை செய்யக்கூடும் என்று பலமுறை நீங்கள் வலியுறுத்தியுள்ளீர். ஒருவருடைய வாழ்க்கை விடுதலையுள்ளதாகவும், இயற்கையாகவும் இருப்பது என்பது எப்பொழுதுமில்லை. அன்றாட வாழ்க்கையை வாழ்ந்தேயாக வேண்டும் - நானே எனக்கென்று ஏற்படுத்திய ஒரு முன்மாதிரியைக் காரணமின்றி பின்பற்றக் கூடாது என்ற விழிப்புணர்வுடன் இருக்கிறேன். ஆக நான் இரட்டை வாழ்க்கை வாழ்வதாகத் தெரிகிறது. ஒருபுறம் அன்றாட வேலைகள், குடும்பம், தொழில். மற்றொருபுறம் நான் மிக அக்கறை கொண்டுள்ள உம் போதனைகள். உம் போதனையைப் பின்பற்றினால், கத்தோலிக்கரைப் போலவே ஒருவித மதக்கொள்கைக்கு இணங்கி வாழ்வதாகும். உம்முடைய போதனைப்படி வாழும்போது அன்றாட வாழ்க்கையின் செயல்கள் எதிலிருந்து ஏற்படுகின்றன? தவிர, ஒன்றிற்கும் இணங்கி வாழாமல் இருப்பது எவ்வாறு? என்ற கேள்வி எழுகிறது. உம்முடைய போதனைப்படியும் வாழ வேண்டும். அதற்கு இணங்குதலும் ஆகாது. அவ்வாறு இருக்க அன்றாட வாழ்க்கையின் அடிப்படை என்ன? என்கிற கேள்வி எழுகிறது.''

ஆசிரியரையும், அவர் போதனையையும், வேறு மாதிரி வாழ நினைக்கும் சீடரையும் ஒருமிக்க தள்ளி வைக்க வேண்டியது அவசியம். கற்பது ஒன்றே உ_ள்ளது. கற்பதே செய்கை. கற்பது என்பது செய்கையிலிருந்து வேறுபட்ட தன்று. அவ்வாறானால், கற்பது என்பது ஒரு எண்ணமாகவும் அல்லது குறிக்கோளாகவும், அவைகளுக்கு ஏற்றவாறு

நடப்பதே செய்கையாகவும் ஆகும். ஆனால், கற்பதென்பது உண்மையில் முரண்பாடற்ற செய்கையே. இதை நன்குணர்ந்தால் வேறு கேள்வி ஒன்றும் எழாது. கற்பது என்பது ஒரு கருத்தோ நுண்பொருளோ அல்ல. உண்மை யிலேயே ஒன்றைப் பற்றி தெரிந்து கொள்வது. செய்கையில்லாமல் கற்பது என்பதில்லை. நீர் உம்மைப் பற்றி உமது செயல் வழியாக அன்றி அறிந்து கொள்ள முடியாது. முதலில் அறிந்து கொள்ளுதல் பிறகு அந்த அறிவைக் கொண்டு செயல்படுதல் என்பது சரியல்ல. அவ்வாறானால் செயல் என்பது மற்றொருவரைப் பின்தொடருவதும், நீர் சேர்த்து வைத்த அறிவுக்கு இணங்கி நடப்பதும் ஆகும்.

''ஐயா! ஒவ்வொரு நொடியும் ஏதாவதொரு விதத்தில் ஒரு சூளுரையாக இருக்கிறது. நான் அவற்றிற்கு எப்பொழுதும் போலவே மறுமொழி கொடுக்கிறேன். பல முறையும் 'மறுமொழி' என்பதன் பொருள் 'முரண்பாடு' என்றாகிறது. நீர் கூறும் கல்விக்கும் அன்றாட வாழ்க்கைக்கும் உள்ள பொருத்தம் என்ன என்பதைப் புரிந்து கொள்ள விரும்புகிறேன்.''

சூளுரை என்பது எப்பொழுதும் புதிது. அவ்வாறு இல்லையென்றால் அது சூளுரையாகாது. ஆனால், மறுமொழி பழமையில் வாழ்வது. ஆகவே பற்றாக்குறையுள்ளது. அதுவே முரண்பாட்டின் காரணம். இதைப் பற்றி அறிந்து கொள்ள என்ன இருக்கிறது என்று நீர் வினவுகிறீர். மறுமொழிகளைப் பற்றி அவை எங்கிருந்தும் எவ்வாறும் தம் இருப்பைப் பெறுகின்றன; அவற்றின் சூழ்நிலை, வரைபாடுகள் இவற்றையெல்லாம் கற்கிறீர். ஆக மறுமொழியைப் பற்றியும் அதன் முழுமையான அமைப்பையும், அதன் தன்மையையும் பற்றி கற்கிறீர். இவ்வாறு கற்பது சேர்த்து வைத்துக் கொண்ட அறிவிலிருந்து ஏற்படும் மறுமொழியைத் தராது. கல்வியானது தேக்கி வைத்த அறிவில் பாய்ச்சிய நங்கூரம் போன்றதன்று.

அவ்வாறு நங்கூரம் பாய்ச்சி நிறுத்தி வைத்தால் அது ஓட்டமாகாது. இயந்திரமும் கம்ப்யூட்டரும் நங்கூரத்தினால் நிற்பவை. இதுவே மனிதனுக்கும், இயந்திரத்துக்கும் உள்ள வேற்றுமை. கற்பது என்றால் கண் விழித்திருப்பதும் காண்பதுமாம். நீர் தேக்கிய அறிவிலிருந்து நோக்கினால் - காண்பதென்பது எல்லைக்குட்பட்டதாக இருக்கும். அப்பார்வையில் புதியதொன்றும் இராது.

''மறுமொழியின் முழு அமைப்பை கற்கிறோம் என நீர் கூறுகிறீர். இதிலிருந்து தேக்கி வைத்ததான பரிமாணமுள்ள அறிவொன்று இருப்பதாகக் காண்கிறது. மற்றொருபுறம், நீர் கூறும் கற்பது என்பது எளிதான ஓட்டம் உடையது என்றும், தேக்கி வைக்க முடியாததென்றும் அல்லவா ஏற்படுகிறது.''

நம்முடைய கல்வி முறையே அறிவை தேக்கி வைப்பதாகிறது - கம்ப்யூட்டரோ இவ்வேலையை பிழையில்லாமலும் வேகமாகவும் செய்கிறது. கல்வியின் தேவைதான் என்ன? மனிதனின் பல அலுவல்களை கம்ப்யூட்டர் எடுத்துக் கொள்ளப்போகிறது. நீரும், மற்ற மனிதர்களைப் போன்றே கல்வி என்பது பரிமாணமுள்ள தேக்க அறிவு தானே என்று கூறுகையில், வாழ்க்கையின் ஓட்டமான நடத்தை, உறவு இவற்றை மறுக்கிறீர் அன்றோ? இந்த உறவும், நடத்தையும் முன்பறிந்த அனுபவத்தின், அறிவின் அடிப்படை என்றால் உண்மையில் உறவு என்பது இருக்க முடியுமா? எல்லாவிதத் தொடர்புகளுடன் கூடிய நினைவு உண்மையான உறவின் அடிப்படையாக ஆகக் கூடுமா? நினைவு என்பது சின்னங்கள், உருவத் தோற்றங்கள், சொற்கள். இவற்றின் அடிப்படையில் உம் உறவை ஏற்படுத்தினால் அது உண்மை உறவை அழைத்து வருமா?

நான் முன் கூறியதுபோல், வாழ்க்கை என்பது உறவின் முறை என்ற ஓட்டம், அந்த உறவு சென்ற காலத்திலும், நினைவிலும் ஊன்றியிருந்தால், அதனுடைய ஓட்டம்

அளவிற்குட்பட்டதாகும், துன்பத்தையும் விளைவிக்கும்.

''நீர் கூறியதை நன்கு புரிந்து கொண்டேன். ஆனால், மறுபடியும் எதிலிருந்து செயல்புரிய வேண்டும்? என வினவுகிறேன். நீர் மறுமொழியின் முழுமையான நிறுவனத்தை சரிவரக் காண்பதே கற்பது என்றும் அதே சமயம் உண்மையில் கற்பதென்பது தேக்கி வைத்த அறிவை விலக்குதல் என்று கூறுவதும் ஒன்றுக்கொன்று முரண்பாடானது அன்றோ?''

இந்தக் கட்டிடத்தை, நிறுவனத்தைக் காண்பது என்பது உயிருடையது, ஓட்டமுள்ளது. நிறுவனத்துடன் காண்பான் ஒன்றிப் போகையில், காண்பதைக் காட்டிலும் நிறுவனம் சிறப்புடையதாகிறது. இதுவே வாழ்க்கை. இதில் முரண்பாடொன்றும் இல்லை. காண்பது, நிறுவனத்தின் தன்மையைக் காட்டிலும் முக்கியமானது. நாம் கூறுவது இதுவே. நீர், நிறுவனத்தைப் பற்றி கற்பதற்குக் காண்பதைக் காட்டிலும் தனிச்சிறப்பை கொடுக்கும்பொழுது, முரண்பாடு உண்டாகிறது. அப்பொழுது காண்பது ஒன்று, நிறுவனத்தைப் பற்றி அறிவது மற்றொன்று என்றாகிறது.

எந்நிலையிலிருந்து ஒருவர் செயல்புரிய வேண்டும் என வினவுகிறீர்? அவ்வாறு நிலையொன்று இருக்குமானால், அது நினைவு, தேக்கி வைத்த அறிவு என்பதாகும், எனவே அதாவது சென்ற காலத்திலே இருப்பது. நாம் கூறியது, காண்பதே செயல்; இவையிரண்டும் வேறன்று. காண்பது எக்காலத்தும் புதியது. ஆகவே செயலும் எக்காலத்திலும் புதிது. ஆகவே அன்றாட மறுமொழியைக் காண்பது புதியதை அழைத்து வரும், இதையே நாம் இயற்கையாய் நிகழ்வது என்று கூறுகிறோம். சினம் வருகையில் அதை நாம் கோபம், சினம் என்ற சொல் கொண்டு உணர்வதில்லை. சிறிது நேரம் சென்ற பின்னரே நாம், கோபமாக இருக்கிறோம் என்றுணர்கிறோம். இவ்வாறு கோபத்தைப் பார்ப்பது தேர்தலற்ற விழிப்புணர்வுடனா அன்றி பழைய

அடிப்படையில் இருந்து தோன்றும் மறுமொழியா? பழைமையின் அடிப்படையில் தோன்றியதானால், அந்த மறுமொழிகள் சினத்தைப் பற்றியதான அடக்கி வைத்தல், கட்டுப்படுத்தல், அதைச் சலுகை கொடுத்து வளர்ப்பது என்ற பண்டை மரபிலே விளைந்த செயல்களே. தேர்தலற்று காணும்பொழுது, இருப்பது புதுமை ஒன்றே.

இவற்றிலிருந்து ஒரு அறிவைத் தூண்டும் சிக்கலொன்று எழுகிறது. நம்முடைய அன்றாட வேலைகளிலிருந்து விழித்தெழுப்பவும், மரபுரிமையிலிருந்தும், சமூக நிறுவனத்தின் கட்டுப்பாட்டிலிருந்தும், உதிரம் சிந்தும் புரட்சிகளாலும், அன்றி வேறுவிதமான கிளர்ச்சிகளாலும் நம்மை வெளியே இழுக்கவும் சூளுரைகளே ஒருவித சார்பாக ஆகின்றன.

''மனம் சூளுரைகளில் சாராமல் இருப்பது கூடுமா?''

மனம் இடைவிடாது மாறுதல்களில் இருக்கும்பொழுதும், நிம்மதியாக ஓரிடத்தை அடையாமலும், பாதுகாப்பான அடைக்கலம் கொள்ளாமலும், தன் தேவைக்கேற்றபடி உரிமைகளையும், வாக்குறுதிகளை ஏற்காமலும் இருக்கையில், மனம் சூளுரைகளைச் சாராமல் இருக்கும். விழித்தெழுந்த மனத்திற்கு - ஒளியுள்ள மனதிற்கு சூளுரைகளின் தேவைதான் என்ன?



## ஐரோப்பா - 16

மோனத்தின் செயலே தியானம். கருத்தொன்றிலிருந்தும், அறிவிலிருந்தும், முன்கூட்டியேயுள்ள முடிவுகளிலிருந்தும், வரப்போவதை முன்கூட்டியே ஊகிப்பதிலிருந்தும் நாம் செயல்படுகிறோம். இதுவே, ''இருப்பது'', ''இவ்வாறு இருக்க வேண்டும்'', ''அவ்வாறு இருந்தது'' என்ற முரண்பாடுகளைச் செயலில் உறுதியாக விளைவிக்கிறது. இறந்த காலத்திலிருந்து வெளிப்படும் செயல் என்னும் அறிவானது, இயந்திரம் போன்று இயங்குவது. தன்னை சரிப்படுத்திக் கொண்டு காலத்திற்கேற்ப இணங்கிச் செயல்படுவது. ஆனால், அதனுடைய வேர்கள் ஊன்றி நிற்பது இறந்த காலத்தில்தான். ஆகவே இறந்த காலத்தின் நிழல் நிகழ் காலத்தையும் மூடிக்கொள்ளும். உறவு முறையில் ஏற்படும் செயல்கள் உருவம், சின்னம், பழைய முடிவுகள் இவற்றிலிருந்து வெளிவருவன. அப்பொழுது உறவு என்பது இறந்த காலத்தின் பயன். ஆகவே உறவு என்பது நினைவே – உயிருள்ளதாகாது. இந்தச் சலசலப்பிலிருந்தும், ஒழுங்கின்மையிலிருந்தும், சீர்கெட்ட முரண்பாடுகளிலிருந்தும், செயல்கள் தொடங்குகின்றன. இதிலிருந்து வெடித்து வெளிவருவது பண்பு, கலாச்சாரம், வகுப்புகள், சமூக நிறுவனங்கள், மதசார்பான கொள்கைகள் இவை யாவும். இந்த ஓயாக் கூச்சலிலிருந்து, புரட்சியுள்ள ஒரு சமூக ஒழுங்கு ஏதோ புதியதொரு பொருள் போல உண்டாக்கப்படுகிறது. ஆனால் அறிந்ததிலிருந்து அறிந்தவற்றையே அடைவதால் அது உண்மையில் மாற்றம் ஆகாது. அறிந்தவற்றை ஒழித்தால்தான் மாற்றம் ஏற்படும். அப்பொழுது

செயல் என்பது ஒருவிதக் கோலத்தை பின்பற்றுவதாகாது. இடைவிடாது தன்னைப் புதுப்பித்துக் கொள்ளும் உண்மையான அறிவுக் கூர்மையில் பிறந்ததாகும்.

அறிவுக் கூர்மை என்பது பகுத்தறியுந்திறனும், தீர்ப்புக் கூறுவதும், குறை நிறைகளை ஆராய்ந்து மதிப்பு தருவதும் அன்று. இருப்பதை இருந்தவாறே காண்பதே அறிவுக் கூர்மை. இருப்பது என்பது இடைவிடா மாறுதலையுடையது. காண்பது என்பது இறந்த காலத்தில் வேரூன்றி இருந்தால் காண்பதின் அறிவுக் கூர்மை ஒழிந்து போகும். அப்பொழுது நினைவின் பொறுக்கவொணா அழுத்தமே செயலை விளைவிக்க ஆணையிடும். காணுந்திறன் கொண்ட அறிவுக் கூர்மையாலன்று. இவற்றையெல்லாம் கண்ணோட்டத்தின் ஒரு நொடியில் பார்ப்பதே தியானம். இதைக் காண்பதற்கு மௌனம் தேவை. இந்த மௌனத்தில் செயலுண்டு - ஆனால் இது எண்ணத்தின் செயலிலிருந்து முற்றிலும் வேறானது.

நாள் முழுவதும் பெய்த மழையினால், ஒவ்வொரு இலையும், பூவிதழும் நீரைச் சிந்தின. வெள்ளம் மிகுந்து - தெளிந்த நீர் கலங்கியது. இப்பொழுது அந்த ஓடை கலங்கி வேகமாய் ஓடிற்று. குருவிகள் மட்டுமே சுறுசுறுப்பாக இருந்தன. சில காக்கைகளும், பெரிய கருத்த சளசளப் பறவைகளும் அங்கிருந்தன. மலைகள் மேகத்தால் மறைக்கப்பட்டிருந்தன. தாழ்ந்த குன்றுகளைக் காண்பதரிதாக இருந்தது. சில நாட்களாக மழை இல்லை. காய்ந்த மண்ணில் புதிதாகப் பெய்த மழை பெருமகிழ்ச்சியை அளித்தது. நீங்கள் வெப்ப நாடுகளில் வசித்திருந்தீரானால் மாதக் கணக்காக மாரியற்று, ஒவ்வொரு நாளும் வெப்பமாக வும், ஒளியுள்ள வெயிலில் மண் வறண்டு போன நிலையில், காய்ந்த பழைய மண்ணில் புதியதாக விழுந்த மழைத் துளிகளின் நறுமணத்தையும், அது நம் உள்ளாழ்ந்து, நம் உள்ளத்தில் பெருமகிழ்ச்சியாக ஊடுருவதையும் நுகர்வீர். இங்கு ஐரோப்பாவில் மழையின் மணம் வேறுவிதமானது.

மென்மையாய், வலிமையற்றதாய் அதிக ஊடுருவலும் அற்றது. மென்மையான காற்று வீசி, உடனே அடங்கிப் போவதைப் போன்றது.

மறுநாள், வைகறையின் தெளிந்த நீலவானம்; மேகங்களற்று, மலையுச்சிகளில் பனி பளபளத்தது, பள்ளத்தாக்குகளில் புதிய பசும் புற்றரைகள்; இளவேனிலின் பல்லாயிரம் புத்தம் புதிய மலர்களின் விரிப்பு. சொல்லவொணா அழகு அக்காலையை நிறைத்தது; ஒவ்வொரு புல்லிலும் அன்பு ததும்பியது.

அவர் புகழ் பெற்ற சினிமா டைரக்டர், துளியும் தற்பெருமையில்லை. காண அரிதாக இருந்தது. எதிர்மாறாக மிகவும் தோழமையுடனும், சிரித்த முகத்துடனும் இருந்தார். பல வெற்றிகரமான படங்களைத் தயார் செய்திருந்தார், மற்றவர்கள் அதைப் பார்த்து பின்பற்றவும் செய்தார்கள். எல்லா நுண்ணுணர்வுள்ள டைரக்டர்களைப் போன்றே அவரும் உள்ளாழ் தன்னுணர்வில் அக்கறை கொண்டவர். மிகக் கற்பனையுள்ள கனவுகளையும், முரண்பாடுகளையும், தன் படங்கள் மூலம் வெளிப்படுத்துபவர். ஆராய்ச்சியாளர்கள் கடவுளென நினைக்கும் பொருள்களைப் பற்றி நன்றாகக் கற்றவர். சோதனைக்கென்றே லாஹிரிப் பொருள்களைத் தானே உட்கொண்டு அதைப் பற்றியும் அறிந்தவர்.

மனிதனுடைய மனம் நாம் வாழும் பண்பாட்டினாலும், மரபுரிமையாலும், பொருளாதாரக் கட்டுப்பாட்டினாலும், முக்கியமாக மதச்சார்பான பிரசாரங்களினாலும் கடினமாகக் கட்டுண்டிருக்கிறது. ஒரு சர்வாதிகாரிக்கு அடிமையாக இருப்பதையும், அரசாங்கத்தின் கொடுமையையும் மனம் தீவிரமாக எதிர்த்த போதிலும், மாதா கோவில், பள்ளிவசால்களின் கொடுமைகளுக்கும், மன ஆராய்ச்சியாளர்களின் பிடிவாதமான கொள்கைகளுக்கும் அது தன் மனமுவந்து கீழ்ப்படிகிறது. உதவியற்ற நிலையிலுள்ள துன்பங்களைக் கண்டு, புதியதொரு தூய்மையான தேவனையும், அன்றி

புதிய ஆத்மாவையும் (அது கூடிய சீக்கிரத்தில் வணங்குதற்குரிய தெய்வமும் ஆகிவிடும்) சாமர்த்யமாக உண்டுபண்ணுகிறது.

உலகில் இவ்வளவு பெரிய அதிர்ச்சிகளை ஏற்படுத்திய மனம் தன்னைக் கண்டு அச்சம் கொள்கிறது. விஞ்ஞானத்தின் பொருள் திரட்டும் மனப்பான்மையையும், அதன் நிறை வேற்றங்களையும், அவற்றின் ஆதிக்கம் மனத்தின் மீது மிகையாவதையும் நன்குணர்ந்து, அதனால் புதியதொரு வாழ்க்கைத் தத்துவத்தையும் திரட்டுகிறது; நேற்றையத் தத்துவங்கள், புதியவற்றிற்கு இடங்கொடுக்கின்றன. ஆனால், மனிதனின் அடிப்படைச் சிக்கல் முடிவடை யாமலே இருக்கிறது.

போர், மாறுபட்ட கருத்துக்கள், மிகுந்த தன்நலம் என்ற இக்குழப்பங்களுக்குள்ளே 'இறப்பு' என்பது மையக் கருத்தாக இருக்கிறது. மிகப் பழையனவும், புதியவையுமான மதங்கள், மனிதனைச் சில பிடிவாதமான கொள்கை களாலும், நம்பிக்கைகளாலும், கோட்பாடுகளாலும் கட்டுப்படுத்தி, இதற்கு மறு மொழியைத் தரச் செய்கின்றன. ஆனால், 'இறப்பு' என்பதற்கு எண்ணத்தினால் மறு மொழியைத் தரமுடியாது, அறிவுக் கூர்மையாலும் தர இயலாது. அது மறுக்க முடியாத ஓர் உண்மை. அதைச் சுற்றி வளைத்து தவிர்க்கவும் இயலாது.

'இறப்பு' என்பதை அறிந்து கொள்ள நாம் முதலில் இறக்க வேண்டும். அது மனிதனால் செய்ய முடியாததாகக் காண்கிறது. ஏனெனில், அவன் தான் அறிந்தவற்றிலிருந்து அதாவது தனக்கு மிக நெருங்கியவற்றிலிருந்தும் வேரூன்றிய நம்பிக்கையிலிருந்தும், தானறிந்த தோற்றங்களிலிருந்தும் இறப்பதற்கு அஞ்சுகிறான்.

உண்மையில் நாளை என்பதொன்றுமில்லை. ஆனால், வாழ்வின் இன்றையதற்கும் 'இறப்பு' என்ற எதிர் காலத்திற்கும் இடையே பற்பல நாளைகள் இருக்கின்றன.

இப்பிரிவின் வெளியில் அச்சம், கவலை இவற்றுடன் மனிதன் வாழ்கிறான். தவிர்க்க முடியாத இறப்பிலும் கடைக்கண் வைத்தவாறே மனிதன் வாழ்கிறான். அதைப் பற்றி பேச விரும்புவதில்லையாயினும் அந்தச் சாக்காட்டை தான் அறிந்தவற்றால் அலங்கரிக்கிறான்.

தான் அறிந்த யாவற்றிற்கும் இறப்பது, அதாவது ஒரு தனிப்பட்ட அறிவிற்கும் மட்டும் அன்றி அறிந்தவை யாவுக்கும் இறப்பதே உண்மையில் இறத்தல். எதிர்காலம் எனும் இறப்பை இன்றைய நிகழ்வனைத்தையும் போர்த்தி மூட வேண்டும் என அழைப்பதே முழுமையாக இறத்தல் ஆகும். அப்பொழுது வாழ்விற்கும் இறப்பிற்கும் வெளி கிடையாது. ஆக வாழ்வதே இறத்தல், இறப்பதே வாழ்வு.

இவ்வாறு செய்ய ஒருவனும் விரும்புவதில்லை எனத் தெரிகிறது. இருந்தபோதிலும் அவன் புதுமையை இடைவிடாது நாடுகிறான். ஒரு கையில் பழமையை பிடித்து வைத்துக் கொண்டு மற்றொன்றால் புதுமையை அடைய தவிக்கிறான். ஆகவே இந்த 'நான்' இந்த 'நான் அன்று, 'காண்பான் – காட்சி பொருள், 'இருப்பது', 'எவ்வாறு இருக்க வேண்டும்' என்ற தவிர்க்க முடியாத இரட்டைகளின் முரண்பாடு இருந்து கொண்டேயிருக்கிறது.

அறிந்தவை யாவும் முடிவுறும் பொழுது இந்தக் கிளர்ச்சி முற்றிலும் முடிவடையும். இம்முடிவே இறப்பு. இறப்பு என்பது ஒரு கருத்தன்று, ஒரு சின்னமன்று, தாங்கவொணா ஓர் உண்மை. இன்றைய நாளின் பொருள்களோடு பற்றிக் கொண்டும் (உண்மையில் அவை நேற்றின் விளைவே) எதிர்கால நம்பிக்கை சின்னங்களோடு ஒட்டிக்கொண்டும் இறப்பிலிருந்து தப்ப முடியாது.

'இறப்பிற்கும் இறக்கவேண்டும்; அப்பொழுதான் கள்ளமில்லா உள்ளத்தின் பிறப்பு, காலம் அற்ற ஒரு புதிய 'இருப்பு' உண்டாகும். அன்பு என்றும் புதியது, அன்பை நினைவு கூர்வது அன்பின் இறப்பாகும்.



## ஐரோப்பா - 17

வளமிக்க அகன்ற பெரிய பசுந்தரை, சுற்றிலும் குன்றுகள், அந்தக் காலை ஒளி மிக்கதாய், பனித் துளிகளால் பளபளத்தது. பறவைகள் விண்ணும் மண்ணும் மகிழும் வண்ணம் பண்ணிசைத்தன. மலர் மலிந்த அத்தரை வெளியிலே, ஒரே ஒரு மரம் – தன்னந்தனியாக, நேர்மை யுடன் நிமிர்ந்து நின்றது. அழகான உருவம், அமைப்பான உயரமுடைய அம்மரம் அக்காலையின் பொருள் செறிந்ததாக இருந்தது. ஆழ்ந்த நெடிய நிழல்களை ஏற்படுத்தியது. அம்மரத்திற்கும், நிழலுக்கும் இடையே ஓர் அசாதாரணமான அமைதி நிலவியது. அவை ஒன்றோடு ஒன்று பேச்சு வார்த்தை நடத்தின. மெய் என்பதற்கும், மெய்யற்றதற்கும், உண்மை இருப்புடையதற்கும் அதன் சின்னத்திற்கும் இவ்வாறான ஒரு பேச்சு. அந்த மரம் மாட்சிமையுடையது – சற்றுக் காலந்தாழ்ந்த இளவேனிலின் புதிய துளிர்கள் காற்றில் படபடத்தன. அவை வளமுடையவை, இன்னும் புழுபூச்சிகளுக்கு இரையாகவில்லை. அதன் நேர்மை கவர்ச்சியானது. ஆடம்பர உடைகளால் மூடப்பெற்றதின் மாட்சியன்று. தன்னியற்கையான காட்சியுடன் நிமிர்ந்து நின்றது. மாலையில் தனக்குள் அடங்கிப் போய், அமைதி யுடன் கவலையற்று இருக்கும். சூறாவளி வீசியபோதிலும், கதிரவன் எழுந்ததும், அம்மரமும் உயிர்பெற்று தன் வளமான நல்லாசிகளை அப்புல்வெளி முழுவதும், குன்றுகள் மீதும், மண் முழுவதுமே விரிக்கும்.

அக்காலையில் ப்ளுஜேப் பறவைகள் கூவின. அணில்கள் மும்முரமாக ஓடியாடின. தனிமையிலிருந்த அம்மரத்தின்

அழகு உள்ளத்தை இறுக்கிப் பிடித்தது. கண்களால் காணக்கூடிய அழகன்று; அதன் அழகு அதனுடையதாகவே இருந்தது. நம்முடைய கண்கள் இதைவிட அழகுள்ளவற்றை பார்த்திருந்த போதிலும், இந்த தனி மரத்தையும், அதனுடைய அளவற்ற தன்மையையும், வியக்கவைக்குந் தன்மையையும் பார்த்தன. (பார்த்த கண்கள் – தம் வழக்கமான பார்வையாலன்று) அந்தமில்லாக் கண் கொண்டு பார்த்தவை. அது மிகப் பழமையான மரம், ஆனால், அது முதியது எனத் தோன்றவில்லை. அதன் நிழலடியில், அதன் அடிமரத்தில் வலிமையை உணர்ந்தோம், அதன் மிகுதியான தன்மையையும் உணர்ந்தோம். அதனுடன் பேசவும் கூடும், அதுவும் பலவற்றைப் பற்றி நம்மிடம் பேசியது. பல எறும்புகள் சாரிசாரியாய் ஓடிக் கொண்டிருந்தன. அதன் கடினமான அடிமரத்தை நாம் தீண்டிய போதும், உணர்ந்தபோதும், அது வெகு தொலைவிலிருந்தது போன்ற ஓர் உணர்வு ஏற்பட்டது. இன்று காலையில் அதன் நிழல் தெளிவாக விழுந்தபோது இந்த குன்றங்களையெல்லாம் தாண்டி மற்றும் அப்பாலுள்ள குன்றங்கள் மீதெல்லாம் பரவிப் படர்ந்ததே போன்ற தோற்றம். உமக்கு தியானம் செய்யத் தெரிந்தால் இதுவே உண்மையில் அதற்கேற்ற இடம். அமைதியின் மிகுதி – நம்மனம் கூர்மையாகவும் தெளிவாக வும் இருந்ததால் அதுவும் அமைதியானது. சூழ்நிலையால் பாதிக்கப்படாமல், அந்த ஒளிமிக்க காலையின் ஒரு பகுதியாகவும் புல்லின் மீதும் கோரைகள் மீதும் படிந்த பனித்துளிகளினுடைய ஒரு பகுதியாகவும் அந்த அமைதி இருந்தது. புல்வெளியில் அம்மரம் அங்குள்ள வரை அழகும் அங்கே இருக்கும்.

அவர் நடுவயதினர், நன்றாகக் கவனிக்கப்பெற்ற உடல், நேர்த்தியான முறையில் உடை அணிந்திருந்தார். அவர் நிறைய சுற்றுலா செய்தவர் (வேலையலுவலுக்காக அன்றித் தன் விருப்பத்திற்காகவும்). அவர் தகப்பனார் சிறிது சொத்து

சேர்த்து வைத்திருந்தார். ஆகவே, உலகின் சில பகுதிகளைக் கண்டுணர்ந்தவர். பல நாடுகளில் இருப்பதைத் தவிர பல அரும் பொருள் காட்சி சாலைகளில் உள்ள முன்பின் காணா அருங்கலைப் பொருட்களைக் காண வேண்டி பயணம் செய்தவர். இசையில் விருப்பமுள்ளவர், சிறிது பாடவும் தெரியும். பேச்சுவாக்கில் அவர் கூறினார்: ''உலகில் வன்முறை, சீற்றம், மனிதன் மேல் மனிதனுக்குள்ள எதிர்ப்பு ஆகியவைகள் இருக்கின்றன. நாம் அன்பை இழந்து விட்டோம் எனத் தோன்றுகிறது. நம் நெஞ்சத்திலே அழகு இல்லை. ஒருக்கால் இது என்றுமே நம்மிடமில்லையோ எனத் தோன்றுகிறது. அன்பு சீரழிந்துவிட்டது, செயற்கை அழகுக்கு, இயற்கையின் அழகைக் காட்டிலும் அதாவது, மலைகள், மரங்கள், மலர்கள் இவற்றைக் காட்டிலும் சிறப்பு கொடுக்கப்படுகிறது. குழந்தைகளின் அழகும் சிறிது நாளில் மங்கிப் போகும். நான் அன்பையும், அழகையும் பற்றி வியக்கிறேன். உமக்குச் சிறிது நேரமிருந்தால் இதைப் பற்றி பேசக்கூடுமா?''

ஒரு சிறிய ஆற்றின் கரை மீது, பெஞ்சில் உட்கார்ந்திருந்தோம். பின்புறம் இரயில் பாதை. குன்றுகள் மீது அங்குமிங்குமாக பங்களாக்களும், சில பண்ணை வீடுகளும் இருந்தன.

அன்பும் அழகும் பிரிக்கவொண்ணாதவை. அன்பு இல்லாமல் அழகு இல்லை; இவை ஒன்றோடு ஒன்று பிணைந்தவை. பிரிக்கமுடியாதவை. நம் மனத்தையும் அறிவுத் திறனையும், சாமர்த்தியத்தையும், தீவிரமாக நிலை குலைக்கும் அளவிற்கும், அவை ஆதிக்கம் செலுத்து மளவிற்கும் பயிற்றுவித்திருக்கிறோம். இது அன்பைத் தடை செய்யும். எவ்வாறு மரத்தின் நிழலை மரம் என்று கொள்ள முடியாதோ அவ்வாறே சொல் உண்மையில் அப்பொருளா காது. நம்முடைய குறுக்கு அறிவிலிருந்தும் மெருகேற்றிச் சொற்களைப் புரட்டி பேசும் வன்மை என்ற உயரத்திலிருந்தும் கீழே இறங்கி வந்தால் ஒழிய நாம் அன்பு

என்றால் என்ன என்பதை அறிய முடியாது. ஒளியுண்ட நீரின் அழகையும், புதிய புல்லின் நுண்ணிய இலைகளையும் உணராவிட்டால் அன்பு என்பதை அறிய முடியாது. இத்தகைய அன்பை அருங்காட்சி சாலையிலும், மாதாக் கோவிலின் ஆடம்பரமான சடங்குகளிலும், சினிமாவிலும், பெண்ணின் முகத்திலும் காணக் கூடுமா? நாம் எவ்வாறு வாழ்க்கையின் அன்றாடப் பழக்கவழக்கமுள்ள பொருள்களிலிருந்து தொலைவுற்று, நம்மை வெளி மனிதராக்கிக் கொண்டிருக்கிறோம் என்பதைக் கண்டுபிடிப்பது முக்கியமானதன்றோ? வெறி பிடித்தாற்போல் இயற்கையை வணங்க வேண்டும் என்று கூறவில்லை. ஆனால் இயற்கையிலிருந்து பிரிந்து அதன் தொடர்பற்று வாழும் பொழுது, மனிதனிலிருந்தும் ஏன் நம்மிடமிருந்துமே விலகி தொலைவாகப் போய்க் கொண்டிருக்கிறோம் என்பது புலனாகவில்லையா?

அழகையும், அன்பையும் நமக்கு வெளியேயுள்ள பொருள்களிலும், மனிதர்களிடமும் உரிமை கொண்டு தேடுகிறோம். அவை அன்பைக் காட்டிலும் அதிகச் சிறப்பை பெறுகின்றன. உரிமை என்பதே இன்பம். நாம் இன்பத்தை இறுக்கிப் பிடித்துக் கொள்ளும் போது, அன்பு வெளியே துரத்தப்படுகிறது. அழகு நம்மிடமே இருக்கிறது. நம்மைச் சுற்றியுள்ள பொருள்களில்தான் இருக்கிறது என்பதில்லை. நம்மைச் சுற்றியுள்ள பொருள்கள் சிறப்பை அடையும் பொழுது, நாம் அவற்றில் அழகை திணிக்கிறோம், அவ்வாறு செய்யுங்கால், நம் உள்ளே இருக்கும் அழகு குறைகிறது. உலகில் மேன்மேலும் வன்முறையும், பொருளுக்கு சிறப்பு தருதலும் மிகையாகினால், அருங்காட்சி சாலைகளும் அவற்றின் உரிமைப் பொருள்களுமே, நம்முடைய ஊன உடலை மறைத்து மூடும் திரையாகவும் நம்முடைய பாலைவனம் போன்ற நிலையை நிரப்பும் நீராகவும் ஆகும்.

''நம்மைச் சுற்றியும் மற்றவரிடத்தும், மற்ற பொருள் களிடத்தும் அழகைக்காணும் பொழுதும், இன்பம் துய்ப்பதா

கிறது. நம்முள் இருக்கும் அழகும் அன்பும் குறைகின்றன என்று ஏன் கூறுகிறீர்?''

எவ்வித சார்பும் நம்மிடை உரிமை உணர்ச்சியை வளர்க்கிறது. நாம் எதில் உரிமை கொண்டாடுகிறோமோ நாமும் அதுவாகவே ஆகிறோம். நான் இந்த வீட்டின் உரிமையாளன் எனும் போது நானே இந்த வீடு என்பதாகிறேன். அதோ அக்குதிரை மீது சவாரி செய்யும் அம்மனிதன் தானே குதிரை என்ற பெருமிதத்துடன் செல்கிறான். ஆனால், அக்குதிரையின் அழகும், கண்ணியமும் அம்மனிதனைக் காட்டிலும் அதிகம் குறிப்பிடத்தக்கது. ஒரு வரைகோட்டின் அழகிலும் மென்மையான முகத்திலும் நாம் சொந்தம் கொண்டாடினால் காண்பானின் தன்மை குறையும் என்பதில் ஐயமில்லை; அதனால் வெளியேயுள்ள ஒரு இழை கோட்டின் அழகையும், மென்மையுள்ள முகத்தின் அழகையும் தள்ளி வைக்க வேண்டும் என்பதில்லை; அதன் பொருள் வெளிப் பொருள்கள் மிகச் சிறப்பு வாய்ந்ததாக ஆகும் பொழுது நம் உள்ளத்தில் ஏழ்மை இருக்கிறது என்பது உண்மை.

''நான் மென்மையான முகத்தில் ஈடுபடும்போழ்து உள்ளத்தில் ஏழ்மை உள்ளவனாக இருக்கிறேன் என்று கூறுகிறீர். அழகிய முகத்திற்கும், கட்டிடத்தின் வரிசைக் கோடுகளுக்கும் என்னிடமிருந்து மறுமொழி வராவிட்டால், நான் என்னைத் தனிப்படுத்திக் கொண்டு உணர்ச்சியற்றவனாவேன்.''

எப்பொழுது உம்மைத் தனிப்படுத்திக் கொள்கிறீரோ, சார்பு, பற்று இவை இருக்கின்றன என்பது கண்கூடாகத் தெரிகிறது. சார்பு, பற்று இவை இன்பத்தை நாடி விழையும்; அச்சத்தை உண்டாக்கும். நீர் இவற்றுக்கு மறுமொழியளிக்காவிட்டால், ஒன்று செயலிழந்த நிலையினால் துன்பப்படுபவராவீர், அன்றி அக்கறையற்றவராக இருப்பீர், அல்லது முற்றிலும் நம்பிக்கையிழந்த நிலையையடைவீர். எப்பொழுதும் தன் வேட்கைகளையெல்லாம் நிறைவேற்றம்

செய்து கொண்டே போனால் நம்பிக்கையிழத்தல் ஏற்படுகிறது. ஆகவே, நாம் இடைவிடாது நம்பிக்கை, நம்பிக்கை இழந்த நிலை, அச்சம், இன்பம், அன்பு, பகை என்ற பொறிக்குள் அகப்பட்டுக் கொள்கிறோம். உள்ளத்தில் ஏழ்மை உள்ளபோது அதை நிரப்பும் தேவையுண்டாகிறது. இவ்விரட்டைகள் நம் வாழ்நாளை நிரப்பி, வாழ்க்கைப் போராட்டத்தை விளைவிக்கின்றன. எல்லாவித இரட்டைகளும் ஒரே வேரில் விரிந்த கிளைகள். அவை யாவும் ஒன்றே. சார்பின் விளைபொருளன்று அன்பு. அன்புக்கு எதிராக ஒன்றும் கிடையாது.

''உலகில் அருவருப்புள்ளது ஒன்றுமில்லையா? அது அழகிற்கு எதிரானதுதானே.''

நிச்சயமாக இருக்கிறது - பகை, வன்முறை என்று இவ்வாறாக. ஆனால் அதை ஏன் அழகிற்கும் வன்முறையற்ற நிலைக்கும் ஒப்பிடுகிறீர்? ஏனெனில் மதிப்பீடு என்ற ஏணி வரிசையில் அழகை மேற்படியிலும், அழகற்று அருவருப் பானதைக் கீழ்ப்படியிலும் நாம் வைத்திருக்கிறோம். நீர் வன்முறையை மற்றொன்றுடன் ஒப்பிடாமல் அவ்வாறே காணமுடியுமா? அவ்வாறு செய்தால் என்ன நடக்கிறது? அப்பொழுது கொள்கை, மதிப்புக் கொடுத்தல், இவ்வாறு 'இருக்க வேண்டும்' என்ற அளவுக்கோலற்று நீர் உடனடி யாக நோக்குவது உண்மையொன்றையே. உள்ளதை உள்ள வாறே நோக்குகிறோம் என்று உணர்வீர்; எவ்வாறு 'இருக்க வேண்டும்' என்பது ஒரு கொள்கை, கற்பனை, ஆகவே கைக்கு உதவாதது. அழகு ஒப்பிட முடியாதது. அவ்வாறே அன்பும். 'நான் இதை மற்றொன்றைவிட அதிகம் நேசிக்கி றேன்.' என்று நீர் கூறும் பொழுது நேசம் அங்கு இல்லை.

''உணர்வு உள்ளதால், ஒருவன் உடனடியாகவும் எளிதாகவும், மென்மையான முகத்துக்கும், அழகான பூந்தொட்டிக்கும், மறுமொழி கூறுகிறான். எண்ணத்தின் திறனின்றி துணிந்து மறுமொழி கூறுவது, பற்றுதலிலும்

இன்பத்திலும் கண்ணுக்குத் தெரியாமல் நம்மை இழிய வைக்கிறது. அதுவே நீர் கூறும் சிக்கல்களுக்கெல்லாம் காரணமாகிறது. எனவே சார்பு – பற்று இவை தவிர்க்க முடியாதவையாக ஆகின்றன.''

'சாவு' என்பதைத் தவிர தவிர்க்க முடியாதது ஒன்று உளதா?

''தவிர்க்க முடியாதது என்றால், என் நடத்தையை ஒழுங்கு செய்ய ஆணையிட முடியும் என்றல்லவா ஆகிறது. அப்பொழுது அது இயந்திரம் போன்ற வாழ்வாகுமே?''

தவிர்க்க முடியாததை காண்பது என்பது இயந்திரம் போன்று இல்லாமல் இருத்தல் ஆகும். எது இயந்திரம் போன்ற வாழ்வாகிறது என்பதைப் பார்க்க மனம் இசைவதில்லை.

''தவிர்க்க முடியாததை நான் கண்டால், அதன் முற்றுப் புள்ளியை எங்கே, எவ்வாறு வைக்க வேண்டும் என்ற ஐயமும் எழுகிறது.''

நீர் முடிவு ஒன்றையும் வரையத் தேவையில்லை. காண்பது என்பதே தான் செய்ய வேண்டிய செயலை விளைவிக்கும். ''நான் எந்த இடத்தில் கோடு வரைய வேண்டும்'' என்று நீர் கேட்கையில், எண்ணம், தான் அகப்பட்டுக் கொண்டு விட்டோம், அதிலிருந்து விடுதலை தேவை என்ற அச்சத்தால் குறுக்கிட்டு அவ்வாறு வினவு கிறது. காண்பது என்பது இவ்வாறு நினைக்கும் எண்ணத்தின் வழியன்று; காண்பது என்றும் புதியது, புதிய மலர், செயலு டையது. எண்ணுவது என்றும் பழமையானது, வாடிய மலர். காண்பதும், எண்ணுவதும் வெவ்வேறானது. – வெவ்வேறான ஒழுங்கை உடையவை. ஆகவே இவையிரண்டும் என்றுமே சந்திக்க முடியாது. ஆக அன்பும், அழகும், எதிரிடையற் றவை, உள்ளத்தின் ஏழ்மையிலிருந்து எழுந்தவையன்று. ஆக அன்பின் இருப்பு முதல் அடியில் இறுதியில் அன்று.



## ஐரோப்பா - 18

கோவிலின் மணியோசை, மரச்செறிவின் வழியாகவும், நீர் பரப்பின் மீதும் கீழ்ப்பள்ளத்தாக்கின் மேலுமாக வந்தது. மரச் செறிவின் வழி வந்தபொழுதும் திறந்த புல்வெளி மீதும் சலசலக்கும் நீரோடை மேலும் வருகையிலும் அதன் ஓசை வெவ்வேறாயிருந்தது. ஓசை, ஒளியைப் போன்றே மோனம் அழைத்துவரும் தன்மையுடையதாய் இருந்தது. மோனத்தின் ஆழம் மிகுதியாக, ஆக, ஓசையைக் கேட்கும் அழகும் மிகுந்தது. அம்மாலையில், கதிரவன் மேற்கு மலைகளின் மேல் மிதந்து செல்கையில், கோவிலின் மணியோசை, தனிச் சிறப்புடையதாய் இருந்தது. அப்பொழுதுதான் மணியோசை முதன் முறையாகக் கேட்பதே போன்றிருந்தது. பண்டை கதீட்ரல்களைப் போன்று பழமையானதன்றியாயினும், அம்மாலையின் உணர்வைத் தன்னுடன் அணைத்து வந்தது. வானில் மேகமொன்றுமில்லை. ஆண்டின் மிக நீண்டநாள், பரிதியும் தனக்கு எட்டியவரை வடக்கு நோக்கிச்சாய்ந்தது.

நாயொன்று குரைப்பதையும், குழந்தையின் அழுகுரலை யும் அல்லது மனிதன் சிரிப்பதையும் நாம் செவிகொடுத்துக் கேட்பதில்லை. நாம் யாவற்றிலிருந்தும் நம்மைப் பிரித்துக் கொள்கிறோம். இந்த தனிமையிலிருந்து எல்லாவற்றிற்கும் செவி சாய்க்கிறோம். அழிக்குந் தன்மையுடைய இத்தனிமை யிலேயே, எல்லாவிதச் சிக்கல்களும் குழப்பங்களும் படிந் திருக்கின்றன. நீர் அம்மணியோசையை முழுமையான அமைதியுடன் நன்கு கேட்டிருந்தீரானால், அவ்வோசையின் மீதேறிச் சென்றிருப்பீர், இல்லாவிட்டாலும் அவ்வோசை, பள்ளத்தாக்குகளை ஊடுருவி அக்குன்றங்களுக்கே உம்மை

அழைத்துச் சென்றிருக்கும். நீர் அவ்வோசையின் ஒரு பகுதியாய், நீங்களும், அவ்வோசையும் பிரிவின்றி இருந்தால்தான் அதன் அழகை முழுமையாய் உணரக்கூடும். தியானம், இப்பிரிவின் முற்றுப்புள்ளி, தன்விருப்பத்தினாலும், தன் செயலாலும், முன்பறியா ஓர் இன்பத்தைச் சுவைக்க வேண்டும் என்ற வேட்கையாலும் நிகழ்வதன்று.

தியானம் வாழ்க்கையிலிருந்து வேறான பொருளன்று. வாழ்க்கையின் மணம் அது. அன்றாட வாழ்வின் தனிச்சிறப்பான தன்மை அது. அம்மணியோசையைக் கேட்பதும், பண்ணையாள் தன் மனைவியோடு செல்லுகையில் சிரிப்பதைக் கேட்பதும், சின்னஞ்சிறு பெண் சைக்கிளில் போகும்பொழுது அடிக்கும் மணியின் ஓசையைக் கேட்பதும் வாழ்க்கையின் முழுமையையே காண்பதாகும் - ஒரு சிறுபகுதியை மட்டுமன்று. இவ்வாறான வாழ்வின் முழுமையை மலர்விப்பதே தியானம்.

''உம் வரையில் கடவுள் என்றால் என்ன? இந்நாளைய உலகில், மாணாக்கன், அரசியல்வாதி, தொழிலாளி இவர்களிடையே கடவுள் என்பது இறந்த பொருள். பாதிரிகளுக்கு உலகளவிலும், ஆன்மீகத் துறையிலும் தங்கள் வேலை வாய்ப்புக்கும், தன் நலங்கொண்ட உரிமையைக் காக்கவும் ஒரு வசதியான சொல். சாதாரண மனிதனை - இது அவ்வளவாகப் பாதிப்பதில்லை என்றாலும் ஏதாவது பெரியதோர் இடர் ஏற்பட்டாலும், அல்லது தன்னுடைய அண்டை அயலாருக்கு வேண்டி கண்ணியமாக நடந்து கொள்ள வேண்டும் என்றபொழுதும் அதன் தேவை ஏற்படுகிறது. இதைத் தவிர, அதற்கு அதிகமாகப் பொருள் கொடுப்பதில்லை. ஆகவேதான், நான் இந்த நீண்ட பயணத்தை மேற்கொண்டேன். நீர் எதில் நம்பிக்கை வைத்திருக்கிறீர் என்று கண்டறியவும் அல்லது நீர் அந்தச் சொல்லை விரும்பாவிட்டால், உம் வாழ்க்கையில் கடவுள் இருக்கிறாரா என்று கண்டறியவும் இங்கு வந்துள்ளேன்.

நான் இந்தியாவுக்கு சென்று அங்குள்ள பல ஆசார்யர்களை அவர் சீடர்களுடனும் கண்டிருக்கிறேன். அவர்கள் எல்லோரும் ஏறக்குறைய கடவுள் இருக்கிறது என்றும் அதற்கு வழிக்காட்ட முடியும் என்றும் கூறுகிறார்கள். பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதனை துரத்திக் கொண்டிருக்கும், முக்கியமான இந்தக் கேள்வியை உம்மிடம் கேட்க வந்துள்ளேன். அதாவது நீர் அனுமதித்தால்.''

நம்பிக்கை என்பது ஒன்று, உண்மை நிலை என்பது வேறொன்று. ஒன்று அடிமைத்தளைக்கு அழைத்துச் செல்லும், மற்றொன்று விடுதலையில் தன் இருப்பைப் பெறும். இவை இரண்டிற்கும் ஒரு தொடர்பும் கிடையாது. அவ்விடுதலையை விழைந்து நம்பிக்கையை விட்டுவிடவும், தள்ளி ஒதுக்கவும் இயலாது. விடுதலை ஒரு பரிசுப் பொருள் அன்று. கழுதைக்குக் கொடுக்கும் காரட் போன்றதன்று. நம்பிக்கைக்கும், உண்மை நிலைக்கும் உள்ள முரண்பாட்டை முதலிலிருந்தே புரிந்து கொள்ளல் வேண்டும்.

நம்பிக்கை எந்நாளும் உண்மை இருப்புக்கு அழைத்துச் செல்லாது. நம்பிக்கை என்பது வரையறுபாடு, அச்சம், வெளியிலிருந்து அல்லது உள்ளத்திலிருந்து நமக்கு ஆறுதலளிக்கும் ஒருவித கட்டளை, இவற்றின் விளைவேயாகும். உண்மை இருப்பு இவையொன்றுமில்லை. முற்றிலும் வேறானது. உண்மை இருப்பையும், மற்றவற்றையும் இணைக்கும் வழியொன்றும் கிடையாது. கடவுள் உள்ளது என்று நினைப்பவன் ஒரு உறுதியான நிலையிலிருந்து தொடங்குகிறான். அவன், கடவுளிடமும் அல்லது காப்பான் என்ற பொருளிடமும் அல்லது கண்ணன், யேசு இவ்வாறான தெய்வங்களிடமும் நம்பிக்கைக் கொண்டு, அதைப் பற்றி, தன்திறமைக்கேற்றவாறும் தன் வரையறுபாடுக்கேற்றபடியும் கொள்கைகளை ஏற்படுத்துகிறான். அவனும் கம்யூனிஸ்டையும், கொள்கைவாதியையும் போன்று ஒரு கருத்திலும், சூத்திரத்திலும் கட்டுண்டு தனக்கேற்றவாறே

கொள்கைகளை வகுக்கிறான். அவன் சூத்திரமாக திரிப்ப தெல்லாம் தன் கருத்து என்ற கட்டாயத்தின் வெளிப்பாடே.

தற்காப்பையறியாத ஈயொன்று, எவ்வாறு சிலந்தியின் வலையில் சிக்கிக் கொள்கிறதோ, அவ்வாறே தற்காப்பறி யாத ஒருவனும் இவ்வலையில் சிக்கிக் கொள்கிறான். நம்பிக்கை என்பது அச்சத்தினாலும், மரபுரிமையினாலும் பிறக்கிறது. இரண்டு அல்லது பத்தாயிரம் ஆண்டுகளாகச் செய்து வந்த பிரசாரமே சொற்களைக் கொண்டு புனைந்த நிறுவனமான மதமும், அதன் கொள்கைகளும், சடங்குகளும் நம்பிக்கைகளுமாக ஆகின்றன. அப்பொழுது சொற்கள் தனிச் சிறப்பைப் பெறுகின்றன. அவற்றைத் திரும்பத் திரும்ப கூறுவதால், அந்தச் சொற்கள் ஏமாளியானவரை தன்வசப் படுத்தவும் செய்கின்றன. ஏமாளியானவர், எப்பொழுதும் நம்புவதற்கும், ஒப்புக் கொள்ளவும், கீழ்ப்படியவும் தயாராக இருக்கின்றனர். நல்லவையாயினும், தீயவையாயினும், குறும்பு விளைவிப்பதாயினும், நன்மைத் தருவதாயினும் இவர்களால் ஒப்புக் கொள்ளப்படுகிறது. நம்பிக்கையுள்ள மனம் கேள்விகளைக் கேட்கத் தெரியாத மனம். ஆகவே, கொள்கைகள், சூத்திரங்கள் இவற்றின் எல்லைக்குள்ளேயே அம்மனம் கட்டுண்டு இருக்கும். கம்பத்தில் கட்டுண்ட பசு அந்தக் கயிற்றின் வரையறைக்குள் சுற்றிச் சுற்றி வருவது போன்றதே.

''ஆனால் நம்பிக்கையின்றி நம்மிடம் வேறொன்று மில்லை. நான் நன்மையில் நம்புகிறேன். நான் மணம் செய்து கொள்வது தூய்மை என நம்புகிறேன். இங்கும் - அதற்கப்பால் ஒன்றுள்ளதையும், படிப்படியாக வளர்ந்து ஒரு முழுமையான நிலைக்குச் செல்ல முடியும் என்றும் நம்புகிறேன். இந்த நம்பிக்கைகள் என்வரையில் மிக முக்கியமானவை. ஏனெனில் என்னை ஒரு கோட்டிற்குள் அதாவது சமூக நெறிக்குள் இருக்கச் செய்கின்றன. என்னிடத்திலிருந்து நம்பிகை என்பதை எடுத்து விட்டால் என் அடையாளமும் போய்விடும்.

நல்லவை என்பதும், நல்லவன் ஆகுதல் வேண்டும் என்பதும் இருவேறு பொருள்கள். நன்மையின் மலர்ச்சி, நல்லதாக இருக்க வேண்டும் என்பதில் இல்லை. நல்லதாக வேண்டும் என்பது நன்மையை மறுப்பதாகும். ஒன்றைவிட நன்றாக இருக்கவேண்டும் என்றபொழுதில் 'இருப்பது' என்பதை மறுப்பதாகும்; - ஒன்றைக் காட்டிலும் நன்மையானது என்ற கணத்திலேயே, இருப்பு என்பதற்கு இழிவு உண்டாகிறது. 'இருக்கிறது' என்பது நிகழ்காலத்திலே; நல்லதாக 'இருக்க வேண்டும்' என்பது வருங்காலத்தில் நம்பிக்கையில் அகப்பட்டுக் கொண்ட மனம், ஒப்பிடுதலிலும், காலத்திலும் நம்பிக்கைக் கொண்டு தானே உருவாக்கும் ஒன்றே வருங்காலம். அளவுகோல் இருக்கும் போது நன்மை ஒய்ந்து போகும்.

சிறப்பாக நோக்க வேண்டியது - நீர் எதில் நம்பிக்கை கொண்டிருக்கிறீர் என்பதல்ல - உம்முடைய கோட்பாடுகள், பிடிவாதமான கொள்கைகள், கருத்துக்கள் இவற்றை ஏன் வைத்துக்கொண்டிருக்கிறீர்? உம் மனத்தை இவற்றுக்கு ஏன் சுமை தாங்கியதாக ஆக்குகிறீர் என்பதே. இவை தேவையா? இக்கேள்வியை நீரே உம்மிடம் பொறுப்புடன் கேட்டுக் கொண்டால், அச்சம், மற்றும் எதையும் ஒப்புக்கொள்ளுதல் என்ற வழக்கம் இவற்றின் விளைவே நம்பிக்கை என்பதும் உமக்கு விளங்கும். இந்த அடிப்படையான அச்சம் உண்மையான 'இருப்பில்' ஈடுபடுவதைத் தடுக்கிறது. இந்த அச்சமே எதற்கும் வாக்குறுதியளிக்கிறது. வாழ்க்கையில் ஈடுபாடு, உம்முடைய செயல்களிலே ஈடுபாடு என்று இவ்வாறாக ஏதாவது ஒன்றில் ஈடுபடுவது இயற்கையே. நீர் வாழ்க்கையில் ஈடுபடுகிறீர், அதனுடைய முழு ஓட்டத்திலுமே ஈடுபடுகிறீர். ஆனால் வாக்குறுதியளித்தல் என்பது மனம் வலுக்கட்டாயமாக புரியும் செயல். அது துண்டுகளிலும் பிரிவுகளிலுமே செயல்படும். அவ்வாறே எண்ணவும் செய்யும். நீர் வலுக்கட்டாயமாக, முழுமை என நினைக்கும் ஒன்றுக்கு வாக்குறுதியளிக்க முடியாது. நீர்

நினைப்பதே எண்ணத்தின் நடை, எண்ணமோ பிரிவுத் தன்மையுடையது, அது பிரிவுகளிலும், துண்டு பிரிப்பதிலும் வேலை செய்யும்.

''நீர், பெயர் ஒன்றும் குறிக்காமல் வாக்குறுதியளித்தல் இயலாது – ஏனெனில் பெயர் கொடுப்பதே வரைப்படுத்தும் செயல்.''

நீர் கூறியது வெறும் தொடர்ச் சொற்களா அன்றி, உண்மை நிலையை நீர் இப்பொழுது உணர்ந்ததாலா? வெறும் சொற்கள் கொண்டு புனைந்த தொடர்ச் சொல்லானால், அதுவும் ஒரு நம்பிக்கையே ஆகும். ஆகவே அதற்கு மதிப்பொன்றும் இல்லை. இப்பொழுது நீர் கண்டு பிடித்திருப்பது 'மெய்' என்றால், அப்பொழுது நீர் பொய்யிலிருந்து விடுபட்டவர்; பொய்யை மறுப்பது என்பது ஒருவித அறிவிப்பும், உறுதிச் சொல்லும் அன்று. ஸோப்பிலிருந்து கடவுள் வரை எல்லா பிரசாரங்களும் பொய்யே. மனிதன் பிரசாரத்திலேயே வாழ்கிறான்.

''நீர் என்னை உமது பார்வை கொண்டு மூலையில் திணிக்கப்பார்க்கிறீர். இதுவும் நீர் கண்ட பேறு ஒன்றை வளர்ப்பதற்காகச் செய்யும் பிரசாரம் அன்றோ?''

ஐயமற அவ்வாறன்று. ஒருவருடைய தூண்டுதலும், செல்வாக்குமின்றி, அதாவது உள்ளதை உள்ளவாறே நோக்க வேண்டி, நீரே உம்மை ஒரு மூலைக்குள் அடைத்துக் கொள்கிறீர். இப்பொழுதுதான் உம்மால், உம் முன்னுள்ள உண்மை நிலையை அடையத் தொடங்குகிறீர். ஆகவே, மற்றவரிடத்திலிருந்தும் விடுதலை பெறுவீர், மற்ற எல்லா ஆதிக்கத்திலிருந்தும் விடுபடுவீர் (அந்த ஆதிக்கம் என்பது ஒரு சொல்லாகவும், தனிப்பட்ட ஆளாகவும், அல்லது கருத்தாகவும் இருக்கலாம்). ''காண்ப''தற்கு நம்பிக்கை தேவையில்லை. அதற்கெதிர் மாறாக காண்பதற்கு நம்பிக்கையற்ற நிலை வேண்டும். நம்பிக்கை என்பதே இல்லாத நிலையில்தான் நீர் காணமுடியும். அதன்றி

நம்பிக்கையோடு கூடிய நிலையில் அன்று. காண்பது என்பதே யாவும் ஒழிந்த நிலை. அதில் 'உள்ளது' என்ற ஒன்றே இருக்கிறது என்பது தெளிவு; சோம்பலின் சூத்திரமே நம்பிக்கை – அது வளர்ப்பது போலித்தனத்தை. இந்தப் பாசாங்கை, போலியை எதிர்த்தே இளந்தலைமுறையினர் போராடுவதும், புரட்சி செய்வதும் – ஆனால் அவர்களும் நாளடைவில் அப்போலி வாழ்க்கையை வாழ்கின்றனர். ஒருவர் உண்மை இருப்பை காண விழைந்தால், நம்பிக்கை என்ற அபாயத்தை முற்றிலும் தவிர்க்க வேண்டும். அரசியல்வாதி, பாதிரி, நாணயத்துடன் வாழ விரும்புவோர், ஒரு கொள்கை அல்லது சூத்திரம் மூலமாக வேலை செய்பவர் அனைவரும், மற்றவரையும் தங்கள் கொள்கைக் கேற்றவாறே வாழ வேண்டும் என்று வலுக்கட்டாயப்படுத்து வர். நினைக்க அஞ்சுபவரும், மூடர்களும் அவர்களுடைய சொற்களாலும், வாக்குறுதிகளாலும், எதிர்கால நம்பிக்கைகளாலும் குருடராகின்றனர். இந்தச் சூத்திரத்தின் ஆணை, அன்பைக் காட்டிலும் மிகச் சிறப்புள்ளதாக ஆகிறது. ஆகவே, ஆணையும், அதிகாரமும் தீயவை. மரபுரிமையின் விளைவானாலும், அந்த ஆணை நம்பிக்கையினுடையதாயினும், வழக்கமாக நாம் கூறும் சமூக நெறியுடையதாயினும் அது தீயதே!

''இத்தகைய அச்சத்திலிருந்து நான் விடுபட முடியுமா?''

உமது கேள்வியே தவறானது! இதில் ஐயமில்லை. நீரே அந்த அச்சம். நீரும் அந்த அச்சமும் வெவ்வேறானதன்று. அப்பிரிவே அச்சம். இந்த அச்சமே கொள்கையை வளர்த்து ''நான் இதை வெற்றி கொண்டேன், இதை அடக்கி ஆள்வேன், ஒன்றிலிருந்து தப்பித்துக் கொள்வேன்'' என்று கூறுகிறது. இந்த மரபுரிமை, அச்சத்தை வெல்லமுடியும் என்ற பொய்த் தோற்றத்தை கொடுக்கிறது. நானேதான் அச்சம். நானும் அச்சமும் வெவ்வாறான இரு பொருள்கள் அல்ல என்று காண்கையில் அச்சம் மறைந்து போகிறது. அப்பொழுது கொள்கைகளும், நம்பிக்கைகளும் தேவை

யற்றவையாகின்றன. அப்பொழுது 'இருப்பது' என்ற ஒன்றுடனேயே வாழ்வீர், அந்த உண்மையையும் காண்பீர்.

''ஆனால் கடவுளைப் பற்றி நான் கேட்ட கேள்விக்கு நீர் மறுமொழி கூறவில்லையே?''

பூசனைக்குரிய எந்த இடத்தையும் போய்ப் பாருங்கள் - கடவுள் அங்கிருக்கிறதா? கல்லிலும், சொல்லிலும், சடங்கிலும் அழகான செய்கை ஒன்றின் தூண்டுதலைக் கொண்டு பார்ப்பதிலும் அது இருக்கிறதா? மக்கள் கடவுளை உமது என்றும் எமதென்றும் பிரித்திருக்கின்றனர். கிழக்கின் கடவுள்கள், மேற்கத்திய தெய்வங்கள் என்று, ஒவ்வொரு கடவுளும் மற்றொரு கடவுளை அழித்திருக்கிறது. கடவுளைக் காண்பது எங்கே? இலையின் அடியிலா, வானத்திலா, உம் உள்ளத்திலா அன்றி அது ஒரு சின்னமா, ஒரு சொல்லா அல்லது சொல்லுக்குள் அடக்க முடியாத ஒன்றா? மனிதன் தான் வணங்கும் இடங்களையும், சின்னங்களையும், தன்னைச் சுற்றி சொற்களால் பின்னிக் கொண்டிருக்கும் வலையையும் ஒதுக்கித் தள்ள வேண்டும் என்பது கண்கூடு. இவ்வாறு செய்தால் ஒழிய, இக்கேள்வி எழ முடியாது. செய்வதற்கு முன் இக்கேள்விக்கு இடமில்லை. அளவிடற்கரிய பேருண்மையொன்று இருக்கிறதா, இல்லையா என்ற வினாவை அப்பொழுதுதான் தொடங்கக் கூடும்.

''ஆனால், நீர் இவையனைத்தையும் தள்ளி வைக்கையில், நீர் என்பது எல்லாவற்றையும் இழந்த காலியான இடமாகவும், தன்னந்தனியான நிலைமையுமே. அந்நிலையில் விசாரிப்பது எவ்வாறு?''

உம்முடைய இந்த நிலைக்குக் காரணம் உம்மை நோக்கி நீரே இரங்குகிறீர். இத்தன்னிரங்கல் மிகவும் வெறுக்கத்தக்கது. நீர் பொய்யான ஒன்றைப் பொய் என்று பார்க்காததால்தான் உம்முடைய இந்நிலை. நீர் இதைக் காணும் பொழுது அவ்வாறு காண்பதே உமக்கு மிகையான திறனைக்

கொடுக்கும். உண்மையை உண்மையென்றும், அது பொய்த் தோற்றம் அல்ல, அது மனதின் கற்பனை அல்ல என்று காணும் விடுதலையையும் அளிக்கும். இத்தகைய விடுதலையே தேவை. இவ்விடுதலையிலிருந்துதான், சொற்களால் விவரிக்க இயலாத ஒன்று உள்ளதா, இல்லையா என்பதைப் பார்க்கக்கூடும். இது ஒன்றைத் துய்ப்பதாகாது, அன்றி அது தன் நிறைவேற்றமும் ஆகாது. எவ்வகை அனுபவமும் இதைப் பற்றிப் பேசுகையில், முரண்பாடான பிரிவுள்ள இருப்பைக் கொண்டு வருகிறது. இந்தப் பிரிவுள்ள 'இருப்பு' என்பது எண்ணுவோன், காண்போன், என்ற தனித்தனி மனிதனையும் அவன் விழையும் பலவித அகன்ற ஆழ்ந்த அனுபவங்களையும் ஏற்படுத்துகிறது. மனிதன் தான் வேண்டும் வேட்கைப் பொருளை அடையவும் கூடும் ஆனால் அது உண்மையாகாது.

உண்மை உம்முடையதும், என்னுடையதுமன்று. உம்முடையது என்பதை நிறுவனமாக ஏற்பாடு செய்தும், கோவிலாகச் செய்தும் தன் நலத்திற்காக உபயோகிக்கக் கூடும். உலகில் நடப்பது இதுதான். உண்மையை நிறுவனம் போன்று ஏற்பாடு செய்ய முடியாது. அழகையும் அன்பையும் போன்றே, மெய் என்பதும் உரிமையின் வட்டாட்சியில் இல்லை.



## ஐரோப்பா - 19

பேக்கரி, காமெராக் கடை, புத்தகக் கடை, பாலத்தடியில் இருக்கும் திறந்தவெளி - உணவகம், பாலத்தின் மேல் இருக்கும் துணிக்கடை, மரக்கடை, அதற்கப்பாலுள்ள காவு, ஆற்றங்கரை, இவற்றையெல்லாம் நன்கு நோக்கிக் கொண்டு, அதாவது உம்முடைய கண்களும், புலன்களும் விழிப்புடன் இருக்கையில், மனத்திலே ஒருவித எண்ணமும் இல்லாமல், இந்த சிறிய பட்டினச்சாலை வழியே நடந்து போகையில், பிரிவற்ற நிலை என்ன என்பது உமக்குப் புலனாகும். ஒருவித எண்ணத்தின் சலனமுமற்று, சொல்லின் உதவியுமற்று, ஓடையைத் தொடர்ந்து சில மைல்கள் செல்லும்பொழுது, அங்குப் பெருக்கெடுத்து வரும் வெள்ளத்தையும், அதன் சலசலப்பொலியையும், அதன் வண்ணத்தையும், அந்தப் பச்சைமலையோடையை யும், மரத்தையும், அந்நீலவானையும், கிளைகளினூடு நோக்கும் பொழுதுதான் உமக்கும் புல் நுனிகளுக்கும் இடைவெளி இல்லை என்பதின் பொருள் விளங்கும்.

ஊதா, மஞ்சள், சிவப்பென பந்நிறங்கொண்டு மிளிரும், முன்னாள் மழையினால் கழுவப்பெற்று பச்சைப்பசேல் எனக் காட்சியளிக்கும் அம்மைதானங்கள் வழியாகச் செல்லுங்கள். ஒருவித எண்ணமுமின்றி செல்லுங்கள்; அப்பொழுதாவது அன்பு என்றால் என்ன என்பது உமக்கு தெரியக்கூடும். நீலவானையும் அங்கே ஊர்ந்து செல்லும் பஞ்சுக் குவியல் போன்ற மேகங்களையும் பச்சை மலைகளின் வரை கோட்டையும், பசுமைத் தரைகளையும்,

சற்றே வாடியுள்ள மலர்களையும், நேற்றைய நினைவு களிலிருந்து விளைந்த சொல்லொன்றையும் கையாளாமல் நோக்கும் பொழுது மனம் முழுமையான அமைதியுடனும் மௌனமாகவும் இருக்கிறது. எண்ணத்தினால் இடர்ப்படா மல் காண்பானொழிந்த நிலையில், யாவுமே ஒன்றாகிய ஒருமைப்பாடு இருக்கிறது. நாம் மலரோடும் மேகங்களோ டும் விரிந்த மலைகளோடும் ஒன்றவில்லை - நம் இருப்பு என்பதையே அறியாத ஓர் உணர்வு, அவ்வுணர்வில் உமக்கும், எமக்கும், மற்றவைக்கும் இடைவெளியுமில்லை. மளிகையுடன் திரும்பும் அப்பெண்மணியையும், அந்தக் கறுப்பு அல்ஸேஷியன் நாயையும், பந்து விளையாடிக் கொண்டிருக்கும் அவ்விரு குழந்தைகளையும் சொல்லின் உதவி இல்லாமலும், அளவுகோலற்றும், எவ்வித தொடர்பும் இல்லாமலும் நோக்கினால் அப்பொழுது உமக்கும் மற்றவர்க்கும் உள்ள பிரிவு முடிவுறும். எந்நிலையில் சொல்லும் எண்ணமும் இல்லையோ, நான் - நானன்று என்ற இரட்டை நிலையில்லையோ, அதுதான் எல்லையற்று விரிந்த மனத்தின் நிலையாகும். இது மனத்தோற்றமல்ல, கற்பனையின் சிறகுகள் கொண்டு பறப்பதுமன்று, இறையுணர்வை விழையும் வேட்கையு மன்று. மலரைச் சுற்றி வரும் வண்டு, சைக்கிளில் செல்லும் சிறுமி, வண்ணம் பூசவேண்டி ஏணிமேல் ஏறும் அம்மனிதன், இவையாவும் எவ்வாறு உண்மையோ, அம்மனத்தின் நிலையும் அவ்வாறே உண்மை. ஏனெனில், பிரிவுத்தன்மையுள்ள மனிதனின் முரண்பாடுகள் முற்றிலும் முடிவடைந்தன. காண்பான் ஒழிந்து நீர் நோக்குகிறீர். இறந்தகால சொல்லின் மதிப்பைக் கொண்டு நோக்குவ தில்லை. அன்பின் நோக்கும், எண்ணதின் நோக்கும் வெவ்வேறானவை. அன்பு, எண்ணம் எங்கு அழைத்து செல்ல முடியாதோ, அந்தத் திசைக்கு அழைத்துச் செல்லும். மற்றொன்றோ துயரத்திற்கும், பிரிவுக்கும், முரண்பாட்டுக் கும் அழைத்துச் செல்லும். இந்தத் துயரத்திலிருந்து அன்பை அடைய முடியாது. இந்த இடைவெளி எண்ணத்தினால்

ஏற்படுகிறது. எண்ணம் எட்டி எட்டி அடி வைத்தாலும், அதை அடைய முடியாது.

நாம் அப்பண்ணை வீடுகள் பக்கமாகவும், புல்வெளியின் வழியாகவும், ரயில்பாதை அருகிலுமாக திரும்பி வரும் பொழுது, நேற்று என்பது முடிவடைந்ததைப் பார்த்தோம்; எண்ணம் முடிவடைந்தது – ஆகவே வாழ்வின் தொடக்கம்.

''என்னால் ஏன் நேர்மையாக இருக்க முடியவில்லை?'' என்று அவள் கேட்டாள். ''இயல்பாகவே நான் நேர்மையற்றவள். அவ்வாறு இருக்கவேண்டும் என்பதால் அன்று. ஆனால் நேர்மை என்னிடமிருந்து இழிந்துவிடு கிறது. நான் பேசுவது ஒன்று, எண்ணுவது மற்றொன்று. பொதுவாக பொழுது போக்குவதற்காக, ஒன்றுமில்லாத வற்றைப் பற்றி நாகரிகமாக பேசுவதைக் கூறவில்லை. நான் ஆழ்ந்து பேசுகையிலும், நான் சொல்வதும் செய்வதும் நேர்மையற்றவையாக இருக்கின்றன. என் கணவரிடமும் இதைக் காண்கிறேன். அவரும் சொல்வதொன்று, செய்வதொன்று. வாக்குறுதியளிக்கும் பொழுது அவர் கூறுவதும், அவர் உள்ளத்தில் உள்ளதும் வெவ்வேறானவை. இதை நான் சுட்டிக்காண்பித்தால் அவருக்கு எரிச்சல் உண்டாகிறது. நாங்கள் இருவருமே பலவற்றில் நேர்மை யற்று இருக்கிறோம். அன்றொரு நாள் எங்கள் மதிப்பிற்குரிய ஒருவரிடம் வாக்குறுதியளித்தார். அவர் அதை நம்பிச் சென்றார். என் கணவர் தான் சொன்னபடி நடக்கவில்லை. அதை மறுக்க பலகாரணங்களைக் காட்டி தான் செய்ததே சரி என்றும், மற்றவர் கூறுவது பிழை என்றும் கூறினார். நாம், நமக்குள்ளும் மற்றவரிடமும் விளையாடும் இவ்விளை யாட்டை நீர் அறிந்ததே. இது சமூக நெறிக்கும் தொடர்புக் கும் உட்பட்டதே! சிலமுறை இது தீவிரமடைந்து மிகவும் அருவருப்பானதாகவும், மனத்தை கலங்கச் செய்வதாகவும் ஆகிறது. இது என் கணவரைப்பற்றி மட்டுமல்ல, நானும், என் போன்ற மற்றவர்களும், சொல்லொன்று செயலொன்று என்று இவ்வாறாக இருப்பது கவலைக்குரியது. தான்

அளிக்கும் வாக்குறுதி எத்தன்மையது என்று தெரிந்து கொண்டே, அரசியல்வாதி வாக்குறுதி அளிக்கிறான். அவன் இம்மண்ணின் மீது சொர்க்கத்தையே கொண்டு வருவதாக கூறி, (அவன் உண்டாக்குவதோ உண்மையில் நரகமே), அவ்வாக்குறுதியை நிறைவேற்ற முடியாத போது, தன் கைக்கடங்காத பல காரணங்களையும் எடுத்துக் காட்டுகிறான். ஏன் இவ்வாறு அடிப்படையிலேயே நேர்மையின்மை நம்மிடம் இருக்கிறது?''

நேர்மை என்றால் என்ன? ஒரு கொள்கை, எடுத்துக் காட்டு, விதி வகுக்கப்பட்ட கோட்பாடு இவையிருக்கையில் நேர்மை என்பது இருக்க முடியுமா – அதாவது தெளிவுற நோக்குதல் – உள்ளத்தை உள்ளவாறு நோக்குதல், இவையிருக்க முடியுமா? கலங்கும் போது நேர்முகத் தெளிவு உண்டா? அழகு என்பது இவ்வாறு 'இருக்க' வேண்டும். இதுவே 'நேர்மை' என்கிற பொழுது உண்மை அழகு உள்ளதா? 'இருப்பது' அன்றி இவ்வாறு 'இருக்க வேண்டும்' என்ற பிரிவு இருக்கும் போது அங்கு நேர்மை இருக்குமா? அன்றி, கௌரவமான கட்டிடம் என்ற நேர்மையற்ற நிலையே அங்கிருப்பதா? உண்மையில் 'இருப்பதற்'கும், 'இவ்வாறு இருக்க வேண்டும்' என்ற இரு நிலைக்கிடையே தான் நாம் வளர்ந்து வருகிறோம். இந்த இடைவெளியில் – அதாவது; வெளி, காலம் என்ற இடைவெளியில்தான் நம்முடைய கல்வி, நம் சமூக நெறிகள், நம் இடர்கள் யாவையும். இவற்றின் மீது மனத்தடுமாற்றத்துடன் ஒன்றின் மீது நம்பிக்கை மற்றொன்றின் மேல் அச்சம் என்று வெவ்வேறான உணர்வுடன் நோக்குகிறோம். சமூகம் அழைக்கும் 'கல்வி' என்பதில் நேர்மையும், நாணயமும் உண்மையாக இருக்க முடியுமா? நாம் நேர்மையற்றது என்ற சொல்லுக்கு நாம் பொருள் கூறுவதையும், 'இருப்பது' என்பதையும் ஒன்றுடன் ஒன்று ஒப்பிட்டு பொருள் தருகிறோம். நாம் உள்ளொன்று வைத்து புறம் ஒன்று கூறுவது, ஒருக்கால் ஒருவனுக்கு தற்காலிகமாக

உறுதியளிப்பதாகவும், அல்லது உண்மையைச் சொல்ல தயக்கமாகவும், கூச்சமாகவும் இருப்பதாலுமா? ஆக நடுக்கமும் அச்சமுமே இந்நேர்மையற்றதின் காரணம் ஆகக் கூடும். நாம் வெற்றியை விழைந்தும், நம் குறிக்கோளையடைய வேண்டி ஒருவரை நயம்படுத்தியும், வஞ்சகமாகப் பேசியும் ஏமாற்றுகிறோம். நாம் அடைந்த பதவியையும், அதிகாரத்தையும் காப்பாற்ற வேண்டி அவ்வாறு செய்தல் கூடும். எல்லாவிதத் தவிர்ப்பும், காப்பும், நேர்மையற்றவை. நேர்மையாக இருக்க வேண்டினால், நம்மைப் பற்றி ஒருவித காட்சிப் பிழைகளும் இருத்தலாகாது. பொய்த் தோற்றத்தின் சிறு அணுவும் அணுகலாகாது. அத்தோற்றத்தின் விதையே வேட்கையும் இன்பமும்.

''வேட்கை தருவிப்பது பொய்த் தோற்றம் என்றா கூறுகிறீர்? நான் ஒரு அழகான வீடு வேண்டும் என்றபொழுது அதில் பொய்த் தோற்றம் ஒன்றுமில்லையே. என் கணவருக்கு உயர்ந்த பதவி வேண்டும் என்றபோது அதில் பொய்த் தோற்றம் ஒன்றையும் காணவில்லையே!''

வேண்டும் என்பதிலேயே எப்பொழுதும் ஒன்றை விட நல்லது, பெரியது, அதிகமானது என்ற பொருள் இருக்கிறது. வேட்கையில் அளவும், ஒப்பிடுதலும் உண்டு. இதுவே காட்சிப் பிழையின் வேர். நன்மை என்பதில் ஒன்றைவிட ஒன்று நல்லது என்ற பொருள் கிடையாது. நாம் வாழ்நாள் முழுவதும் ஒன்றைக் காட்டிலும் நல்லது, நல்ல குளியலறை, முன்பைவிட உயர்பதவி, உயர்ந்த கடவுள் என்று இவற்றையே பின்தொடர்கிறோம். 'உள்ளது' என்பதில் உள்ள அதிருப்தி அதில் மாறுதலை உண்டாக்குகிறது. அம்மாறுதலும் அந்த அதிருப்தியின் தொடர்ச்சியே. இச் சீர்த்திருத்தம் என்பது மாறுதலாகாது. இத்தகைய இடைவிடாச் சீர்திருத்தமே நம்மிடையிலும், சமூக நெறியிலும் நேர்மையின்மையை வளர்க்கிறது.

''நான் உங்களை புரிந்து கொள்கிறேனா என்று எனக்குத் தெரியவில்லை. உங்களைப் பின் தொடர வேண்டுமா என்பதும் எனக்குத் தெரியவில்லை'' என்று புன்னகையுடன் கூறினாள். ''சொல்லளவில் நான் உங்களை புரிந்து கொண்ட போதிலும், நீர் எங்கு அழைத்துச் செல்கிறீர் என்பது தெரியவில்லை? இது எனக்கு அச்சத்தை தருகிறது. நீர் கூறும்படி வாழ்ந்தால் ஒருக்கால் என்கணவர் தன் வேலையை இழக்கக்கூடும். ஏனெனில், வியாபார உலகில் நேர்மையின்மை என்பது வழக்கமாக இருக்கிறது. எங்கள் குழந்தைகளும் உலகில் வாழ்வதற்காக போட்டி போடவும், போராடவும் தயாராக்கப்பட்டிருக்கின்றனர். நீர் கூறுவதைக் கேட்கையில் நாம் அவர்களை இந்த நேர்மையற்ற முறையில் பழக்கி வருகிறோம் என்பது கண்கூடாக இல்லாவிட்டாலும் நுட்பமான கபடமுள்ள வழிகளில் பழக்கி விடுகிறோம் என்ற போது அவர்கள் பொருட்டு அச்சம் ஏற்படுகிறது. 'இவ்வாறு நேர்மையற்ற, வன்முறையுள்ள உலகை அவர்கள் எவ்வாறு நோக்குவர்? அதற்காக அவர்கள் வன்முறையும் நேர்மையற்றும் அல்லவா இருக்க வேண்டும். நான் சொல்வது ப்யங்கரமாக இருப்பினும் அது உண்மையே, இப்பொழுதுதான் என் நேர்மையற்ற தன்மையை உணர தொடங்குகிறேன்.'

ஒரு விதக் கோட்பாடும், குறிக்கோளுமற்று வாழ்வது ஒவ்வொரு நொடியையும் உள்ளவாறே நோக்குவதாகும். உள்ளத்தை உள்ளபடி காண்பதே – 'இருப்பது' என்பதுடன் முழு தொடர்பு கொள்வதாகும். சொற்கள், பழைய தொடர்பு, நினைவு இவைகளற்று நேருக்கு நேர் அதன் தீண்டுதலுக்குட்படுதலே நேர்மையாக இருத்தல். நாம் பொய்கூறியுள்ளோம் என்பதற்கு ஒருவித காரணமும் காட்டாமல் உண்மையை நோக்குவதே – நேர்மையாகும். இந்நேர்மையே பேரழகின் இருப்பு. இது ஒருவரையும் புண்படுத்துவதில்லை. ஒருவர் தன்னை பொய்யன் என்று கூறுகையில் உண்மையிருப்பை ஒப்புக்கொள்வதாகும்.

தவறை தவறென்று ஒப்புக்கொள்வதாகும். ஆனால் அதற்காகக் காரணம் காட்டுவதும் கட்டுக்கதைகள் புனைவதும், உண்மையென வாதிடுவதும் நேர்மையற்றவை. இதில் தன்னிரங்கல் இருக்கிறது. தன்னிரங்கல் என்பது நேர்மையற்ற நிலையின் இருட்டு. அதற்காக நாம் நம்மையே கண்டிப்பது என்பதாகாது. விழிப்புடன் இருக்க வேண்டும் இதன் பொருள் பரிவு கொள், கவனி என்பதே.

''நான் இங்கு வருகையில் இவற்றை எதிர்பார்க்கவில்லை. என் நேர்மையற்ற தன்மையை கண்டு வெட்கப்பட்டேன். அதை விலக்க என்ன செய்ய வேண்டும் என்று தெரியவில்லை. அதைப்பற்றி ஒன்றும் செய்ய இயலாமையைக் கண்டு நெஞ்சில் குற்றமுள்ளவளாக ஆனேன். அக்குற்றவாளித் தன்மையை எதிர்ப்பதிலும், தவிர்ப்பதிலும் பல சிக்கல்கள் உண்டாகின்றன. நான் இப்பொழுது நீர் கூறியவற்றை தீர ஆராய வேண்டும்.''

நான் ஒரு குறிப்பு தெரிவிக்கிறேன். இதைப் பற்றி யோசனை ஒன்றும் செய்யாதீர். இப்பொழுது உள்ளதை உள்ளவாறே நோக்குங்கள். அவ்வாறு காண்பதில் புதியது ஒன்று விளையக்கூடும். திரும்பவும் அதைப்பற்றி எண்ணினால் அப்பொழுது நீர் அந்த பழைய பொறியிலே மீண்டும் அடைபடுவீர்.



## ஐரோப்பா - 20

விலங்குகளுக்கு தற்காப்பின் பொருட்டு, ஒன்றை பின்பற்றவும், கீழ்ப்படியவும் உள்ளுணர்வு இயல்பாகவே உள்ளது. ஆனால், அதே உணர்வு மனிதனுக்கு அபாயத்தை விளைவிக்கும். கீழ்படிதலும் பின்பற்றலும் தனியொருவனிடத்தில் செயற்கை செயலாகின்றன. அவ்வாறு இணங்குவதும், மனிதன் தானே ஏற்படுத்திய சமூக நெறிகளுடன்தான்! விடுதலையின்றி அறிவுக்கூர்மை செயல்படாது. கீழ்ப்படிதலின் தன்மையை நன்றாகப் புரிந்து கொண்டு, அதைச் செயல்படுத்துவதே விடுதலையைக் கொடுக்கும். விடுதலை என்றால் மனம் போன போக்கில் நடப்பதாகாது. பெரிய சிக்கலுடைய சமூகத்தில் அவ்வாறு நடக்கவும் முடியாது. ஆகவேதான், தனிமனிதனுக்கும் சமூகத்திற்கும் உள்ள முரண்பாடு, பலருக்கும் ஒருவருக்கும் மிடையே முரண்பாடு.

பலநாட்களாக வெப்பம் திணற வைத்தது. அந்த உயரத்தில் கதிரவன் கிரணங்கள் நம்முடைய உடலின் ஒவ்வொரு துளையையும் ஊடுருவி நம்மை மயங்கச் செய்தது. பனி வேகமாக உருகியது. ஓடையின் நீர் பழுப்பாக மாறியது. பெரிய நீர் விழ்ச்சியும் தாரைதாரையாகப் பிரிந்து பெருகிற்று. அது ஒரு கிலோமீட்டர் அருகில் உள்ள பெரிய பனிப்பாறையிலிருந்து உருகி வந்த நீர். இது என்றுமே வற்றா ஓடை.

அன்று மாலையில், சூழ்நிலை மாறியது. மலை மீது மேகங்கள் திரண்டன. பெருத்த இடி, மின்னலுடன் கூடிய

மழை பெய்யத் துவங்கியது. அம்மழையின் மணத்தை நுகர முடிந்தது.

ஆற்றை நோக்கிய அவ்வறையில் சுமார் மூன்று நான்கு பேர்கள் இருந்தனர். அவர்கள் உலகின் பல நாடுகளிலிருந்து வந்தபோதிலும் அவர்களுடைய கேள்வி ஒன்றேதான். அவர்கள் நிலைமையை விட அக்கேள்வி முக்கியம் வாய்ந்ததன்று. அவர்கள் மனநிலை அக்கேள்வியைக் காட்டிலும் அதிகப் பொருளைத் தெரிவித்தது. பல அறைகளைக் கொண்ட வீட்டின் வாயிலுக்குள் நுழைவதே போன்றிருந்தது அக்கேள்வி. அவர்கள் ஆரோக்கியம் குறைந்தவர்கள், மனத்தில் மகிழ்ச்சியற்றவர்கள். கல்வி யுடையவர்கள். அதன் பொருள் எதுவாயினும் சரி; பல மொழிகளைப் பேசும் திறமையுள்ளவர்கள். தோற்றத்தில் சீரற்ற நிலைமை நன்கு தெரிந்தது.

''ஏன் லாஹிரிப் பொருள்களை உட்கொள்ளக்கூடாது? நீர் அதற்கு எதிர்ப்பு தெரிவிப்பவராக காண்கிறீர். உம்முடைய சில சிறந்த நண்பர்கள் அதை உட்கொண்டிருக்கின்றனர், அதைப்பற்றி எழுதியுமிருக்கிறார்கள், மற்றவரையும் உட்கொள்ளுமாறு தூண்டியிருக்கிறார்கள். அந்நிலையில் எளிய மலரின் ஆழ்ந்த தன்மையை துய்த்தும் இருக்கின்றனர். நாங்களும் லாஹிரிப் பொருள்களை உட்கொண்டிருக் கிறோம், ஆனால் நீர் ஏன் அத்தகைய ரசாயனப் பொருளி னால் உண்டாகும் அனுபவத்தை எதிர்க்கிறீர்? என கேட்க விரும்புகிறோம். ரசாயன பொருட்களை சாப்பிடுவதால் 'உண்மை இருப்பை' துய்ப்பதற்கு ஒப்பான ஒரு நிலையை அது எமக்கு கொடுக்கக்கூடும். ஏனெனில் நம் உடலும், ஒரு உயிர் - ரசாயன சேர்க்கைத்தானே? நீர் லாஹிரிப் பொருட் களை உட்கொண்டதில்லையன்றோ? அவ்வாறிருக்க நீர் அந்த அனுபவமில்லாமல், அவற்றை தடை செய்வது ஏன்?''

இல்லை - நான் லாஹிரிப் பொருளை உட்கொண்ட தில்லை. மதிமயக்கமற்ற நிலைமையை புரிந்து கொள்ள

மதுவருந்த வேண்டுமா என்ன? நோயற்ற வாழ்க்கையறிய வேண்டுமானால் நோயில் படுத்தால்தான் தெரியுமா? லாஹிரிப் பொருட்களை உபயோகிப்பதற்கு, பல காரணங்கள் இருக்கின்றன. அதனால் இந்தக் கேள்வியை முழுமையாக உணர நாம் கவனத்துடன் அதில் நுழைவோம். மனத்தை விரிக்கச் செய்ய கூடியதும் பெரிய காட்சிகளையும், ஆழ்ந்த தோற்றங்களையும் தருவதாக வாக்குறுதி அளிக்கும் லாஹிரிப் பொருள்களை உட்கொள்வதின் தேவை என்ன? நீர் காணும் காட்சி மங்கியிருப்பதால்தான் - அத்தேவை ஏற்படுகிறது. தெளிவு மங்கி வாழ்க்கையின் ஆழம் குறைந்துபோய், தரமும் குறைந்து பொருளற்றதாகிறது. இந்த இரண்டாந்தர நிலையை கடக்கவே மனிதன் அம்மருந்துகளை உட்கொள்கிறான்.

அறிவுக் கூர்மையுள்ளவர் இப்பொருள்களை வாழ்விற்கு ஒரு புதிய வழியாக்கியுள்ளனர். உலகம் முழுவதும், இந்த சீர்குலைந்த நிலை, நரம்பு தளர்ந்து பித்தம் பிடித்ததே போன்ற நிலை, முரண்பாடுகள், துன்பம் தோய்ந்த வாழ்க்கை, இவற்றையே பார்க்கிறோம். மனிதனின் ஆதிக்கம் செலுத்தும் தன்மையையும் விலங்குத் தன்மையையும் தந்நலத்தையும் எம்மதமும், நீதியும், சமூக நெறியும் அடக்கியாள முடியாது என்பதை உணர்கிறோம்.

மனிதனிடம் அராஜகம் உள்ளது. அதே நேரத்தில் விஞ்ஞான திறமையும் இருக்கிறது. இந்த ஏற்றத்தாழ்வு உலகில் சூறாவளியை ஏற்படுத்துகிறது. முன்னேற்றமுள்ள தொழில் - அறிவுக்கும் மனிதனின் கொடுமைக்கும் உள்ள இணைக்க முடியாத இடைவெளி, உலகில் துன்பத்தையும் இடரையும் விளைவிக்கின்றது. இது கண்கூடு. அறிவுக் கூர்மையுள்ளவன், வேதாந்தம், சென், கம்யூனிசக் கொள்கைகள் இவைகளில் விளையாடித்திளைத்து, மனிதனின் இடருக்கோர் முடிவும் காண முடியாமல், இந்த ரசாயன மருந்துகளை பொன்னெனப் போற்றி உட்கொள்கிறான். அதனால் தீவிரமுள்ள மன ஆரோக்கியமும்,

இசைவும் உண்டாகும் என எண்ணுகின்றனர். பத்தரை மாற்றுத் தங்கம் என எண்ணும் ரசாயன பொருளின் கண்டுபிடிப்பு நம்முடைய சிக்கல்கள் யாவினுக்கும் ஒரு முழுமையான மறுமொழியென்று விஞ்ஞானிகளிடமிருந்து எதிர்பார்க்கப்படுகிறது. அவர்களும் அதைக் கண்டுபிடிக்கக் கூடும். சென்ற நாட்களில் கம்யூனிசமும் பாசிஸமும் எவ்வாறு உலகை காப்பாற்றும் என்று வாதித்ததைப் போலவே, எழுத்தாளரும், அறிவாளிகளும் அத்தகைய ரசாயன மருந்து, போர், சண்டை இவற்றை நிறுத்தும் என்று வாது செய்யவும் கூடும்.

விஞ்ஞான உலகில் புதியவற்றைக் கண்டுபிடிக்கக் கூடிய சிறப்புத் திறமைகள் பெற்ற மனம், அத்தகைய திறன் பெற்றுள்ள போதிலும், சிறிய அறிவுள்ளது - குறுகியது, வெறி கொண்டதாகும். ஆகவே கட்டாயமாக தன் சிறிய குறுகிய வழியிலே தொடர்ந்து செல்லும். மிகப் பெரிய மாற்றத்தைத் தரும் அனுபவம் இம்மருந்துகள் வழியாக உமக்குக் கிட்டலாம். ஆனால், மனிதனின் வன்முறையும், ஆதிக்கமும், துயரும் துடைக்கப்படுமா? இந்த ரசாயன பொருள்கள் மிகச் சிக்கலான பலகூறுபட்ட மனிதனுடைய உறவுமுறைகளைத் தீர்க்க முடியும் என்றால் இதைப் பற்றி மேலே பேசுவதற்கு ஒன்றுமில்லை. அவ்வாறானால், உறவுமுறை, மெய்யறிவின் வேட்கை, துயரத்திற்கோர் முடிவு, இவையாவும் ஒரு மேலெழுந்தவாரியான கேள்விகளேயாகும். அதன் மறுமொழி மிக எளிது. ஒரு சிட்டிகை ரசாயனப் பொருளே தேவை!

ஐயமற இது தவறான வழியேயாகும் அன்றோ? இப்பொருள்கள் ஏறக்குறைய உண்மைக்கு ஒப்பான நிலையை செயற்கையாக உண்டாக்கும் என்று கூறுகின்றனர். ஆகவே, அது நம்பிக்கையையும், உற்சாகத்தையும் தூண்டக்கூடும். நிழல் என்பது உண்மையன்று. எந்த சின்னமும் உண்மையாகாது. இவ்வுலகில் சின்னத்தையே போற்றி வணங்குவதைக் காண்கிறோம் - உண்மையை

அல்ல. அம்மருந்துகளின் விளைவு உண்மைக்கு ஒப்பானது என்பது தவறான வாதம் அன்றோ?

எந்தச் சுறுசுறுப்பை அளிக்கும் மாத்திரையும் அது தங்கமாயினும் மனிதனுடைய சிக்கல்களை எந்நாளும் தீர்க்காது. மனிதனுடைய உள்ளம், மனம் இவற்றின் அடிப்படை வேர்மட்டத்திலேயே புரட்சி ஏற்பட்டால்தான் சிக்கல்களுக்கு முடிவு ஏற்படும். இப்புரட்சி கோருவது: கடுமையான, இடைவிடாத வேலையையும், காண்பது, கேட்பது, உயர்ந்த உணர்வுடன் இருப்பது என்பவற்றை யுமே!

மிக உயர்ந்த உணர்வே உயர் அறிவாகும். மனிதனால் உண்டாக்கிய எம்மருந்தும் இந்த அறிவைத் தராது. அறிவின்றி அன்பில்லை. அன்பு என்பது உறவு. இவ்வன் பின்றி மனிதனிடம் ஓர் ஒட்டமுள்ள சமநிலை இல்லை. இந்த அன்பை – குருக்கள், அவர்கள் வணங்கும் கடவுள்கள், தத்துவவாதிகள் – இவர்களாலும் அன்றிப் பொன்னென ஒளிரும் செயற்கை மருந்துகளாலும் தருதல் இயலாது.





திரு. ஜே. கிருஷ்ணமூர்த்தி பல நாடுகளுக்குச் சென்று உரைகள் பல நிகழ்த்தியுள்ளார். அவற்றைக் கேட்க பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடுவது வழக்கம். தனிப்பட்ட முறையிலும் பேட்டிகள் வழியாகவும் அவர் பலரை சந்தித்தார்.

1970இல் வெளிவந்த 'ஒரே ஒரு புரட்சி' என்ற புத்தகம் இந்தியா, அமெரிக்கா, ஐரோப்பா நாடுகளில் அவர் அளித்த பேட்டிகளின் தொகுப்பாகும். தினசரி சந்திப்புக்களைப் பற்றியும், தியானம், தன்னைச் சுற்றியுள்ள இயற்கை இவற்றை தவறாது குறித்து வந்தார். இப்புத்தகம் அவர் மக்களுடன் நேரடித் தொடர்பு கொள்வது போல் அமைந்துள்ளது. படிப்பவர் உள்ளத்தில் ஒரே மனம் படைத்த இருவர் ஒருமிக்க உறவாடுவது போன்ற உணர்வு ஏற்படுவது இதன் தனிச்சிறப்பு.

"வாழ்க்கையின் சிக்கல்கள் முழுவதும் ஒரே வேரிலிருந்து விளைந்தவையாகும்," என்பதே அவர் கூறுவது. "அவற்றின் விடையும் ஒன்றே." அந்த விடையைத் தாமாகவே தெளிவாகவும், எளிதாகவும் காணும்படி செய்வதே இவர் நமக்களிக்கும் பேருதவி. வாழ்க்கையை முழுமையாக நோக்கும் அந்நொடியிலேயே விடையின் கண்டுபிடிப்பும் அமைகிறது. வாழ்வில் மாற்றங்கள் தேவைதான். ஆனால் ஒவ்வொரு உள்ளத்திலும் மாற்றம் உண்டாக வேண்டும். இதுவே அவர் கண்ட 'ஒரே ஒரு புரட்சி'.

**Philosophy** **Price: Rs 80/-**